உ
சிவ சிவ

## வித்துவான் தேர்வு வினவிடை



**எண் : 4**



# நன்னூல்

## சிவஞானமுனிவர் விருத்தியுரை



ஆக்கியோன் :
மதுரகவி,
திருமுறைச்செம்மல், வித்துவான்,
**தா. ம. வெள்ளைவாரணம்,**
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி,
திருப்பனந்தாள்.

 1969 ] விலை ரூ. 2—00

சிவ சிவ

# திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
# ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
# அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
# மனமுவந்து நிறுவிய தருமங்கள்

| எண் | தரும விபரம் | | முதற்பொருள் ரூபாய் |
|---|---|---|---|
| 1. | திருமுறை வளர்ச்சிக்கு | 43 தருமங்கள் | ... 12,67,900 |
| 2. | கல்வி அபிவிருத்திக்கு | 75 ,, | ... 38,21,303 |
| 3. | சைவ சித்தாந்தம் பரப்ப | 7 ,, | ... 1,56,000 |
| 4. | அன்னதானம் செய்ய | 164 ,, | ... 26,35,000 |
| 5. | வைத்தியம் செய்ய | 6 ,, | ... 4,23,500 |
| 6. | பொது தருமங்கள் — ஸ்நான கட்டம், அகதிகள் நன்கொடை, தண்ணீர்ப் பந்தல், ஒளிவளர் விளக்குகள், பசுப்பரிசு, கோ சம்வர்த்தனம், படிக்காசு நிதி, கல்லெழுத்து முதலியன | 124 தருமங்கள் | ... 14,16,500 |
| | ஆகத் தருமங்கள் 419-க்கு | | ... 97,20,293 |

# முன்னுரை

தமிழன்பர்களே! மாணவர்களே!!

நன்கு கற்றுத் திறம்படைத்த மாணவர்களாய் இருப்பவர்களில் சிலர் தேர்வு எழுதுங்கால் சிறந்த தகுதி பெருமல் போய்விடுகின்ருர்கள் என்பது ஏன்? 'வினக்கள் எவ்வெவ்வாறு வரும்; விடைகள் எவ்வெவ்வாறு எழுத வேண்டும்' என்பதை அறியாமல் இருப்பதே இதற்குக் காரணம். பல பகுதிகளையும் நன்கு கற்று மனப்பாடம் செய்திருக்கும் திறத்தால், வினவிற்கு உரிய பகுதியை மட்டுமேயன்றி வேண்டாத பகுதிகளையும் ஒன்றுவிடாமல் சிலர் எழுதிவிடுகின்ருர்கள் மற்றும் பலர் தம் பாடப் பகுதியை மட்டுமே கற்றறிந்திருப்பதால் ஆய்வுரைகளாகக் கேட்கப்படும் வினக்களுக்கு விடையளிக்க முடியாமல் நின்று விடுகின்ருர்கள்.

எனவே, நான் கல்லூரியில் பதினெட்டு ஆண்டுகளாகப் பாடம் சொல்லிய பழக்க அறிவினைக்கொண்டும், மாணவர்களின் நடைமுறையை நன்கு அறிந்தும், வினவிற்கேற்ப விடையளிக்கும் திறம் மாணவர்களுக்குப் பெருகவேண்டும் என்னும் நோக்கத்துடன், வித்துவான் தேர்வு வினவிடை

- எண் : 1 ( தொல். எழுத்து. இளம்பூரணம் )
- எண் : 1A ( தொல். எழுத்து. நச்சினர்க்கினியம் )
- எண் : 2 ( தொல். சொல். சேனவரையம் )
- எண் : 3 ( தொல். பொருள். இளம்பூரணம் )
- எண் : 3A ( தொல். பொருள். நச். பேரா. )
- எண் : 4 ( நன்னூல் சிவஞானமுனிவர் விருத்தி )
- எண் : 5 ( அகப்பொருள் விளக்கம் )
- எண் : 6 ( புறப்பொருள் வெண்பாமாலை )
- எண் : 7 ( யாப்பருங்கலக்காரிகை )
- எண் : 8 ( தண்டியலங்காரம் )

என்பன வெளியிட்டுள்ளேன். இப்போது எண் : 4 என்ற இந்நூல் 3-ம் பதிப்பாக வெளிவருகிறது.

இந் நூலில் 232 வினுவிடைகள் கொடுக்கப் பட்டுள்ளன மாணவர்கள், 'இவைகளைத் தவிர வேறு வினக்கள் இல்லை' என்பதாக எண்ணிவிடக்கூடாது. பெரும்பாலும் இன்றியமையாத வினக்களையும், பல்கலைக் கழகத் தேர்வுகளில் வினவப்பெற்ற வினக்களையும் குறிப் பிட்டிருக்கிறேன். (ஷை தேர்வு வினக்களின் இறுதியில் அவ்வினு வினவப்பெற்ற ஆண்டு, பிறைக்குறியுள் கொடுக் கப்பட்டுள்ளது.) மாணவர்கள் இவ்வினுவிடை நூலைக் கற்றறிவதோடு பிற வினு விடைகளையும் கற்றறியக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள்.

இந்நூலைச் செம்மையான முறையில், குறிப்பிட்ட காலத்தில் அச்சிட்டு உதவிய கும்பகோணம் ஸ்ரீ மஹாபாரதம் அச்சகத்தின் உரிமையாளர் ஸ்ரீ S. சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்கு எனது நன்றி.

இங்ஙனம் நூல்களை வெளியிடும் அளவுக்கு என்னை ஆளாக்கிவிட்ட எனது ஆசிரியப் பெருமகனுகிய சிவநெறிச் செல்வர், கல்வெட்டாராய்ச்சிப்புலவர், பேராசிரியர் வித்துவான் திரு. K. M. வேங்கடராமையா M A., B.O L. (செந்தமிழ்க் கல்லூரி பிரின்ஸ்பால்) அவர்களுக்கு என் னுடைய நன்றி என்றென்றும் உரியது.

மன்னு உலகத்து மன்னிய புகழ்பெற்று விளங்கும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவடித் தாமரைகளுக்கு அடியேனது வணக்கத்தையும் நன்றியையும் திசைநோக்கி வணங்கித் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருப்பனந்தாள், 14—1—1969.

இங்ஙனம்,
தா. ம. வெள்ளைவாரணம்.




உ

சிவ சிவ

# வித்துவான் தேர்வு வினுவிடை

## எண் : 4

## நன்னூல் – சிவஞான முனிவர் விருத்தி

—x—

**1. நன்னூலைச் செய்த பவணந்தி முனிவரைப் பற்றியும், நன்னூலின் உரையாசிரியர்களைப் பற்றியும் சிறு குறிப்பு வரைக.**

நன்னூலைச் செய்த பவணந்தி முனிவர் தொண்டை மண்டலத்தைச் சார்ந்த சனகாபுரத்தில் வாழ்ந்தவர்; சன்மதி முனிவரின் மாணுக்கர்; சமண சமயத்தவர்; அமராபரணன் சீயகங்கனின் விருப்பப்படி நன்னூலை இயற்றியவர். இச்சீயகங்கன் கி. பி. 1178 முதல் 1218 வரை ஆட்சிசெய்த மூன்ரும் குலோத்துங்க சோழனுக்கு அடங்கிய சிற்றரசன். ஆதலின், பவணந்தி முனிவரின் காலம் கி. பி. 12, 13ம் நூற்ருண்டு என்பது தேற்றம்.

மற்றும், 'பவணந்தி முனிவர், அகத்தியம், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும், பெரும்பாலும் இளம்பூரணர் உரையையும் பின்பற்றி நூல் செய்தார்' எனவும், 'நன்னூல் ஒரு காலத்தில் எழுத்துச் சொற்பொருள் யாப்பணி என்ற ஐந்திலக்கணமும் உடையதாக இருந்தது' எனவும் சான்ருேர் கூறுவர்.

நன்னூலுக்கு மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர், சிவஞான முனிவர், இராமாநுச கவிராயர், ஆறுமுக நாவலர், சடகோப ராமாநுசாச்சாரியார் எனப் பலர் உரை வகுத்துள்ளனர்.

மயிலைநாதர்: இவரே நன்னூலுக்கு முதன் முதலாக உரை வகுத்தவராவார். இவர் சைனர்; பத்துப் பாட்டு முதலான சங்க இலக்கியங்களையும் அகத்தியம் முதலான இலக்கணங்களையும் நன்கு கற்றவர். மயிலைநாதர் என்ற பெயருடைமையால் இவர் மயிலாப்பூரில் வசித்தவராதல் கூடும். இவரது உரை இடத்திற்கேற்பச் சுருங்கியும் விரிந்தும் வினவிடையாகவும், சொன்னயம், பொருணயம் பெற்றும் விளங்குகிறது. இவரது காலம் கி. பி. 13–14ம் நூற்றாண்டாகல் வேண்டும்.

சங்கரநமச்சிவாயர்: இவர் திருநெல்வேலியில் வாழ்ந்தவர்; வேளாள மரபினர்; சைவ சமயத்தவர்; இலக்கணக்கொத்து எழுதிய சாமிநாத தேசிகரிடம் கல்வி பயின்றவர்; ஊற்றுமலை சமீன்தாராகிய மருதப்ப தேவன் என்பவனால் ஆதரிக்கப்பட்டவர்; அம் மருதப்ப தேவனின் வேண்டுகோளின்படி நன்னூலுக்கு உரை எழுதியவர். இவரது உரை மயிலைநாதருக்குப்பின் எழுந்ததால் அக் காலத்தில் புத்துரை என்று வழங்கப் பட்டது. இவரது காலம் 17ம் நூற்றாண்டு.

சிவஞான முனிவர்: இவர் திருநெல்வேலியை அடுத்த விக்கிரமசிங்கபுரத்தில் பிறந்தவர்; திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்து துறவு பூண்டவர்; வடமொழியும் தென்மொழியும் பயின்று கரைகண்டவர்; பல இலக்கண இலக்கிய சமய தர்க்க நூல்களைச் செய்தவர்; பல நூல்கட்கு உரையும் கண்டவர்; சங்கர நமச்சிவாயரது உரையில் சில குறைகண்டு அவற்றைக் களைந்து மேலும் சில கூட்டிப் புத்தம் புத்துரை என்ற பெயரில் நன்னூலுக்கு விருத்தியுரை வழங்கியவர். இவரது உரை வடமொழி இலக்கணத்தைப் பின்பற்றியதாகும்; சிற்சில இடங்களில் வலிந்து உரை எழுதப்பட்டதாகவும் காணப்படும். இவரது காலம் 18ம் நூற்றாண்டு.

இராமாநுச கவிராயர் : இவர் இராமநாதபுரத்தைச் சார்ந்தவர். இவரது உரை சிவஞான முனிவரின் விருத்தியைத் தழுவி விரிவுபடுத்தி எழுதப்பட்டதாகும். இவரது காலம் 19ம் நூற்றாண்டின் இடைப்பகுதி.

ஆறுமுக நாவலர் : இவர் யாழ்ப்பாணத்தவர், சைவ சமயத்தவர். இவர் நன்னூலுக்குக் காண்டிகை உரை எழுதி உள்ளார். இவரது உரை சற்றுக்கடினமானது. இவரது காலம் கி. பி. 1823 முதல் 1879.

சடகோபராமாநுசாச்சாரியார் : இவர் திருவல்லிக்கேணியில் வாழ்ந்தவர் ; வைணவ சமயத்தவர். இவரும் நன்னூலுக்குக் காண்டிகை உரை எழுதியுள்ளார். இவரது உரை எளிமையானது. இவரது காலம் 19ம் நூற்றாண்டின் இறுதியும் 20ம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும்.

2. நன்னூல் ஐந்திலக்கணமும் உடையதாக இருந்திருத்தல் வேண்டுமென்று கருதுவார் காட்டும் அகச்சான்று புறச்சான்றுகள் எவை ?

நன்னூல் ஐந்திலக்கணமும் உடையதாக இருந்திருத்தல் வேண்டுமென்று கருதுவார் சிலர் உளர். அவர்கள் காட்டும் சான்றுகள் வருமாறு :

அகச்சான்றுகள் : (1) நன்னூலின் சிறப்புப் பாயிரத்தில் 'அரும்பொருளைந்தையும் யாவரும் உணரத்...... தருக என......நன்னூற் பெயரின் வகுத்தனன்' என்று கூறப்பட்டிருத்தலாலும், (2) பழையன கழிதலும் என்னும் நூற்பாவை, 'இந்நூலிற்சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்க நோக்காக நிற்பதொரு புறனடை' என மயிலைநாதர் எழுதியிருத்தலாலும், (3) 'நுதலிய பொருள் அரும்பொருளைந்தென உணர்த்தினமையின் இந்நூலுட் கூறிய பொருள் யாப்பு அணி என்னும்

மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளனபோலும்' என்று சங்கரநமச்சிவாயர் எழுதியிருத்தலாலும், (4) 'இயற்றமிழை அரும் பொருளைந்தெனக் கூறினமையின் இந்நூலுட் கூறிய பொருள் யாப்பு அணிகள் என்னும் மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளனபோலும்.' என்று சிவஞானமுனிவர் எழுதியிருத்தலாலும் நன்னூல் ஐந்திலக்கணமுமுடையது என்பது பெறப்படுகிறது.

புறச்சான்று : (1) '........நன்னூற்றுறைகள் அஞ்சுக்கு இலக்கியம்........பரகாலன் பனுவல்களே என்று பெரிய திருமொழிச் சிறப்புப் பாயிரத்தில் கூரத்தாழ்வார் கூறியிருத்தலாலும், (2) ஷை பகுதிக்கு உரை எழுதிய பிள்ளை லோகாரிய சீயர், 'தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சு லக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூல் என்று ஒரு சாஸ்திரமுண்டு' என்று எழுதியிருத்தலாலும் நன்னூல் ஐந்திலக்கணமுடையது என்பது பெறப்படுகிறது.

3. ஆக்கியோன் பெயர் முதலிய எட்டனையும் முன்னர் உணர்த்தலுக்கு விருத்தியுரைகாரர் கூறும் காரணத்தை எழுதுக. (1961)

பன்னருஞ் சிறப்பின் நல்லாசிரியனை உணர்ந்து வழிபட்டு ஒரு நூல் கேட்பான் புகுந்த நன்மாணாக்கர்க்கு அந்நூலான் நுவலப்படும் பொருளும், அந்நூல் கேட்டலால் பெறப்படும் பயனும், கேட்டற்குரிய அதிகாரிகள் ஆவார் இவர் என்பதூஉம், இன்னது முற்றிய பின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்னும் இயையும் உணர்ந்தன்றி, நூல் கேட்டற்கண் மனவூக்கம் செல்லாது. ஆகலின் இன்றியமையாச் சிறப்பினவாய இந்நான்கும் ஒருதலையாக முன் உணர்த்தல் வேண்டும்.

இந்நான்கும் உணர்ந்த வழியும், கற்றுவல்ல சான்றோர் அல்லாரால் செய்யப்பட்ட நூலாயின் கூறியது கூறல் முதலிய குற்றம் உடைத்தாமன்றே எனவும், கற்றுவல்ல சான்றோரும் மற்றோர் கோட்பாடு பற்றிச் செய்யின் முனைவன் நூலொடு முரணுமன்றே எனவும், ஐயுற்று ஊக்கம் செல்லாது. ஆகலின் அவ் ஐயம் நீக்குதற்பொருட்டு ஆக்கியோன் பெருமையும் நூற்பெருமையும் அந்நூல் வழங்கும் நிலமும் அதன் முதல் நூலும் இவை என்பது தோன்ற, ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற்பெயரும் உணர்த்தல் வேண்டும்.

— இவ்வாறு ஆக்கியோன் பெயர் முதலிய எட்டனையும் முன்னர் உணர்த்தலுக்கு விருத்தியுரைகாரர் காரணம் காட்டி எழுதியுள்ளார்.

4. சிறப்புப் பாயிரத்திலிருந்து ஆக்கியோன் பெயர் முதலிய பதினொன்றும் பெறப்பட்டவாற்றை எழுதுக.

| சிறப்புப்பாயிரப்பகுதி | பெறப்பட்ட பொருள் |
|---|---|
| 1. பவணந்தி | ... ஆக்கியோன் பெயர் |
| 2. முன்னோர் நூலின் வழி | ... வழி |
| 3. குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனுநான் கெல்லை | ... எல்லை |
| 4. நன்னூல் | ... நூற்பெயர் |
| 5. [நிகண்டுகற்றுச் செய்யுளாராய்ச்சி உடையார் இதைக் கேட்கற்பாற்று] | ... யாப்பு |
| 6. அரும்பொருள் ஐந்து | ... நுதலிய பொருள் |

7. [நிகண்டு கற்றுச் செய்யுள்
ஆராய்ச்சி உடையார்] ... கேட்போர்
8. [மொழித்திறத்தின்
முட்டறுத்தல்] ... பயன்
9. சீயகங்கன் மொழிந்தது ... காலம்
10. ஷை ஷை ... களம்
11. சீயகங்கன் மொழிந்ததும்,
யாவரிடத்தும் இரக்கமும் ... காரணம்

5. நன்னூலின் ஆக்கியோன் பெயர் முதலிய பதினொன்றும் கூறுக.

விடை 4-ல் காண்க.

6. பயனுக்குப் பயனாவது இன்னது என்று குறித்து, நன்னூலார் இயற்றமிழ் ஒன்றற்கு மட்டும் இலக்கணம் கூறிய காரணத்தையும் எழுதுக. (1961)

நன்னூலினைப் பயில்வதால் வரும் பயன் மொழித் திறத்தின் முட்டறுத்தலாகும். அப்பயனுக்குப் பயனாவது வீடு பெறுவதாகும். இதற்கு மேற்கோள் :

" எழுத்தறியத் தீரும் இழிதகைமை; தீர்ந்தான் [த்தின்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்—மொழித்திற
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருள் உணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்."

"நன்னூலானது முதனூற் பொருளை உணர்வதற்குக் கருவியாகும். முதனூலாவது அறம் முதலிய நான்கினையும் உணர்த்தும் நூல், அந்நான்கையும் உணர்வதற்கு இயற்றமிழைப்போல இசைத்தமிழும் நாடகத்தமிழும் கருவியாகா. எனவே நன்னூலார் இயற்றமிழ் ஒன்றுக்கு மட்டுமே இலக்கணம் கூறினர்"— இவ்வாறு சிவஞான முனிவர் கூறுவர்.

7. பொதுவெனவும் சிறப்பெனவும் பாயிரம் இருபகுதி பட்டதன் காரணத்தை விளக்குக.(1959)

சிறப்புப்பாயிரத்தின் உறுப்புக்களுள் கேட்போர் என்பதும் ஒன்று உண்டு. அதற்கு இனம் கேட்பிப்போர் என்பதாகும். இக்கேட்போரும் கேட்பிப்போரும் ஆகிய இரண்டும் பொதுப் பாயிரத்தால் பெறப்படுமாகலின், அவை சிறப்புப் பாயிரத்துள்ளும் கூறப்படவேண்டா எனின் அற்றன்று.

பொதுப்பாயிரத்துள் ஆசிரியர்க்கும் மாணக்கர்க்கும் பொதுவகையால் இலக்கணம் பெறப்பட்டனவன்றி, இந்நூற்கு இன்னூர் என்று சிறப்பு வகையான் இலக்கணம் பெறப்படவில்லை. 'இந்நூற்கு இன்னூர்' என்று சிறப்பு வகையான் கூறும் இலக்கணம் சிறப்புப் பாயிரத்தில் காட்டப்படவேண்டும்.

அவ்வாறு காட்டாக்கால் சிற்றறிவோர் பெருநூலும், பேரறிவோர் சிறுநூலும், முத்தமிழுள் ஒன்றற்குரியார் ஏனை இரண்டு நூலும் அறமுதலிய நான்கனுள் ஒன்றற்குரியார் ஏனை மூன்று நூலும் கேட்பான்புக்கு இடர்ப்பட்டு மயங்குப. ஆகவே இவை ஒருதலையாகக் காட்டல்வேண்டும்.

இங்ஙனம் சிறப்புப் பாயிரமும் பொதுப் பாயிரமும் காட்டுவன வெவ்வேறு செய்திகளேயயாகலின் பாயிரம் பொதுவெனவும் சிறப்பெனவும் இருபகுதி பட்டது.

8. கேட்போர், யாப்பு என்பவற்றிற்கு உரையாசிரியர் சொன்ன விளக்கம் என்ன? அதைச் சிவாஞானமுனிவர் எவ்வாறு மறுக்கிறூர்?

நூல் அரங்கேறும் அவைக்களத்துக் கேட்டாரைக் கேட்போர் என்றும் தொகுத்தல் முதலிய வழியின் வகை

யினை யாப்பு என்றும் உரையாசிரியர் (இளம்பூரணர்) விளக்கம் கூறினர்.

சிவஞான முனிவர் தரும் மறுப்பு: (1) ஆக்கியோன் பெயர், நுதலிய பொருள் என்பனபோல இறந்த காலத்தாற் கூருமல் கேட்போர் என எதிர்காலத்தாற் கூறியதே அஃது உரையன்மைக்குச் சான்ரும். (2) (அவைக்களத்துக் கேட்டோர் பெயர்.) காலம் களம் என்பவற்றில் அடங்குதலின் வேறு கூற வேண்டா, (3) ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல் வழங்குங் காலத்து நிகழ்வதன்று ஆதலின் அவற்ருேடு, (அவைக் களத்துக் கேட்டோர் பெயர்) ஒருங்குவைத்து எண்ணல் பொருந்தாது. (4) கேட்டற்குரிய அதிகாரிகளாவாரை ஒருதலையாக உணர்த்துதல் வேண்டும். (5) தொகுத்தல் முதலியன வழியுள் அடங்குதலின் வேறு கூறவேண்டா. (6) இயைபும் ஒருதலையாக உணர்த்துதல் வேண்டும். (7) இதுவே வடநூலார்க்கும் உடன்பாடு—இக் காரணங்களினுல் உரையாசிரியர் தரும் விளக்கம் பொருந்தாது.

9. பாயிரத்தின் வேறுபெயர்கள் யாவை? அவற்றின் பொருளையும் தருக.

பாயிரத்தின் வேறு பெயர்கள்

1. முகவுரை
2. பதிகம்
3. அணிந்துரை
4. நூன்முகம்
5. புறவுரை
6. தந்துரை
7. புனைந்துரை

பொருள்: முகவுரை – நூலின் முகத்தில் உரைக்கப் படுவது. பதிகம் – பல்வகைப் பொருள்களைத் தொகுதி யாகச் சொல்வது; அஃதாவது ஐந்து பொதுவும் பதி னொரு சிறப்பும் ஆகிய பல்வகைப் பொருளைத் தொகுத் துக் கூறுவது. அணிந்துரை – நூலின் பெருமை முத

லியவற்றை விளங்க அணிந்து உரைப்பது. நூன்முகம்-நூலின் முகத்தில் இருப்பது. புறவுரை—நூல் நுதலிய பொருளுக்குப் புறமான ஆக்கியோன் பெயர் முதலிய வற்றை உரைப்பது. தந்துரை - ஆக்கியோன் பெயர் முதலியவற்றைத் தந்து உரைப்பது. புனைந்துரை - நூலினது பெருமை முதலியவற்றை விளங்கப் புனைந்து உரைப்பது. பாயிரம் - வரலாறு; அஃதாவது நூலின் வரலாற்றை உரைப்பது.

10. 'முனைவன் கண்டது முதனூலாகும்' என ஒருமையாற் கூறி, 'முன்னோர் நூலின்' என்று பன்மையாற் கூறியது எக்காரணம் பற்றி? அதனாற் பெறப்படுவது யாது? விளக்குக. (1968)

'முனைவன் கண்டது முதனூலாகும்' என ஒருமையாற் கூறி 'முன்னோர் நூலின்' என்று பன்மையாற் கூறியது. இறைவன் நூலையும் அவன் அருள் வழிப் பட்டுத் தத்தம் மரபின் வரும் குரவர் (ஆசிரியர்) பலர் நூலையும் முதனூல் என்று தழுவிக்கொள்வதற்காம்.

அதனால் முதனூல் மாத்திரையாய் நிற்பது இறைவன் நூலும் வழிநூல் மாத்திரையாய் நிற்பது இறுதி நூலுமன்றி இடைநிற்கும் நூல்களெல்லாம் ஒருவற்கு மைந்தனாயினான் மற்றொருவற்குத் தந்தையாயினாற் போல முதனூலாயும் வழிநூலாயும் நிற்கும் என்பதாம்.

**விளக்கம்:** ஒருவன் தன் தந்தையை நோக்க மகன் எனப்படுவதுபோல ஒரு நூல் தன் முதனூலை நோக்க வழிநூலெனப்படும். இனி அவனே தன் மகனை நோக்கத் தந்தை எனப்படுவதுபோல அந் நூலே தன் வழிநூலை நோக்க முதனூல் எனப்படும். எனவே இடைநிற்கும் நூல்கள் முதனூலும் வழி நூலுமாம்.

11. பழஞ் சூத்திரத்தின் கோள் எதற்காகக் கூறவேண்டும்?

முன்னோர் மொழிபொருளேயன்றி அவர்மொழியும் பொன்னேபோற் போற்றுவோம் என்பதற்காகவும், முன்னோரின் நூலுக்கு வேறாக வழிநூலும் சார்புநூலும் செய்தேமாயினும் மேற்கோள் இல்லை என்று கூறப் படும் குற்றம் ஒழிதற்காகவும் பழஞ் சூத்திரத்தின் கோளைக் கூறவேண்டும்.

12. எழுவகை மதம், பத்துக் குற்றம், பத்து அழகுகள் யாவை?

மதங்கள் (கொள்கைகள்) — 7

1. உடன்படல்
2. மறுத்தல்
3. பிறர்தம்மதம் மேற்கொண்டு களைவு
4. தான் நாட்டித் தனாது நிறுப்பு
5. இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு
6. பிறர் நூல் குற்றங் காட்டல்
7. பிறிதொடு படான் தன்மதம் கொளல்

குற்றங்கள்—10

1. குன்றக் கூறல்
2. மிகைபடக் கூறல்
3. கூறியது கூறல்
4. மாறுகொளக் கூறல்
5. வழூஉச்சொற் புணர்த்தல்
6. மயங்க வைத்தல்
7. வெற்றெனத் தொடுத்தல்
8. மற்றொன்று விரித்தல்
9. சென்று தேய்ந் திறுதல்
10. நின்றுபயன் இன்மை

அழகுகள்—10

1. சுருங்கச் சொல்லல்
2. விளங்க வைத்தல்
3. நவின்றோர்க்கினிமை
4. நன்மொழி புணர்த்தல்
5. ஓசையுடைமை
6. ஆழமுடைத் தாதல்
7. முறையின் வைப்பு
8. உலகமலையாமை
9. விழுமியது பயத்தல்
10. விளங்கு உதாரணத்த தாகுதல்

13. மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை நன்னூலார் உத்தியுள்ளும் கூறியமைக்குக் காரணம் காட்டுக. (1965)

உடன்படல், தாஅனுட்டித் தனுது நிறுப்பு, இருவர் மாறுகோள், ஒருதலை துணிவு என்னும் மதங்கள் முறையே பிறநூல் முடிந்தது தானுடன் படுதல், தன்குறி வழக்கம் மிகவெடுத்துரைத்தல், ஒருதலை துணிதல் என உத்தியுள்ளும் கூறப்பட்டிருக்கின்றன.

முறையின் வைப்பு, விளங்கு உதாரணத்த தாகுதல் என்னும் அழகுகள் முறையே ஓத்துமுறை வைப்பு, எடுத்துக் காட்டல் என உத்தியுள்ளும் கூறப்பட்டிருக்கின்றன.

இங்ஙனம் மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறியது என்னை எனின், கொள்கை வகையான் மதம் என்றும் சிறப்பு வகையான் அழகு என்றும் கூறப்படுவனவே புத்தி நுட்பத்துள் அமையும் வகையான் உத்தி என்றும் கூறப்படும் ஆகலின் அவ்வாறு கூறப்பட்டது.

அங்ஙனமாயின் எல்லா மதத்தையும் எல்லா அழகையும் உத்தியுள் கூருமல் சிலவற்றை மட்டுமே கூறியது என்னை எனின், வரம்பின்றி வரும் உத்திகளில் தலைமை பற்றிக் கூறப்படும் முப்பத்திரண்டில் அடங்குவன சிலவே ஆகலின் அவ்வாறு கூறப்பட்டது.

14. மதம் ஏழனுள்ளும் அழகு பத்தனுள்ளும் வருவன சில உத்திவகையுள்ளும் காணப்படுவதற்கு விருத்தியுரைகாரர் கூறும் காரணம் யாது? (1960)

விடை 13-னுள் காண்க.

15. ஓத்து, படலம்—இவற்றை விளக்குக.

ஓத்து: ஒரு சாதியான மணிகளை ஒரு வரிசைப் படப் பதித்து வைத்தாற்போல ஓர் இனமான இலக்கணங்களை ஒரே இடத்தில் தொகுத்துக் கூறுவது ஓத்து எனப்படும். ஈண்டு ஓத்து என்பது பல சூத்திரங்கள் சேர்ந்த இயலைக் குறிக்கும்.

படலம்: ஒரு சாதியான பொருள்களேயன்றிக் கலப்புற்ற பல்வகைப் பொருள்களால் பொதுவகையான் தொகுக்கப்படுவது படலம் எனப்படும். ஈண்டுப் படலம் என்பது பல ஓத்துக்கள் சேர்ந்த அதிகாரத்தைக் குறிக்கும்.

16. சூத்திரத்தின் நிலையும் வகையும் யாவை? விளக்குக.

சூத்திரத்தின் நிலை: ஆற்றொழுக்கு, அரிமாநோக்கம், தவளைப் பாய்த்து, பருந்தின் வீழ்வு எனச் சூத்திரத்தின் நிலை நான்கு வகைப்படும். அவற்றுள், இடையறாது ஒரு முகமாக ஓடுகின்ற ஆற்று நீரோட்டத்தைப் போலப் பொருளின் தொடர்ச்சி இடையறாது ஒருமுகமாகத் தொடர்கின்ற சூத்திரங்கள் ஆற்றொழுக்கு எனப்படும். முன்னும் பின்னும் பார்க்கின்ற சிங்கத்தின் பார்வையைப் போலத் தன் பொருள் முன்னும் பின்னும் சென்று தழுவுமாறு இடைநின்ற சூத்திரம் அரிமா நோக்கம் எனப்படும். சிறிது நிலம் இடைவிட்டுப் பாயும் தவளையின் பாய்ச்சலைப் போல ஒரு சூத்திரத்தின் பொருள் அடுத்துள்ள ஓரிரு சூத்திரங்களைத் தழுவாது இடையிட்டுப் போய் அப்பாலுள்ள சூத்திரத்தோடு தொடருமாறு அமைந்த சூத்திரங்கள் தவளைப் பாய்த்து எனப்படும். நெடுந்தூரத்தினின்று ஒன்றை வவ்வுதற்கு விழுகின்ற பருந்தின் வீழ்ச்சியைப் போல நெடுந்தூரத்தில் உள்ள ஒரு சூத்திரப்பொருள் யாதேனும் ஒருகாரணம் பற்றி

இடைவந்து பொருந்துமாறு அமைந்த சூத்திரம் பருந்தின் வீழ்வு எனப்படும்.

சூத்திரத்தின் வகை : பிண்டம், தொகை, வகை, குறி, செய்கை, புறனடை எனச் சூத்திரம் அறுவகைப் படும். அவற்றுள், பலவகைப் பொருளையும் உள்ள டக்கிப் பொதுப்படக் கூறுவது பிண்டம் எனப்படும். பல்வகைப் பொருளையும் வேறுவேருகத் தொகுத்துக் கூறுவது தொகை எனப்படும். தொகுத்துக் கூறிய பொருளையே வகுத்துக் கூறுவது வகை எனப்படும். இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற்ருெடக்கத்து அறிதல் மாத்திரையாய் வருவன குறிச்சூத்திரம் எனப்படும். புணர்ச்சிவிதியறிந்து புணர்த்தலைச் செய்தலும் முடிபுவிதியறிந்து முடித் தலைச் செய்தலும் முதலியன செய்கைச் சூத்திரம் எனப் படும். முன் கூறப்பட்ட பொருள்களுக்கெல்லாம் புறமாக அடுத்து வருவது புறனடை எனப்படும்.

17. பிண்டம் தொகைவகை என்ற நூற்பாவில் குறி செய்கை என்பதற்கு விருத்திகாரர் கூறும் பொருளை எழுதுக. (1962)

குறியாவன இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற்ருெடக்கத்து அறிதல் மாத் திரையாய் வருவன. செய்கையாவன பதமுன் விகுதியும் பதமுன் உருபும் புணரும் புணர்ச்சி விதியறிந்து அங்ங னம் அறிதல் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்தலும், பெயர் வினை முதலிய கொள்ளும் முடிபு விதி அறிந்து அங்ஙனம் அறிதல் மாத்திரையாய் நில்லாது. அவ்வாறு வேண்டுழி முடித்தலைச் செய்தலும் முதலியன. இவ்வாறு விருத்திகாரர் பொருள் கூறியுள்ளார்,

இவ்வாறின்றிக் குறி என்பதற்குப் பெயர்களை உணர்த்தும் சூத்திரம் என்றும் செய்கை என்பதற்கு எழுத்துப் புணர்ச்சியை உணர்த்தும் சூத்திரம் என்றும் பொருள் கூறுவாரும் உளர்.

இவ்வுரையை விருத்திகாரர், "அங்ஙனம் கூறின் ஏனை இலக்கணங்களைக் கூறும் சூத்திரங்களையும் விதந்து கூறவேண்டும்; அங்ஙனம் கூறாமையானும், பெயரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற்கன்றிப் பொதுப்பாயிரமாய் எல்லா நூற்கும் பொருந்தாமை யானும் அது பொருளன்று என்க" என்று கூறி மறுத்துள்ளார்.

18. 'பிண்டம் தொகை வகை குறியே செய்கை கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்'— பிண்டம், குறி, செய்கை என்று இந்நூற்பாவில் குறிப்பிடப்பெற்றுள்ளவற்றை விளக்குக. (1966)

பிண்டச் சூத்திரமாவது : பலவகைப் பொருளையும் உள்ளடக்கிப் பொதுப்படக் கூறுவதாகும்.

(உ-ம்) 'பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகற்றொழுது நன் கியம்புவன்எழுத்தே.'

ஈண்டு 'எழுத்து' என்றது பிண்டப் பொருள்.

குறிச்சூத்திரமாவது<br>செய்கைச்சூத்திரமாவது } விடை 17-னுள் காண்க.

(உ-ம்) 1. அம்முதல் ஈராறு ஆவி; கம்முதல்
மெய்ம் மூ வாறென விளம்பினர் புலவர்.

2. உரிவரின் நாழியின் ஈற்று உயிர் மெய்கெட
மருவும் டகரம்; உரியின் வழியே
யகரஉயிர் மெய் யாம் ஏற்பன வரினே.

ஈண்டு ஆவி, மெய் என்பன குறி. நாழியின் ஈற்று உயிர்மெய் கெட டகரம் மருவும் என்பது செய்கை.

19. எல்லாச் சூத்திரங்களும் பிண்டம் தொகை வகை புறனடை என்னும் நான்கனுள் அடங்குவதாக இருக்கக் குறியினையும் செய்கையினையும் வேறு ஓதியது என்னை? (1961)

எல்லாச் சூத்திரங்களும் பிண்டம் தொகை வகை புறனடை என்னும் நான்கனுளாவது, குறி செய்கை என்னும் இரண்டனுளாவது அடங்கும். அங்ஙனமாகவும் பிண்டம் முதலிய நான்கனுடன் குறி செய்கை என்ற இரண்டையும் கூறியது என்னை எனின், எல்லா நூலுள்ளும் சொல்லப்படுவன அறிவஃதும் செய்வதும் அன்றி வேறின்மையின் பிண்டமாக்கியும் தொகுத்தும் வகுத்தும் புறத்தடை கொடுத்தும் கூறப்படுவன குறியும் செய்கையுமே என்பது தோன்றுதற்காகக் கூறப்பட்டது.

20. காண்டிகை, விருத்தி — இவற்றை விளக்குக.

காண்டிகை: பதினன்கு வகைப்பட்ட உரைவகையில் கருத்துச் சொற்பொருள், உதாரணம், வினா, விடை என்ற ஐந்து கூறுகளினால் சூத்திரத்தின் உட்பொருளை விளக்குவது காண்டிகையுரை எனப்படும்.

விருத்தி: பாடம், கருத்து, சொல்வகை, சொற்பொருள், தொகுத்துரை, உதாரணம், வினா, விடை, விசேடம், விரிவு, அதிகாரம், துணிவு, பயன், ஆசிரிய வசனம் என்ற பதினன்கு வகை உரையினுடனும் கூடி இன்றியமையாத எல்லாப் பொருளும் விளங்கும்படித் தன் உரையினாலும் பிற நூல்களினாலும் ஐயம் தீரும்படி மெய்ப்பொருளை விரித்து உரைப்பது விருத்தியுரை எனப்படும்.

21. நூல் என்று பெயர் வந்த காரணத்தைக் கூறுங்கால், 'நூல் என்றது உவமையாகுபெயர்' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்; ஏன்? காரணங்களைப் புலப்படுத்துக. (1967)

சேயிழை ஒருத்தி தனது கையினால் கதிரைக் கொண்டு பஞ்சினால் இழைத்து நூல் ஆக்குகிறாள்; அதுபோலப் புலவன் ஒருவன் தனது வாயினால் மதியைக் கொண்டு சொற்களினால் பனுவல் ஆக்குகிறான். அதனால் பனுவலுக்கு நூல் என்று பெயர் வந்தது.

கெட்ட மரத்தின் கனமான வளைவை எற்று நூல் தீர்க்கின்றது. அதுபோல மக்களின் மனவளைவைப் பனுவல் போக்கி அறிவைப் பெருக்குகிறது. அதனால் பனுவலுக்கு நூல் என்று பெயர் வந்தது.

எனவே, நூல் என்றது உவமை ஆகுபெயர்.

22. ஒரு நூலுக்கு எவ்வெம் முறைபற்றிப் பெயரிடலாம்? அவற்றிற்கு ஒவ்வோர் எடுத்துக்காட்டுத் தருக. (1963)

முதல் நூல், கருத்தன், அளவு, மிகுதி, பொருள், செய்வித்தோன், தன்மை முதலிய காரணங்களினாலும், காரணமின்றி இடுகுறியாலும் நூலுக்குப் பெயரிடலாம்.

எடுத்துக்காட்டு

| | | | |
|---|---|---|---|
| 1. பாரதம் | — முதல் நூலால் | பெற்ற | பெயர் |
| 2. அகத்தியம் | — கருத்தனால் | ,, | ,, |
| 3. பன்னிருபடலம் | — அளவால் | ,, | ,, |
| 4. களவியல் | — மிகுதியால் | ,, | ,, |
| 5. அகப்பொருள் | — பொருளால் | ,, | ,, |
| 6. சாதவாகனம் | — செய்வித்தோனால் | ,, | ,, |
| 7. சிந்தாமணி | — தன்மையால் | ,, | ,, |
| 8. நிகண்டு | — இடுகுறியால் | ,, | ,, |

இனி, முதலிய என்றதனுல் ஆத்திசூடி என முதற் குறிப்பாலும், களவழி நாற்பது என இடத்தாலும், கார் நாற்பது எனக் காலத்தாலும், ஐந்திணை எனத் தொழிலாலும், கலித்தொகை எனப் பாட்டாலும், திருவங்க மாலை எனச் சினையாலும் பெயர்பெற்றனவும் கொள்ளப் படும்.

23. பாயிரம் நூல்களுக்கு இன்றியமையாதது என்பதனைச் சூத்திரம்கொண்டு நிறுவுக. (1957)

"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவல் அன்றே"
"மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க்கு அணியும்போல்—நாடிமுன்
ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது."

என்பன பாயிரத்தின் இன்றியமையாமையை விளக்கும் சூத்திரங்களாகும்.

விளக்கம்: ஆயிரம் உறுப்புக்களைப் பெற்று விரிவுடையதாயினும் பாயிரம் இல்லாதுபோனுல் அது நூல் என்று அழைக்கப்படமாட்டாது. மாளிகைக்குச் சித்திரங்களும், பெரிய நகரத்துக்குக் கோபுரமும், மகளிர்க்கு அணிகளும்போல இன்றியமையாததாகக் கருதிப் பாயிரத்தை எவ்வகைப்பட்ட நூலுக்கும் முன்னே அறிவுடையோர் வைத்துள்ளனர்.

24. அதிகாரம் என்பதற்குக் கூறப்படும் விசேடப் பொருளை எழுதுக. (1962)

அதிகாரம் என்பது அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்த

இடத்திலேயே இருந்துகொண்டு தன் நிலம் முழுவதையும் தனது ஆணையால் நடக்கச் செய்வதைப் போல, ஒரு சொல் நின்ற இடத்திலேயே நின்று பல சூத்திரங்களும் பலவோத்துக்களும் தன் பொருளையே நுதலிவரச் செய்வதாகும். இதனை வடநூலார் யதோத்தேசபக்கம் என்பர். எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் எனபவற்றில் வரும் அதிகாரம் இவ்வகையைச் சாரும்.

மற்றொன்று, அரசன் ஆணையை ஆங்காங்கே கொண்டு சென்று நடத்தும் தண்டத் தலைவர்களைப் போல, ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்றியைந்து தன் பொருளைக் கொடுப்பது. இதனை வடநூலார் காரியகாலபக்கம் என்பர்.

25. அதிகாரம் எத்தனை வகைப்படும்? விளக்குக.

விடை 24ல் காண்க.

26. எழுத்திலக்கணத்தின் பன்னிரு பகுப்புக்கள் எவை? அவை எவ்வாறு முறைப்படுத்தி வைக்கப் பெற்றுள்ளன?

எழுத்திலக்கணம் எண், பெயர், முறை, பிறப்பு, உருவம், மாத்திரை, மொழிமுதல்நிலை, மொழியிடை நிலை, மொழியீற்றுநிலை, போலி, பதம், புணர்ப்பு எனப் பன்னிரண்டு பகுப்புக்களை உடையது.

இவற்றுள் எண் முதலிய பத்தும் அகத்திலக்கணம் எனப்படும். இப் பத்தும் எழுத்தியலில் கூறப் படுகின்றன. பதமும் புணர்ப்பும் புறத்திலக்கணம் எனப்படும். இவற்றுள்ளும் பதம் என்பது பதவியலில் கூறப்படுகின்றது. புணர்ப்பு என்பது உயிரீற்றுப்

புணரியல் மெய்யீற்றுப்புணரியல் உருபுபுணரியல் என்ற மூன்றியலுள்ளும் கூறப்படுகிறது. இவ்வாறு இப் பன்னிரண்டும் ஓத்துமுறை வைப்பு என்னும் உத்தியான் முறையே வைக்கப்பெற்றுள்ளன.

27. 'மொழிமுதற் காரணமாம் அணுத்திரள் ஒலி எழுத்து'—இதன் விசேடவுரையை எழுதுக. (1964)

முற்கு வீளை முதலியவற்றிற்கு முதற்காரணமாயும் அணுத்திரளின் காரியமாயும் வரும் ஒலி, எழுத்தாகாமை யின் மொழி முதற் காரணமாம் ஒலி என்று கூறப் பட்டது. சிதலது நீர்வாய்ச் சிறுதுகளால் பெரும் புற்றுரு அமைந்த பெற்றியதென்ன ஐம்புலப் பேருரு ஐந்தும் ஐந்து அணுவால் இம்பரில் சமைவது யாவரும் அறிதலின் அநாதிகாரணமாகிய மாயை கூறப்படாமல் ஆதிகாரணமாகிய அணுத்திரள் மட்டும் கூறப்பட்டது.

"நன்னூலார் சமணராகலான் அவர்க்கு மாயை உடன்பாடன்று; எனவே அணுத்திரள் ஒன்றுமே அவர்க்குத் துணிவு" எனின் இது பிறிதொடு படாஅன் தன்மதம் கொளல் என்னும் மதமாகும்.

28. பிறிதொடு படாஅன் தன்மதம் கொளல் என்னும் மதத்திற்கு ஓர் உதாரணம் தந்து விளக்குக. (1962)

"மொழிமுதற் காரணமாம் அணுத்திரள் ஒலி
எழுத்து: அது முதல்சார்பு எனஇரு வகைத்தே."

என்னும் நூற்பா பிறிதொடு படாஅன் தன்மதம் கொளல் என்னும் மதத்திற்கு உதாரணமாகும்.

**விளக்கம்:** எழுத்திற்கு ஆதிகாரணம் அணுத்திரள் ஒலி; அநாதிகாரணம் மாயை. இவ்விரண்டு காரணங் களும் வைதீக சமயத்தார்க்கு உடன்பாடாகும். ஆனால் மாயை சமண சமயத்தார்க்கு உடன்பாடன்று. நன்னூ லார் சமணராகலின் மாயையை உடன்படாமல் அணுத் திரள் ஒலி ஒன்றை மட்டுமே உடன்பட்டு, "அணுத்திரள் ஒலி எழுத்து;" என்று நூற்பாச் செய்தார். இங்ஙனம் பிறர் கொள்கையை ஏற்காமல் தன் கொள்கை ஒன்றை மட்டுமே எடுத்துக் கூறியிருப்பதால் இந்நூற்பா பிறி தொடு படாஅன் தன்மதம் கொளல் என்னும் மதம் ஆயிற்று.

29. தொல்காப்பியனா் சார்பெழுத்து மூன்று எனக் கூறியிருக்க நன்னூலார் பத்து என்றல் பொருந்துமா? ஆய்க. (1962)

தொல்காப்பியனார் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற மூன்றையும் சார்பெழுத்து என்றார். நன் னூலார் அம்மூன்றோடு உயிர்மெய் உயிரளவு ஒற்றளபு ஐகாரக்குறுக்கம் ஔகாரக்குறுக்கம் மகரக்குறுக்கம் ஆய் தக்குறுக்கம் என்ற ஏழையும் கூட்டி அப்பத்தையும் சார் பெழுத்து என்றார், இங்ஙனம் கூறியதற்கு மயிலைநாத ரும் சிவஞான முனிவரும் காரணங்கள் கூறியுள்ளனர்.

மயிலைநாதர் கூறுவது: ஆசிரியர் தொல்காப்பியனா ரும் சார்பெழுத்தென மூன்றே கொண்டாராலோ எனின், நன்று சொன்னாய், ஒழிந்தவை எப்பாற்படும் என்றார்க்கு மூன்றாவதோர் பகுதி சொல்லலாவது இன்மையானும், முதலெழுத்தாம் தன்மை அவற்றிற்கு இன்மையானும் சார்பில் தோன்றுதலானும் இப்பத்தும் சார்பாகவே கொள்ளப்படும்.

சிவஞானமுனிவர் கூறுவது: ஆசிரியர் தொல்காப்பியர் செய்கை ஒன்றனையுமே நோக்கிச்சார்பெழுத்து மூன்றெனக் கருவி செய்தார். நன்னூலார் செய்கையும் செய்யுளியலும் நோக்கிச் சார்பெழுத்துப் பத்து என்று கருவி செய்தார் என்பது உய்த்துணர்க.

முடிபு: தொல்காப்பியத்திற்கு நன்னூல் வழி நூலாகலின், 'பின்னோன் வேண்டும் விகற்பங் கூறல்' என்னும் வழிநூலின் விதிப்படி நன்னூலார் பத்தெனக் கூறியது பொருந்தும்.

30. சார்பெழுத்துறுவிரி எத்தனை? விளக்கமாய் எழுதுக.

சார்பெழுத்துறுவிரி முந்நூற்றறுபத்தொன்பது ஆகும்.

சார்பெழுத்தின் விபரம்

| | | | |
|---|---|---|---|
| 1. | உயிர்மெய் | ... | 216 |
| 2. | ஆய்தம் | ... | 8 |
| 3. | உயிரளபெடை | ... | 21 |
| 4. | ஒற்றளபெடை | ... | 42 |
| 5. | குற்றியலிகரம் | ... | 37 |
| 6. | குற்றியலுகரம் | ... | 36 |
| 7. | ஐகாரக்குறுக்கம் | ... | 3 |
| 8. | ஔகாரக்குறுக்கம் | ... | 1 |
| 9. | மகரக்குறுக்கம் | ... | 3 |
| 10. | ஆய்தக்குறுக்கம் | ... | 2 |
| | | ஆக | 369 |

31. 'இடுகுறி காரணப் பெயர் பொதுச் சிறப்பின'—இதனை எழுத்தியலிற் கூறக் காரணம் யாது? (1960)

நன்னூலார் எழுத்திலக்கணத்தை எண் பெயர் முதலிய பன்னிரண்டு பகுதியாகப் பகுத்துக்கொண்டு முதற்கண் எண் உணர்த்தி, அதன் பின்னர்ப் பெயராமாறு உணர்த்துவான் தொடங்கினர்; அத் தொடக்கத்தில் எழுத்தின் பெயர்க்கு மட்டுமின்றிச் சொல்லின் பெயர்க்கும், ஏனை உலகத்துப் பொருளின் பெயர்க்கும் உரிய பொதுவிலக்கணமான ஒன்றை 'இடுகுறி காரணப் பெயர் பொதுச்சிறப்பின' என்னும் நூற்பாவால் குறிக்கின்றார்.

இந்நூற்பாப் பொதுவிலக்கணமாகலானும், சிறப்புக்கு முன் பொதுவிலக்கணமுணர்த்துதல் முறையாகலானும், பலவற்றுக்கும் பொதுவான ஒன்றை முதனிலைத் தீபகமாக எடுத்துக் கோடற்கண் கூறின் பின்னவற்றுக்கும் சென்று சேருமாகலானும் இந் நூற்பா எழுத்தியலில் கூறப்பட்டது.

32. இரட்டுற மொழிதல் என்பதற்கு உதாரணம் தந்து விளக்குக.

'இடுகுறி காரணப் பெயர்பொதுச்சிறப்பின'—இந் நூற்பா இரட்டுற மொழிதல் என்பதற்கு உதாரணம் ஆகும்.

இரண்டு பொருள் ஒருங்கே அமையுமாறு சொல்லுதல் இரட்டுற மொழிதல் என்னும் உத்தியாகும். (இரண்டு+உற+மொழிதல்= இரட்டுறமொழிதல்.)

இந்நூற்பாவில் உள்ள இடுகுறி காரணப்பெயர் என்ற தொடர்க்கு இடுகுறிப் பெயரும் காரணப் பெயரும் என ஒரு பொருள் கூறி, மீண்டும் அத்

தொடர்க்கே இடுகுறி காரணப்பெயர் என மற்றொரு பொருளும் கூறி இவ்விரு பொருளையும் ஏற்கிறோம். இங்ஙனம் இருபொருள் ஒருங்கே அமையுமாறு சொல்லப்பட்டதால் இந்நூற்பா இரட்டுறமொழிதல் என்னும் உத்தியின் பாற்பட்டது.

33. பெயர்களின் வகையை உதாரணத்துடன் விளக்குக.

பெயர்கள், இடுகுறி எனவும் காரணம் எனவும் இடுகுறிகாரணம் எனவும் மூன்று வகைப்படும். இவற்றை முறையே ரூடி எனவும், யோகம் எனவும், யோகரூடி எனவும் வடநூலார் கூறுவர். இவற்றுள், இடுகுறியும் காரணமும் என்பன பொதுவெனவும் சிறப்பெனவும் இவ்விரண்டு வகைப்படும். இடுகுறி காரணம் என்பது பொதுவென ஒரே வகைப்படும்.

காரணம் கருதாமல் ஒரு பொருளுக்கு இடும் பெயர் இடுகுறியாகும். காரணம் கருதி ஒரு பொருளுக்கு இடும் பெயர் காரணமாகும், காரணம் கருதியவழிப் பலவற்றுக்கும் செல்வதாயும் காரணம் கருதாவழி ஒன்றுக்கே செல்வதாயும் அமைந்த பெயர் இடுகுறி காரணமாகும். பலவற்றுக்கும் பொதுவாய் அமைந்த பெயர் பொதுவாகும். அப்பொதுமை நீங்கி ஒன்றற்கே உரியதாய் அமைந்த பெயர் சிறப்பாகும்.

எடுத்துக்காட்டு

1. மரம் — இடுகுறிப் பொதுப்பெயர்
2. பனைமரம் — இறிகுறிச் சிறப்புப்பெயர்
3. அணி — காரணப் பொதுப்பெயர்
4. முடி — காரணச் சிறப்புப்பெயர்
5. முக்கணன் — காரணவிடுகுறிப் பொதுப்பெயர்

34. இனவெழுத்துக்கள் இன்ன என்பதைக் காரணத்துடன் விளக்குக. (1957)

தானம், முயற்சி, அளவு, பொருள், வடிவு என்பவற்றுள் ஒன்றானும் பலவானும் ஒத்துவரும் எழுத்து இனவெழுத்து எனப்படும்.

அகரம் முதலிய பன்னிரண்டும் மிடற்றில் பிறத்தலின் தானத்தால் உயிர் என ஓரினமாயின. அ ஆ அங்காத்தலால் பிறத்தலாலும், உ ஊ இதழ்குவிதலால் பிறத்தலானும் முயற்சியால் அவ்வக் குறிலுக்கு அவ்வந் நெடில் இனமாயின. ககரம் முதலிய பதினெட்டும் ஒரோவொன்று அரை மாத்திரை பெறுதலான் அளவாலும், புள்ளி பெறுதலான் வடிவாலும் மெய் என ஓரினமாயின. கசடதபற என்ற ஆறும் உரத்தில் பிறத்தலின் தானத்தால் வல்லினம் என ஓரினமாயின. இவ்வாறே மெல்லினமும் இடையினமும் ஒவ்வோர் இனமாயின. பாலன் விருத்தன் ஆறற் போலக் குறிலது விகாரமே நெடிலாதலின் அங்கு ஆங்கு, பெடை பேடை என்பவற்றின் அ ஆ, பெ பே என்பன ஒரே பொருள் தருதலின் பொருளால் அவ்வக்குறிலுக்கு அவ்வந்நெடில் இனமாயின, மெய்க்கும் ஆய்தத்திற்கும் மாத்திரை அரையாய் வடிவம் புள்ளியாய் அமைதலின், ஆய்தம் அளவாலும் வடிவாலும் ஒற்றெழுத்துடன் ஓரினமாக்கிக் கொள்ளப்பட்டது.

35. 'சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல் — நடத்த ருனே முறையா கும்மே' — விருத்தியுரை தருக. (1959).

"சிறப்பினும் இனத்தினும் செறிந்தீண் டம்முதல்
நடத்தல் தானே முறையா கும்மே."

என்பது நூற்பா.

விருத்தியுரை : சிறப்பினாலும் இனத்தினாலும் பொருந்தி இவ்வுலகில் அகரம் முதலாக வழங்கி வருவதே எழுத்தின் முறையாகும்.

குறிலினது விகாரமே நெடிலாதலின் குறில் முன்னிற்றலின் சிறப்பின் என்றும், நெடில் இனமாய்ப் பின் நிற்றலின் இனத்தின் என்றும், ஒலியளவாய் எல்லா எழுத்திற்கும் காரணமாய் முன் நிற்றலின் அம்முதல் என்றும், எல்லா எழுத்திற்குமுரிய முறைவைப்பு முற்றும் உணர்தல் ஆகாமையின் நடத்தல் தானே என்றும் கூறப்பட்டன.

ஆயினும் அகரம் முதலியவற்றின் முறைவைப்பைச் சிறிது காண்பாம். உயிர் தனித்தியங்கும் ஆற்றல் உடைமையானும், மெய் உயிரோடுகூடி யல்லது தனித்தியங்கும் ஆற்றல் இன்மையானும் அச்சிறப்பும் சிறப்பின்மையும் நோக்கி உயிர் முன்னும், மெய் பின்னுமாக வைக்கப்பட்டன.

உயிர்களுள் அகரம் அங்காத்தலானும், இகரம் அங்காத்தலோடு அண்பல் அடிநா விளிம்புறலானும் உகரம் அங்காத்தலோடு இதழ் குவித்தலானும் பிறத்தலின் இப் பிறப்பிடத்தின் முறைநோக்கி அஇஉ என வைக்கப்பட்டன. ஆஈஊ என்பன அஇஉக்களின் இனமாகலின் அவற்றைச் சார வைக்கப்பட்டன. எகரமானது அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்திசைந்தும், ஒகரமானது அகரக் கூறும் உகரக்கூறும் தம்முள் ஒத்திசைந்தும் நர மடங்கல்போல நிற்பவாகலான் ஊகாரத்தின்பின் முறையே வைக்கப்பட்டன. ஏஓ என்பன எஒக்களின் இனமாகலின் அவற்றைச் சார வைக்கப்பட்டன. ஐகாரமானது அகரமும் யகரமும் இகரமும் ஒத்திசைந்து நிற்பதாகலின் ஏகாரத்தின்

பின்னும் ஔகாரமானது அகரமும் வகரமும் உகரமும் ஒத்திசைந்து நிற்பதாகலின் ஓகாரத்தின் பின்னும் வைக்கப்பட்டன.

மெய்களுள், வலியாரை முன்வைத்து மெலியாரைப் பின்வைத்தல் மரபாகலின் வல்லெழுத்துக்கள் முன்னும் அவற்றுக்கு இனமொத்த மெல்லெழுத்துக்கள் அவ்வவற்றின் பின்னுமாக வைக்கப்பட்டன. வலியும் மெலியும் நோக்கியல்லது இடைநிகரன அறியப்படாமையின் இடைஎழுத்துக்கள் அவ்விரண்டுக்கும் பின் வைக்கப்பட்டன. மற்றும் கஙக்கள், சஞக்கள், டணக்கள், தநக்கள், பமக்கள் என்பன முறையே அடிநா அண்ணம், இடைநா அண்ணம், நுனிநா அண்ணம், அண்பல்லடி, இதழ் என்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலின் அப்பிறப்பிடத்தின் முறையே முறையாக வைக்கப்பட்டன. யரலவக்கள் என்பன முறையே அடியண்ணம், இடையண்ணம், அண்பல்முதல், இதழ் என்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலின் அப்பிறப்பிடத்தின் முறையே முறையாக வைக்கப்பட்டன. ழறன என்பன தமிழின் சிறப்பெழுத்துக்கள் என்பது அறிவித்தற்காக இறுதிக்கண் வைக்கப்பட்டன. வடமொழியில் லகரமே ளகரமாக உச்சரிக்கப்படுவதன்றித் தனியே ஓரெழுத்தாகாமையின் அச்சிறப்பின்மை நோக்கி ளகரம் ழகரத்தின்பின் வைக்கப்பட்டது.

36. நரமடங்கல் போல் விளங்கும் எழுத்துகள் யாவை? அவ்வாறு உவமை காட்டப்பெற்றமைக்குரிய காரணங்களைப் புலப்படுத்துக. (1968)

நரமடங்கல் போல் விளங்கும் எழுத்துக்கள் எ, ஒ என்பனவாம். நரமடங்கல் என்பது நரசிம்மமாகும்.

திருமால் நரசிம்மாவதாரம் எடுத்தபோது தலை மட்டும் சிம்மமாகவும் உடம்பு மட்டும் நர (மனித) வடிவமாகவும் அவதரித்தார். அகரக் கூறும் இகரக் கூறும் தம்முள் ஒத்து இசைத்தலால் எ என்னும் எழுத்துப் பிறத்தலானும் அகரக் கூறும் உகரக் கூறும் தம்முள் ஒத்து இசைத்தலால் ஒ என்னும் எழுத்துப் பிறத்தலானும் அவ்வெழுத்துக்கள் நரமடங்கல் போல் விளங்குவன என்று கூறப்படும்.

37. உயிரளபெடை யாவன யாவை? அவை இருபத்தொன்றுதல் எவ்வாறு ?

ஒரு நெட்டெழுத்துத் தனக்குரிய இரண்டு மாத்திரையின் மிக்கொலிக்குமாயின் அது உயிரள பெடை எனப்படும். அந்நெடிலின் இனக்குறில் அதன் பின் அடையாளமாக இடப்பெறும். இவ்வுயிரளபெடை அசைநிறையளபெடை, இன்னிசை அளபெடை, சொல் லிசை அளபெடை என மூன்று வகைப்படும். விரியால் இருபத்தொன்றாகும்.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் ஏழுநெடிலும் மொழியின் முதலிடைகடை என்ற மூன்றிடத்தும் அளபெடுத்தால் அளபெடை 21 ஆகும். எனினும் ஔ என்னும் நெடில் மொழியிடையிலும் கடையிலும் நில்லாமையின் இரண்டு குறைந்து 19 ஆகும். இனி இப்பத்தொன்பதனோடும் இன்னிசையளபெடை, சொல் லிசையளபெடை என்ற இரண்டையும் கூட்ட உயிரள பெடை 21 ஆகின்றது.

38. உயிரளபெடைக்கு இலக்கணம் கூறும் நூற்பாவில் 'இசைகெடின்' என்று பொதுப்படக் கூறினமையால் பெறப்படுபவை யாவை? (1967)

உயிரளபெடைக்கு இலக்கணம் கூறும் நூற்பாவில் 'இசைகெடின்' என்று பொதுப்படக் கூறினமையால் 'கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே எடுப்பதூஉ மெல்லா மழை.' எனக் குறில் நெடிலாய் அளபெழுந்து அலகு பெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்ப வருவனவும், உரனசைஇ உள்ளந் துணை யாகச் சென்றார் வரனசைஇ யின்னுமுளேன்' என அளபெழுந்து அலகு பெற்றும் பெறாதும் சொல்லிசை நிறைப்ப வருவனவும். 'வீழப்படுவார் கெழீஇயிலர் தாம் வீழ்வார் வீழப் படாஅ ரெனின்' என்பதனுள் கெழீஇயிலர் என அளபெழுந்து அலகு பெறாது சொல்லிசை நிறைப்ப வருவனவும் கொள்ளப்படும். இவ்வாறு கொள்ளப்படும் எனப்பட்டவையே பெறப் படுபவையாம்.

39.✓ அசைநிறையளபெடை, இன்னிசையள பெடை, சொல்லிசையளபெடைகளை விளக்குக.

அசைநிறையளபெடை: செய்யுளில் ஓசைகுன்றிய விடத்து அவ்வோசையை அசையால் நிறைவித்தற் பொருட்டு மொழியின் முதலிடை கடைகளில் ஏதேனும் ஓரோவிடத்து நின்ற நெட்டெழுத்துத் தன்மாத்திரை யின் நீண்டொலிக்குமாயின் அது அசைநிறையள பெடை எனப்படும்.

(எ-டு) உரூஅர்க் குறுநோய் உரைப்பாய் கடலைச்
செரூஅஅய் வாழிய நெஞ்சு.

ஈண்டு, உரூர் என்னும் சொல் நிரை என்னும் ஓரசைச் சீராகலானும், வெண்பாவில் முதற்கண் ஓரசைச்சீர் வருகவென்னும் ஓத்தில்லாமையானும் ஓசை குறைவதாயிற்று. ஆகவே அச்சொல்லின் இடை

நின்றரு என்னும் நெடில் அளபெழுந்து (உரு-நிரை, அர்-நேர் என ஈரசைச்சீராகி) ஓசை நிறைப்பதாயிற்று.

இன்னிசையளபெடை : செய்யுளில் ஓசைகுன்ரு வழியும் இன்னோசை தருதற்காக உண்டாகும் அள பெடை இன்னிசை அளபெடை எனப்படும்.

(எ-டு) கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்ருங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

ஈண்டுக் கெடுப்பதும் என்னும் சீர் (கெடுப்-நிரை, பதும்-நிரை எனக் கருவிளச் சீராய் விளம் முன் நேர் என்னும் இயற்சீர் வெண்டளை பெற்றுச்) செய்யுளில் ஓசை குன்ருமல் இருந்தும் கூட அச்சீரில் உள்ள ஒரு குறில் நெடிலாகிப் பின் அளபெழுந்து கெடுப்பதூஉம் என நின்று) கெடுப்-நிரை, பதூ-நிரை, உம்-நேர் எனக் கருவிளங்காய்ச் சீராகிக் காய்முன் நேர் என்னும் வெண் சீர் வெண்டளை பெற்று) இன்னோசை தந்தது.

சொல்லிசையளபெடை : ஒரு பெயர்ச்சொல் வினை யெச்சமாக மாறுங்காலத்தில் உண்டாகும் அளபெடை சொல்லிசையளபெடை எனப்படும்.

(எ-டு) உரனசைஇ உள்ளம் துணையாகச் சென்ருர்
வரனசைஇ இன்னும் உளேன்.

ஈண்டு, நசை என்பது விருப்பம் என்னும் பொருள் தருகின்ற பெயர்ச்சொல்லாகும். அது விரும்பி என்னும் பொருளில் வினையெச்சமாக மாறும்போது நசைஇ என்று அளபெடுத்தது.

40. ஒற்றளபெடை யாவது யாது? அது நாற்பத்திரண்டாதல் எவ்வாறு?

ஙஞண நமன வயலள என்ற பத்து மெய்களும் ஆய்தம் ஒன்றுமாகப் பதினொன்றும் தம் மாத்திரையில்

மிக்கொலிக்குமாயின் ஒற்றளபெடை எனப்படும். அவ்வொற்றுக்களின் பின் அவ்வவ்வொற்றுக்களே அடையாளமாக இடப்பெறும். ஆய்தத்தின் பின் மற்றோர் ஆய்தம் அடையாளமாக இடப்பெறும்.

(எ-டு) இலங்கு வெண்பிறை ஈசனடி யார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காண்.

ஈண்டு இலங்கு கலங்கு என்ற சொற்களில் உள்ள ஙகரம் தனக்குரிய அரைமாத்திரையின் மிக்கு இலங்ங்கு கலங்ங்கு என ஒரு மாத்திரையாய் அளபெடுத்தது.

ஒற்றளபெடை 42: ஙஞண நமன வயலள ஆய்தம் என்ற பதினொன்றும் குறிற்கீழ் இடை, குறிற்கீழ்க்கடை, குறிலிணைக்கீழ்இடை, குறிலிணைக்கீழ்க்கடை என்ற நான்கிடத்தும் அளபெடுக்க ஒற்றளபெடை நாற்பத்து நான்காயிற்று. இனி இவற்றுள், இருசிறகெழுப்ப எழுமுடலதுபோல் தனக்கு விதித்த முதலெழுத்துக்கள் இருமருங்கும் நின்று எழுப்ப இடைஎழுந்து ஒலிப்பதன்றி, ஆய்தம் மொழிக்கு ஈறாகாமையானும், ஙகரம் விதியீறாக வருமாறு போலத் தான் விதியீறாகவும் கூட ஈறாகாமையானும், ஆய்தத்தைக் குறிற்கீழ்க்கடை குறிலிணைக் கீழ்க்கடை என்ற இரண்டிடத்திலிருந்து கழிக்க ஒற்றளபெடை நாற்பத்திரண்டாயின.

41. விளக்குக: குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம்.

குற்றியலிகரம்: யகரம் வந்து புணருமிடத்துக் குற்றியலுகரம் திரிந்த இகரமும், மியா என்னும் அசைச்சொல்லில் மகரத்தை ஊர்ந்து வந்த இகரமும் குற்றியலிகரமாம்.

(எ-டு) நாகியாது; கேண்மியா.

குற்றியலுகரம் : தனிக் குற்றெழுத்தல்லாத மற்றை எழுத்துக்களுக்குப் பின்னே மொழியிறுதியில் வல்லின மெய்யின்மேல் ஏறிய உகரம் குற்றியலுகரமாம்.

இது நெடிற்றொடர், வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர். உயிர்த்தொடர், ஆய்தத்தொடர் என ஆறுவகைப்படும்.

(எ-டு) நாகு, கொக்கு, குரங்கு, தெள்கு, வரகு, எஃகு.

ஐகாரக்குறுக்கம் : தன்னைச்சுட்டாமல் மொழிக்கு உறுப்பாய் முதலிடைகடை என்னும் மூன்றிடத்தும் நின்ற ஐகார நெடில் ஐகாரக் குறுக்கமாம்.

(எ-டு) ஐப்பசி, வலையன், குவளை.

ஔகாரக்குறுக்கம் : தன்னைச் சுட்டாமல் மொழிக்கு உறுப்பாய் முதற்கண் நின்ற ஔகார நெடில் ஔகாரக் குறுக்கமாம்.

(எ-டு) மௌவல்.

மகரக்குறுக்கம் : ணகர னகர ஒற்றுக்களின் பின் நின்ற மகரமும், வகரத்தின் முன் (மேலே) நின்ற மகரமும் மகரக் குறுக்கமாம்.

(எ-டு) மருண்ம், போன்ம், தரும்வளவன்.

ஆய்தக்குறுக்கம்: லகரளகரவீறுகள் புணர்ச்சியால் திரிந்து உண்டாகும் ஆய்தம் ஆய்தக் குறுக்கமாம்.

(எ-டு) (கல்+தீது=) கஃறீது.

42. குற்றியலுகரம் முப்பத்தாறு எனப் பவணந்தியார் கூறியது எம்முறைபற்றி? வேறுவகையாற் கொள்ளுங்கால் நேரும் குறைபாடு யாது? விளக்குக. (1963)

ஈற்றுக்கயல் நின்ற எழுத்தை நோக்கிப் பவணந்தி யார் குற்றியலுகரம் முப்பத்தாறு எனக் கூறினர். அஃதா வது தனிநெடில் ஏழும், ஆய்தம் ஒன்றும், மொழியிடை யீறுகளில் வரப்பெருத ஒளகாரம் ஒழித்து ஒழிந்த உயிர் பதினென்றும், வல்லெழுத்தாறும், மெல்லெழுத்தாறும், வல்லெழுத்தோடு தொடராத வகரம் ஒழித்து ஒழிந்த இடையெழுத்தைந்தும் ஆகிய முப்பத்தாறெழுத்தையும் ஈற்றுக்கயலாகத் தொடரப்பட்டு வருதலின் குற்றியலுக ரம் முப்பத்தாருயிற்று.

இனி இவ்வாறு கொள்ளாது, ஈற்றுக்கயல் நின்ற அசையை நோக்கிக் குற்றியலுகரம் நாற்பத்திரண்டு எனக் கொள்வாரும் உளர்' அஃதாவது தனிக்குறில், தனிநெடில், குறிலொற்று, நெடிலொற்று, குறிலிணை, குறினெடில், குறிலிணைஒற்று. குறினெடிலொற்று என்ற அசை விகற்பம் எட்டனுள் தனிக்குறில் ஒழித்து ஒழிந்த ஏழன் பின்வரும் வல்லொற்று ஆறையும் உறழ இடம் நாற்பத்திரண்டாகும். இவ்விடத்தால் குற்றிய லுகரமும் நாற்பத்திரண்டாயின.

பவணந்தியார் கூறியவாறு ஈற்றுக்கயல் நின்ற எழுத்தை அளவாகக் கொள்ளாமல் ஈற்றுக்கயல் நின்ற அசையை அளவாகக் கொள்ளின், பிண்ணுக்குச் சுண் ணும்பு முதலியனவும் இறும்பூது முதலியனவும் எஃகு முதலியனவும் முறையே நெட்டொற்றிறுதி நெடிலிறுதி குற்ருெற்றிறுதிக் குற்றுகரம் என அடங்குமேனும் போவது வருவது முதலியன குற்றுகரத்தில் அடங்காது போகும்; (போவது வருவது என்பவற்றில் து என்னும் வல்லொற்றின் முன் நிற்பது வ என்னும் தனிக்குறில் ஆகலின் குற்றுகரம் அல்ல எனக் கூறநேரும்.) இனிப் போவது வருவது என்பவற்றை, "நெடில் முதலியன

ஈற்றுக்கயல் நிற்கவேண்டும் என்னும் யாப்புறவின்மை யின் முதற்கண் நிற்பினும் அமையும்' எனக்கொண்டு நெடிலிறுதிக் குற்றுகரம் குறிலிணை இறுதிக்குற்றுகரம் எனபாராயின் அவ்வாறு பாகுபடுத்தி இலக்கணம் செய்ததனால் மிகுதியான பயனில்லை.

43. பவணந்தியார் கருத்துப்படி குற்றியலுகரம் முப்பத்தாறுதல் எங்ஙனம்? (1966)

விடை 42-னுள் காண்க.

44. 'ணன முன்னும் வஃகான் மிசையும் மக்குறுகும்'—இது உய்த்துணர வைப்பு என்னும் உத்தியாமாறு யாங்ஙனம்? (1964)

'ண ன முன்னும்' என்னும் நூற்பாவின் பொருளை, மேல்வரும் சில நூற்பாக்களின் துணைகொண்டு உய்த் துணர்ந்துகொள்ளுமாறு செய்யப்பட்டிருத்தலின் இந் நூற்பா உய்த்துணரவைப்பு என்னும் உத்தியாகும்.

அங்ஙனம் உய்த்துணர்ந்து கொள்ளப்படுவன:- (1) ண னக்களின் முன்வந்த மகரம் செய்யும் என்வாய் பாட்டு முற்றீற்றதாகும். (2) அவ்வீற்று அயல் உகரம் கெட, அவ்வுகரம் ஊர்ந்த ளகர லகரம், மகரத்தோடு மயக்கவிதியின்மையின் ணகர னகரமாகத் திரிந்தன; அவையே ஈண்டுக் கூறப்படும் ண னக்களாம். (3) இவற்றுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரம் குறுகும். (4) இக்குறுக்கம் செய்யுட்கண்ணதாகும். (5) காணும் கூனும் என இயல்பாய் நின்ற ண னக் களின் முன் இவ்வாறு வந்து மகரம் குறுகாது.

45. 'ணனமுன்னும்........மக்குறுகும்'—இது உய்த்துணர வைப்பு என்னும் உத்தி என்பர்; விளக்குக. (1961)

விடை 44-ல் காண்க.

46. எவ்வெவ் வெழுத்திற்கு எவ்வெவ்வளவு மாத்திரை என்பதைப் பட்டியலில் அமைக்க.

| எழுத்து | மாத்திரை | எழுத்து | மாத்திரை |
|---|---|---|---|
| 1. உயிரளபெடை | 3 | 7. ஒற்றெழுத்து | $\frac{1}{2}$ |
| 2. நெட்டெழுத்து | 2 | 8. குற்றியலிகரம் | $\frac{1}{2}$ |
| 3. குற்றெழுத்து | 1 | 9. குற்றியலுகரம் | $\frac{1}{2}$ |
| 4. ஐகாரக்குறுக்கம் | 1 | 10. ஆய்தம் | $\frac{1}{2}$ |
| 5. ஔகாரக்குறுக்கம் | 1 | 11. மகரக்குறுக்கம் | $\frac{1}{4}$ |
| 6. ஒற்றளபெடை | 1 | 12. ஆய்தக்குறுக்கம் | $\frac{1}{4}$ |

குறிப்பு: உயிரளபெடை நான்கு மாத்திரை ஆதலும் ஐகார ஔகாரக் குறுக்கங்கள் ஒன்றரை மாத்திரைய ஆதலும் ஆரிடத்துள்ளும் அவைபோல்வன பிறவற்றுள்ளும் அருகி வருதல் உண்டு. உயிர்மெய்க்கு மாத்திரை, மெய்ம்மீது ஏறிய உயிரின் அளவே அளவாகும். குணசாகரர் ஐகாரத்திற்கு மாத்திரை ஒன்றரை என்பர்.

47. பின்னது நிறுத்தல் என்னும் உத்திக்கு ஓர் உதாரணம் காட்டி விளக்குக. (1965)

முறைதவறுமல் முன்வைக்கவேண்டிய ஒன்றைப் பிறிதோர் காரணம்பற்றிப் பின்னே வைத்தல் பின்னது நிறுத்தல் என்னும் உத்தியாகும்.

'மூன்று உயிரளபு; இரண்டாம் நெடில்; ஒன்றே குறிலோடு ஐஔக் குறுக்கம் ஒற்றளபு, அரை ஒற்று இஉக் குறுக்கம் ஆய்தம்; கால் குறள் மஃகான் ஆய்தம் மாத்திரை.' என்ற நூற்பாவுக்குப் பின்னர், "இயல்பெழுமாந்தர் இமைநொடி மாத்திரை' என்ற நூற்பாவை வைத்திருப்பது பின்னது நிறுத்தல் என்னும் உத்திக்கு உதாரணமாகும்.

விளக்கம்: மாத்திரை இன்னதெனக் கூறி, அதன் பின் இன்ன எழுத்துக்கு இத்துணை மாத்திரை என்று கூறுதல் முறைமையாகும். அதன்படி 'இயல்பெழு மாந்தர்' என்ற நூற்பாவுக்குப் பின் 'மூன்று உயிரளபு' என்ற நூற்பாவை வைத்திருக்கவேண்டும். இங்ஙனம் முன் வைக்கவேண்டிய நூற்பாவைப் பின் வைத்ததனால் இது பின்னது நிறுத்தல் என்னும் உத்தியாயிற்று.

மாத்திரை இன்னதென்பது ஈண்டைக்குச் சிறப் பிலதாகலானும், எழுத்துக்கட்கு அளவு கூறுதலே ஈண்டைக்குத் தேவையாகலானும் இவ்வாறு பின் வைக்கப்பட்டது.

48. தவளைப் பாய்த்து, பருந்தின் வீழ்வு— இவற்றிற்குக் காட்டுக்கள் தந்து விளக்குக.

### தவளைப்பாய்த்து

*"ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்*
*மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின்."*

இந்நூற்பா தவளைப்பாய்த்துக்கு எடுத்துக்காட்டாகும். தவளைப் பாய்த்தாவது, சிறிது நிலம் இடையிட்டுப் பாயும் தவளையின் பாய்ச்சலைப்போல ஒரு சூத்திரப் பொருள் அடுத்துள்ள சூத்திரத்தின் பொருளுடன்

தழுவாமல் இடையிட்டுச் சென்று அப்பாலுள்ள சூத்திரத்துடன் தழுவுவதாகும். "ஆவியும் ஒற்றும்" என்ற இந்நூற்பாவின் பொருள் இதற்குமுன் வந்த "இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை" என்பதைத் தழுவாமல், அப்பாலுள்ள "மூன்றுயிர் அளபு இரண்டாம் நெடில்" என்ற நூற்பாவுடன் தழுவியது. எனவே 'ஆவியும் ஒற்றும்' என்னும் இந்நூற்பா தவளைப்பாய்த்தாயிற்று.

பருந்தின் வீழ்வு

"ணனமுன்னும் வஃகான் மிசையும் மக்குறுகும்" இந்நூற்பா பருந்தின் வீழ்வுக்கு எடுத்துக்காட்டாகும். பருந்தின் வீழ்வாவது நெடுந்தூரத்தினின்று ஒன்றை வவ்வுதற்கு விழுகின்ற பருந்தின் வீழ்ச்சியைப்போல நெடுந் தூரத்தில் உள்ள ஒரு சூத்திரப்பொருள் யாதேனும் ஒரு காரணம் பற்றி இடையில் வந்து பொருந்துவதாகும். "செய்யும் என் எச்சத்து" என்னும் வினையியற் சூத்திரத்தின் பொருள், மாத்திரை குறுகும் என்ற காரணம் பற்றி எழுத்தியலில் வந்து "ணனமுன்னும் வஃகான் மிசையும் மக்குறுகும்" என்று பொருந்தியபடியால் இந்நூற்பா பருந்தின் வீழ்வாயிற்று.

49. "சுட்டியா எகர வினவழி யவ்வை— ஒட்டி ஙவ்வும் முதலாகும்மே." இந்நூற்பாவுக்குப் பதசாரம் தருக.

ஙனம் என்பது இடத்தினையும் தன்மையினையும் உணர்த்தும் பல பொருள் ஒரு சொல்லாய்வரினும் தனித்துவரும் தன்மையதன்றி முடவன் கோலூன்றி வந்தாற் போலச் சுட்டு வினக்களை முன்னிட்டு அங்ஙனம் எங்ஙனம் என வருதலான் வழி என்றும், ஏனைய மெய்களைப் போல மொழி முதல் ஆகாமையின் அவ்வோடு

என்றது அவ்வை ஒட்டி என்றும், ஒருவாற்றான் முதலாகவின் இழிவு சிறப்பாக நவ்வும் என்றும் கூறப் பட்டன. இது 'சுட்டியா எகர' என்ற நூற்பாவுக்குப் பதசாரமாகும்.

50. அருத்தாபத்தியால் கொள்ளும் இலக் கணத்திற்கு ஓர் உதாரணம் தந்து விளக்குக. (1962)

ஒரு வாக்கியத்தில் பொருந்தாவுரை காணப் பட்டால் ஆண்டைக்குப் பொருந்துமாறு, கூறப்பட்ட பொருளினின்று பிறிது ஒரு பொருளைக் கொள்வது அருத்தாபத்தி எனப்படும். (அர்த்தஸ்ய+ஆபத்தி= அருத்தாபத்தி. பொருட்பேறு.) அஃதாவது பகலுண் ணுன் பருத்திருப்பான் என்ற வாக்கியத்தில் உண்ணு மையும் பருத்தலும் பொருந்தா ஆகையால் இரவில் உண்பான் என்ற பொருள் கற்பித்துக் கொள்ளப் படும்.

நன்னூலில் 'பன்னீருயிரும் கசதந பமவய ஞங ஈரைந் துயிர்மெய்யும் மொழி முதல்' என்ற நூற்பாவில் பத்து மெய்கள் மொழிமுதலாகும் என்று கூறப்பட்டது. அதன்பின் வயஞங என்ற நான்கு மெய் இன்னின்ன உயிருடன் கூடி மொழி முதலாகும் என்று விதந்து கூறப்பட்டது. ஏனை ஆறு மெய்யும் என்னென்ன மெய்யுடன் கூடி மொழிமுதலாகும் என்று கூறப்பட வில்லை. இதனால் பொருள் தொடர்ச்சிப் பொருந்த வில்லை. எனவே, ஈண்டைக்குப் பொருள் பொருந்து மாறு 'ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டு உயிரோடும் கூடி மொழிமுதலாகும்.' என்று கற்பித்துக்கொள்ளப் பட்டது. இவ்வாறு கொண்ட முறை அருத்தாபத்தி ஆகும்.

51. எண்ணதிகாரத்துள் உயிர்மெய்யை ஓரெழுத்தாகக் குறிப்பிட்ட ஆசிரியர் பிறகு அதனை இரண்டாக வைத்து முதலும் ஈறும் என்று ஏன் கூறினார்? விளக்குக. (1968)

நன்னூலார் எண்ணதிகாரத்தில் உயிர்மெய்யை ஓரெழுத்தாக எண்ணினார்; பின்னர் இறுதிநிலையதிகாரத்தில் அதனை "நின்ற நெறியே உயிர்மெய் முதலீறே" என இரண்டாக வைத்து இலக்கணம் கூறினார்.

இங்ஙனம் கூறுதல் மாறுகொளக்கூறல் என்னும் குற்றமாகத் தோன்றினும் வேறோர் பயன்கருதிக் கூறினார் ஆகலின் குற்றமாகாது. அப்பொாடு பெய்த உப்பேபோல உயிரோடு புணர்த்திய மெய், தன்னளவு தோன்றாது ஒன்றாய் நிற்றலின் உயிர்மெய்யை ஓரெழுத்தாக எண்ணினார்; பின்னர் ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்துநின்ற நெறியான் இரண்டாய் நிற்றலானும், இடைநிலை போலி பதம் புணர்பு என்பவற்றுள் உயிர்மெய்யை இரண்டாகப் பிரித்து இலக்கணம் கூறவேண்டி யிருத்தலானும் இப்பயன்கருதி 'நின்ற நெறியே உயிர்மெய் முதலீறே' என நூற்பாச் செய்தார். ஆகவே இங்ஙனம் கூறியது பொருத்தமே யாகும்.

52. உயிர்மெய்யினை ஓரெழுத்தாக எண்ணினவர் நின்ற நெறியே உயிர்மெய் முதலீறே என்று கூறுதல் பொருந்துமா? ஆராய்க. (1961)

விடை 51-ல் காண்க.

53. 'நின்ற நெறியே..............முதலீறே'— இச்சூத்திரம் சிங்கநோக்கம் ஆவது எவ்வாறு? இதற்குப் பொருந்தாவுரை எது? ஏன்? (1959)

'நின்ற நெறியே உயிர்மெய் முதலீறே'— இச்சூத்திரம், முன்கூறப்பட்ட மொழிமுதல் மொழியீற்றுச் சூத்திரங்களையும், இனிக் கூறப்போகும் இடைநிலை போலி பதம் புணர்புச் சூத்திரங்களையும் நோக்கி நிற்றலின் சிங்க நோக்காயிற்று.

விளக்கம் : பன்னீ ருயிரும் கசதந பமவய—ஞங ஈரைந் துயிர்மெய் மொழிமுதல், என முன் கூறப்பட்ட நூற்பாவில் ககரம்முதலிய பத்து மெய்யும் மொழிமுதலாகும் என்றவிடத்து, அவ்வுயிர்மெய்யை மெய்யும் உயிருமாகப்பகுத்துக்கொள்வதற்கும் 'ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே' எனப் பின்கூறப்படும் நூற்பாவில் ஙம்முன் ககரம் இடைமயங்கும் என்றவிடத்துக் ககர உயிர்மெய்யை மெய்யும் உயிருமாகப் பகுத்துக்கொள்வதற்கும் 'நின்றநெறியே' என்ற இந்நூற்பா இடைநின்று பயன்பட்டது.

வேறுஉரை : நின்ற நெறியே என்ற இந்நூற்பா முன்நின்ற மொழிமுதல் மொழியீற்று நூற்பாக்களையே தழுவி ஆற்றொழுக்காய்த் தொடர்ந்தது என்று உரை கூறுவாரும் உளர்.

மறுப்பு : இங்ஙனம் ஆற்றொழுக்காய் வைத்து உரைகூறின் பின்னர், 'ஙம்முன் கவ்வாம்' என இடைநிலை மயக்கம் கூறிய வழியும், 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' எனப்புணர்ச்சி விதி கூறிய வழியும் உயிர்மெய்களை மெய்யும் உயிருமாகப் பகுத்துக் கொள்வதற்கு இலக்கணமின்றாய் முடியுமாகலின் அவ்வுரை பொருந்தாது.

54. போலிஎழுத்துக்கள் கூறிய நூற்பாக்களை எழுதி விளக்குக.

(1) "மகர இறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன உளவே"

அஃறிணைப் பெயர்களுட் சிலவற்றின் மகர இறுதி, னகர இறுதியாக ஒத்து நடக்கும், (அஃதாவது சில மகர இறுதிகளுக்கு னகர இறுதி போலியாக வரும்.)

(எ-டு) அகம்—அகன், குளம்—குளன்.

இவ்விறுதிப் போலியை முற்கூறியவதனால் குற்றுகர இறுதிக்கு அர்இறுதி போலியாக வருவதும் லகரத்துக்கு ரகரம் போலியாக வருவதும் கொள்ளப்படும்.

(எ-டு) சுரும்பு—சுரும்பர், அரும்பு—அரும்பர்.
சாம்பல்—சாம்பர், பந்தல்—பந்தர்.

(2) "அஐ முதலிடை ஒக்கும் சஞயமுன்"

மொழிக்கு முதலிலும் இடையிலும் சகர ஞகர யகரங்களுக்கு முன்னே அகரமும் ஐகாரமும் ஒத்து நடக்கும். (அஃதாவது அகரத்துக்கு ஐகாரம் போலியாக வரும்.)

(எ-டு) பசல்—பைசல், மஞ்சு—மைஞ்சு, மயல்—மையல்.
அமச்சு—அமைச்சு, இலஞ்சி—இலைஞ்சி,
அரயர்—அரையர்.

(3) "ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே."

மொழியிடையில் ஐகார யகரங்கட்குப்பின் ஒரோவழி நகரத்தோடு ஞகரம் ஒத்து நடக்கும். (அஃதாவது நகரத்துக்கு ஞகரம் போலியாக வரும்.)

(எ-டு) மைந்நின்ற — மைஞ்ஞின்ற.
செய்ந்நின்ற — செய்ஞ்ஞின்ற.

55. போலி கூறிய நூற்பாக்களை இடைநிலை மயக்கத்துள் அடக்குவது பொருந்துமா? ஆய்க.

'மகர விறுதி' 'அஐ முதலிடை', 'ஐகான் யவ்வழி' என்ற மூன்று நூற்பாக்களையும் மயிலைநாதர் இடைநிலை

மயக்கத்துள் அடக்கினர்; சங்கர நமச்சிவாயரும், சிவ ஞான முனிவரும் போலியுள் அடக்கினர்.

ஆய்வு: மயங்கும் எழுத்துக்கள் இரண்டும் உடன் நிற்பது இடைநிலை மயக்கம் எனப்படும்; ஒரெழுத்து நின்றவிடத்து மற்றோர் எழுத்து வந்து நின்று மொழி நிரப்புவது போலி எனப்படும். இம் மூன்று நூற்பாக் களிலும் கூறப்பட்ட இலக்கணம் ஒன்று நின்ற நிலைக் களத்து மற்றொன்று வந்து அதுபோல மொழிநிரப்பி நிற்பதாகக் கூறப்பட்டிருக்கிறதேயன்றி இரண்டெழுத் தும் உடன் நிற்கும் என்பதாகக் கூறப்படவில்லை.

மேலும், தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும் இம்முறை மாறியும் இயலும் என்ப.' என்ற நூற்பாவில் மொழியின் முதலீறு இடைநிலைகட்குப் புறனடைகூறிக் குறைவறுக்கப்பட்டது.

இன்னும், இம்மூன்று நூற்பாவிலும் முறையே உறழா நடப்பன என்றும் ஒக்கும் என்றும் உறழும் என்றும் உவமவுருபுச்சொற்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன.

எனவே, இம்மூன்று நூற்பாக்களையும் போலியுள் அடக்கவேண்டுமன்றி இடைநிலை மயக்கத்துள் அடக்குவது பொருந்தாது.

56. 'அம்முன் இகரம் யகரம்' என்ற நூற் பாவை எழுதி அதன் உரைகளை ஆய்க.

'அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐஒத் திசைக்கும்; அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன.'

என்பது நூற்பா. இந்நூற்பாவைப் போலி கூறிய தெனக் கொண்டு மயிலைநாதரும், சங்கர நமச்சிவாயரும் எழுதினர்; சந்தியக்கரம் கூறியதெனக் கொண்டு சிவஞான முனிவரும், ஆறுமுக நாவலரும் உரை

எழுதினர். இவ்விரு முறையையும் தழுவிச் சடகோப ராமாநுசாச்சாரியார் உரை எழுதினார்.

மயிலைநாதர் உரை: அகரத்தின் முன் இகரமாவது யகரமாவதுவரின் ஐகாரத்தைப்போல் ஒலிக்கும்; அகரத்தின்முன் உகரமாவது வகரமாவது வரின் ஔகாரத்தைப்போல் ஒலிக்கும். (அஃதாவது ஐகாரத்திற்கு அகர இகரமும், அகரயகரமும் போலி; ஔகாரத்திற்கு அகரஉகரமும், அகரவகரமும் போலி.)

(எ-டு) ஐவனம் — அஇவனம்; அய்வனம்.
மௌவல் — மஉவல்: மவ்வல்.

முனிவர் உரை: அகரத்தோடு யகரமும் இகரமும் கூடித் தம்முள் ஒத்து எய்தின் ஐகாரமாய் ஒலிக்கும். அகரத்தோடு வகரமும் உகரமும் கூடித் தம்முள் ஒத்து எய்தின் ஔகாரமாய் ஒலிக்கும். (அஃதாவது ஐ ஔ என்பன சந்தியக்கரம்—கூட்டெழுத்து—எனப்படும்.)

முனிவர் தரும் மறுப்பு: இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது தமிழ்நூற் பயிற்சி ஒன்று மட்டுமேயுடையார் எழுத்துப்போலி உணர்த்திற்று என்று பொருள்கொண்டு அஇ–ஐ; அய்–ஐ என உதாரணங்காட்டுவர். அவ்வாறு பொருள்கொண்டு உதாரணங் காட்டுவதனால் பெரும்பயனின்மையானும், வடநூலொடு மாறுபடுதலானும் அது பொருந்தாதென முதல் உரையைச் சிவஞான முனிவர் மறுக்கின்றார்.

ஆய்வு: (1) நன்னூலார் எழுத்திலக்கணத்தை எண் பெயர் முதலிய பன்னிரண்டாகப் பகுத்துக் கொண்டவிடத்துச் சந்தியக்கரம் என்பதை ஒன்றாகப் பகுத்துக்கொண்டில ராகலானும், (2) இந்நூற்பாவின் கருத்து, நன்னூலின் முதனூலான தொல்காப்பியத்தி

லும் போலி என்பதனுள் அடக்கப்பட்டிருத்தலானும், (3) இந்நூற்பாவைப் போலியாகக்கொண்டு உதாரணம் காட்டுதற்கேற்ப ஔவை-அவ்வை, கௌவை-கவ்வை என்ற சொற்கள் தமிழ்நூற்கண் காணப்படுதலானும், (4) மற்ற நூற்பாக்களில் உறழா நடப்பன, ஒக்கும், உறழும் என உருமவுருபுச் சொற்கள் வந்தாற்போல இந்நூற்பாவுள்ளும் ஒத்திசைக்கும், அன்ன என உவம உருபுச் சொற்கள் வந்திருத்தலானும், (5) இந்நூற் பாவைப் பிறப்பதிகாரத்துள் வைக்காது போலியைச் சாரவைத்தமையானும், (6) சிவஞான முனிவர் பெரும் பயனின்மை என்று சொல்லியவாற்றான் சிறுபயனுண்டு என அவரே உடன்படுதலானும், (7) தமிழ் இலக்கணம் வட நூலொடு மாறுபடக்கூடாது என்ற யாப்புறவின் மையானும் இந்நூற்பாவைப் போலியுள் அடக்குவதே பொருந்தும்; சந்தியக்கரம் எனல் பொருந்ாது.

57. அம்முன் இகரம் யகரம் என்ற நூற்பா விற்குக் கூறப்படும் இருவகைப் பொருள்களையும் எழுதுக. (1964)

விடை 56-னுள் காண்க.

58. எழுத்தின் சாரியைகளை எழுதுக.

கரம், காரம், கான்; அகரம், ஏனம் என்பவை எழுத்தின் சாரியைகளாகும். இவற்றுள், மெய்யெழுத் துக்களுக்கு அகரமும், உயிர் நெட்டெழுத்திற்குக் கார மும், ஐ ஔ என்பவற்றுக்குக் காரமும் கானும், உயிர்க் குறில் உயிர்மெய்க் குறில்களுக்குக் கரம் காரம் கான் என்ற மூன்றும் சாரியைகளாக வரும். ஆய்தத்திற்கு ஏனம் சாரியையாக வரும்.

(எ-டு) க, ங (அகரச்சாரியை)
ஆகாரம், ஈகாரம் (காரச்சாரியை)
ஐகாரம், ஐகான் (காரம், கான் சாரியை)
மகரம், மகாரம், மஃகான் (மூன்று சாரியை)
அஃகேனம் (ஏனச் சாரியை)

59. 'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும்' என்ற நூற்பாவிற்குப் பதசாரம் தருக.

"எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம்; அதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி இயலும் என்ப."

என்பது நூற்பா. இதன் பதசாரம்: (1) எழுத்தால் ஆகிய பதம் அரிசனம் (மஞ்சள்) முதலியவற்றால் சமைந்த சுண்ணம் (பொடி) போலாது மலராற் சமைந்த மாலைபோல் நிற்றலின் எழுத்தே என்றார். (2) ஓரெழுத் தாயினும் பிற பொருள் தருதலின் பதமாம் என்பார் தனித்து என்றார். (3) 'ஒன்று இரண்டு பல என்பன வடநூல் வழக்கு; ஒன்றல்லன வெல்லாம் பல என்பது தமிழ்வழக்கு. ஆகவே வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியர், ஓரெழுத் தொருமொழி ஈரெழுத்தொருமொழி இரண்டிறந்திசைக்குந் தொடர் மொழி என மொழியை மூன்றாகப் பிரித்தார்' என்பர் சங்கர நமச்சிவாயர். 'கல் வில் முதலிய ஈரெழுத்தொரு மொழிகளும் ஓரெழுத்துடன் மற்றோர் எழுத்துத் தொடர்ந்து நின்றே பிறபொருள் உணர்த்தலின் இவற் றைத் தொல்காப்பியர் தொடர்ந்தனவல்ல எனக் கூறினர் அல்லர்; தொடர்மொழி என வாளா கூறாது இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி என அடைகொடுத்தோதி யதே இதற்குச் சான்றாகும். ஆகவே தமிழ் நடைபற்றித் தொல்காப்பியரும் மொழியை மூன்றாகப் பிரித்தார்.'

எனச் சிவஞானமுனிவர் சங்கர நமச்சிவாயரின் கருத்தை மறுக்கின்றார். எனவே இங்ஙனம் தமிழ்நடைபற்றிச் செய்த தொல்காப்பியர்க்கு 'இரண்டெழுத்துத் தொடர்ந் தன வல்ல' எனின் அது மொழியும் அன்று என்பார் தனிநிலை ஒழிந்தவற்றைத் தொடர்ந்தும் என்றார் நன்னூலார். (4) இறிஞி; மிறிஞி என எழுத்துக்கள் தொடருமாயினும் இவை தம்மை உணர்த்துமன்றிப் பிற பொருள் தாராமையின் பதமாகாது என்பார் பொருள் தரின் என்றார். (5) 'தன்னை உணர்த்தின் எழுத்தாம்; பிறபொருளைச் சுட்டுதற் கண்ணேயாம் சொல்' என்பது அவிநயப் புறனடையாகலின் பொருள் என்பது பிறபொருள் என்பார் உணர்த்தின் என்னாது தரின் என்றார். (6) அணுத்திரள் ஒலியால் எழுத்து உண்டாயது போல எழுத்தால் மொழி உண்டாகும் என்பார் பதம்ஆம் என்றார். (7) பதவியலுக்கு மேற்கோள் ஆரியம் என்பார் மொழி என்னாது பதம் என்றார்.

60. 'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின்' — கோடிட்ட பதத்திற்கு விசேடப் பொருள் கூறுக. (1962)

விடை 59-னுள் காண்க.

61. நடத்தல் : இச்சொல் பகுபதமா? பகாப் பதமா? காரணம் காட்டி நிறுவுக. (1966)

நடத்தல் என்னும் சொல் நட எனப் பகுதியும், தல் என விகுதியுமாகச் சொல்நிலை நோக்கிப் பிரிக்கப் படுவதனால் இது பகுபதமாகின்றது.

இனி. இவ்வாறு பிரிக்கப்படினும் விகுதிக்கு வேறு பொருளின்றிப் பகுதிப்பொருளே பொருளாக நிற்றலான் (பகுப்பாற் பயனற்றுப் போதலின்) பொருணிலை நோக்கப் பகாப்பதமாகின்றது.

எனவே, நடத்தல் என்ற சொல் சொன்னிலையால் பகுபதம்; பொருணிலையால் பகாப்பதம்.

62. பகுபத உறுப்புக்கள் ஆறு யாவை? அவற்றின் பெயர்க்காரணத்தையும் தருக.

பகுபத உறுப்புக்கள் ஆறு: பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம்.

பெயர்க்காரணம்: 1. தன்னியல்பில் நிற்பதால் பகுதி எனப்பட்டது. (பிரகிருதி என்ற ஆரியச்சொல் பகுதி எனத் திரிந்தது. 2. பிறிதொன்றை வேறுபடுத்துவதால் விகுதி எனப்பட்டது, (விகிருதி என்ற ஆரியச் சொல் விகுதி எனத் திரிந்தது.) அஃதாவது தன்னியல்பில் நிற்கும் ஒருவன் உள்ளத்தை ஆடை அணி முதலியவற்றோடு ஒருத்தி முன்வந்து நின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தல் போலத் தன்னியல்பில் நிற்கும் பகுதிப்பொருளை இடைநிலை முதலியவற்றோடு விகுதி முன்வந்து நின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்துவதால் விகுதி எனப்பட்டது. 3. முதனிலையாகிய பகுதிக்கும் இறுதிநிலையாகிய விகுதிக்கும் இடைநிற்றலின் இடைநிலை எனப்பட்டது. 4. பகுதியுடன் விகுதி முதலிய புணர்ப்பைச் சார்ந்தும் ஆண்டைக்கு இயைந்தும் நிற்றலின் சாரியை எனப்பட்டது. 5. நால்வகைச் சொற்களும் ஒன்றோடொன்று சந்திக்கும் இடத்து வருதலின் சந்தி எனப்பட்டது. 6. செய்யுட்டொடை முதலியவற்றான் வலித்தல் மெலித்தல் முதலாக விகாரப்படுதலின் விகாரம் எனப்பட்டது.

63. பகுதி, விகுதி சாரியை சந்தி என்பவை காரணப்பெயர்கள்; இக்கூற்றை விருத்தியுரை கொண்டு விளக்குக. (1960)

விடை 62-னுள் காண்க.

64. எழுத்தியலிற் கூறப்படும் சாரியைக்கும் பதவியலிற் கூறப்படும் சாரியைக்கும் வேறுபாடு என்ன ?

| எழுத்தியலிற் கூறப்படும் சாரியை | பதவியலிற் கூறப்படும் சாரியை |
| --- | --- |
| 1. எழுத்துச் சாரியை எனப்படும். | 1. சொற்சாரியை எனப் படும். (பொதுச்சாரி யை எனவும் கூறப் படும்.) |
| 2. அ, கரம், காரம், கான் என்பனவாம். | 2. அன் ஆன் இன் அல் அற்று இற்று அத்து அம் தம் நம் நும் ஏ அ உ ஐ கு ன முதலியனவாம். |
| 3. தனித்துக் கூற முடியாத மெய்யைக் கூறுதற்கும், கூற முடிந்த உயிர், உயிர் மெய்களைத் தெளி வுற உணர்த்தற்கும் உதவுவன. | 3. விகுதிப் புணர்ச்சி பதப் புணச்சி உருபு புணர்ச்சிகளில் வந்து உதவுவன. |
| 4. ஒவ்வொரு எழுத் தின் பின் ஒவ் வொன்றே வரும். | 4. ஷை புணர்ச்சிகளில் ஒன்றும் பலவும் வரும். |
| 5. ஈற்றில் தான் வரும். | 5. ஈற்றிலேனும் இடை யிலேனும் வரும். |

65. பாரிசேடம் என்றால் என்ன ? உதாரண முகத்தால் விளக்குக. (1964)

கூறப்பட்டவற்றில் ஒழிந்து நின்ற ஒன்றை ஊகித்தறிவது பாரிசேடம் எனப்படும்.

அஃதாவது, "பொருதார் இருவரில் போர்க்களத்து இராகவன் வென்றான்" என்றால் "மற்றொருவனாகிய இராவணன் தோற்றான்" என்பது ஊகிக்கப்படுகிறது. பொருத இருவரில் இராகவனை நீக்க ஒழிந்து நின்ற மற்றொருவன் இராவணனே யாகலின் இஃது ஒழிவு என்னும் பாரிசேடமாம்.

பகுதி விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம் என்ற ஆறும் பகுபத உறுப்புக்கள். இவையாறும் பகாப்பதங்களேயாகும். இவற்றைப்பற்றிக் கூறவந்த நன்னூல், பகுதியைக் குறிக்கும் இடத்தில் 'தத்தம் பகாப்பதங்களே பகுதியாகும்' என்று பொதுப்படக் கூறுகிறது. ஈண்டு ஒரு சொல்லில் முதல் இடை இறுதியான இடங்களில் எவ்விடத்துள்ள பகாப்பதம் பகுதியாகும் என்பது கூறப்படவில்லை. ஆனால் விகுதி முதலியான யாவை என்பது பின் வந்த நூற்பாக்களில் விதந்து கூறப்பட்டுள்ளன. அவ்விலக்கணம் கொண்டு ஒரு சொல்லில் உள்ள பகாப்பதங்களை எல்லாம் நீக்கிப் பார்த்தால் ஒழிந்து நிற்பது முதனிலைப் பகாப்பதம் என்பது பெறப்படும். எனவே முதனிலையான பகாப்பதமே பகுதி என்பது ஊகித்தறியப்படும். இங்ஙனம் ஒழிந்து நின்றதை ஊகித்தறிந்துகொண்டதால் இது பாரிசேடமாயிற்று.

66. தவளைப் பாய்த்து, பாரிசேடம்-இவற்றை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக. (1967)

விடை: 48, 65-னுள் காண்க.

67. செம்மை, சிறுமை முதலிய வாய்பாடுகள் 'பண்பிற் பகாநிலைப் பதம்' என்று ஏன் குறிப்பிடப் பெற்றன ? விளக்குக. (1968)

செம்மை சிறுமை முதலிய வாய்பாடுகள் சொன்னிலையால் பகுபதமாயினும், மைவிகுதிக்குப் பகுதிப் பொருளன்றி வேறு பொருள் இன்மையால் பொருணிலையால் பகுக்கப்படாது என்பதற்காகப் பண்பிற் பகா என்று குறிப்பிடப்பெற்றன.

மற்றும், மெய்யினியக்கம் அகரமொடு சிவணும் என்றாற்போல இவ்வாய்பாட்டுப் பண்புகள் மைவிகுதியின்றி இயங்காமையின் இவ்விகுதியையும் பகுதியாக நிறுத்தி மேல்வரும் விகுதியோடு புணர்க்கப்படும் என்பதற்காக நிலைப்பதம் என்று குறிப்பிடப்பெற்றன.

**விளக்கம் :** செம்மை என்பது செம்-பகுதி, மை-விகுதி எனச் சொன்னிலையால் பிரிக்கப்பட்டுப் பகுபதமாயிற்று. இனிச் செம்மை என்பது பண்பு என்னும் ஒரு பொருளே தருதலின் பொருணிலையால் பகாப்பதமாயிற்று. ஆகவே பண்பிற் பகா எனப்பட்டது.

செம்மை என்பதில் மை என்னும் விகுதி பிரிக்கப்படாமல், பகுதியாய் ஒட்டி நின்று நிலைப்பதமாய் அன் என்னும் விகுதியோடு கூடிச் செய்யன் என முடிந்தது. இவ்விடத்து மை விகுதி, பகுதியுடன் ஒட்டி நிலைமொழியாக நின்று புணர்தலின் நிலைப்பதம் எனப்பட்டது.

68. 'ஈறு போதல் இடையுகரம்......பண்பிற் கியல்பே.' சூத்திரத்தை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக. (1957)

'ஈறுபோதல் இடையுகரம் இய்யாதல்
ஆதிநீடல் அடியகரம் ஐயாதல்
தன்ஒற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே.'

என்பது பண்புப் பகுதிக்குச் சிறப்பு விதி கூறிய நூற்பாவாகும். இதன் பொருள்: செம்மை சிறுமை முதலாகச் சொல்லப்பட்ட பண்புச் சொற்களின் ஈறுபோவதும், இடைநின்ற உகரம் இகரமாவதும், முதலெழுத்து நீளுவதும், முதற்கண் நின்ற அகரம் ஐகாரமாவதும், இடையில் உள்ள ஒற்று இரட்டிப்பதும், அதன் முன்னே நின்ற மெய்யெழுத்துத் திரிவதும், வரும் எழுத்திற்கு இனமான எழுத்து மிகுவதும் இவை போல்வனவும் பண்புச் சொற்களுக்கு இலக்கணமாம்.

**விளக்கம் :** 1. நன்மை+அன்=நல்லன். ஈண்டு நன்மை என்னும் பண்புச் சொல்லின் மை என்னும் ஈறுபோயிற்று. அதனால் நன்மை என்பது நல் என்றாய், 'தனிக் குறில் முன்ஒற் றுயிர்வரின் இரட்டும்' என்னும் விதிப்படி ஒற்றிரட்டி நல்லன் என முடிந்தது.

2. கருமை+அன்=கரியன். ஈண்டுக் கருமை என்னும் பண்புச் சொல்லின் மை ஈறு போய், ரு என்பது ரி என இடையுகரம் இய்யாற்று. அதனால் கருமை என்பது கரி என்றாய் 'இ ஈ ஐவழி யவ்வும்' என்னும் விதிப்படி யகர உடன்படுமெய் தோன்றிக் கரியன் என முடிந்தது.

3. பசுமை+இ=பாசி. ஈண்டுப் பசுமை என்னும் பண்புச்சொல்லின் மையீறு போய்ப், ப என்பது பா என ஆதி நீண்டது. அதனால் பசுமை என்பது பாசு என்றாய் 'உயிர் வரின் உக்குறள் மெய்விட்டோடும்' என்னும்

விதிப்படி குற்றுகரம் கெட்டு இகரம் ஏறிப் பாசி என முடிந்தது.

4. பசுமை + கண் = பைங்கண். ஈண்டுப் பசுமை என்னும் பண்புச் சொல்லின் மையீறு போய், இடை நின்ற எழுத்துக் கெட்டுப் ப என்பது பை என அடியகரம் ஐயாயிற்று. மேலும் ங் என இன எழுத்தும் மிக்கது. அதனால் பைங்கண் என முடிந்தது.

5. வெறுமை + இலை = வெற்றிலை. ஈண்டு வெறுமை என்னும் பண்புச்சொல்லின் மையீறுபோய், வெறு என்பது வெற்று எனத் தன்னொற்று இரட்டித்தது. அதனால் வெற்றிலை என முடிந்தது.

6. செம்மை + ஆம்பல் = சேதாம்பல். ஈண்டுச் செம்மை என்னும் பண்புச் சொல்லின் மையீறு போய் ஆதிநீண்டு, ம் என்பது த் என முன் நின்றமெய் திரிந்தது. அதனால் சேதாம்பல் என முடிந்தது.

7. இனம் மிகுவது பைங்கண் என்னும் நான்காம் உதாரணத்துள் அமைந்திருக்கிறது.

69. ஈறுபோதல் என்னும் நூற்பாவில் கெடுதல் என்னாது போதல் என்றும் இணையவும் என்றும் கூறியதற்கு விருத்தியுரையாளர் தரும் விளக்கம் யாது? (1960)

'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' என்ற விதியால் வந்த சாரியையாகிய அகரம், மெய்யோடு பன்னீருயிரும் புணர வருங்காலத்து நீங்கிவிடுவதைப் போலப், பண்புச்சொல்லின் மை விகுதியும், பண்புச் சொல்லொடு விகுதி முதலியன புணர வருங்காலத்து நீங்கிவிடும் என்பதற்காக ஈறு கெடுதல் என்னாது ஈறுபோதல் என்று நூற்பாச் செய்தார் நன்னூலார்.

மற்றும், ஈறுபோதல் முதலியனவாக விதந்து கூறப் பட்டனவேயன்றிக் கூறப்படாத விகாரங்களும் உள: அவை வந்தவழிக் காண்க என்பதற்காக இனையவும் என்று நூற்பாச் செய்தார் நன்னூலார்—இவ்வாறு விருத்தியுரையாளர் விளக்கம் தந்துள்ளார்.

70. 'விளம்பிய பகுதிவே றுதலும் விதியே' — இந் நூற்பாவுக்குப் பொருள் தந்து மூன்று உதாரணங்கள் காட்டுக. (1967)

'விளம்பிய பகுதி வேறுதலும் விதியே' என்பது நூற்பா. இதன் பொருள் : (நட வா முதலியன வினைப் பகுதிகளும் ஏவற்பகுதிகளுமாக வரும். இவற்றுள் நட வா முதலியன ஏவற்பகுதியாக வரும்போது விப்பி என்ற விகுதிகள் சேர்ந்து வேறுபடுதல் உண்டு. அவைபோலவே) முன் விளம்பப்பட்ட நட வா முதலிய வினைப்பகுதிகளும் விப்பி என்ற விகுதிகள் சேர்ந்து வேறுபடுதலும் உண்டு, இது விதியேயாகும்; விலக் கன்று.

(உ-ம்) 1. நடப்பித்தான் (இதில் நட என்னும் வினைப்பகுதி பி என்னும் விகுதி பெற்று வேறுபட்டு நின்றது). 2. நடப்பித்தான் (இதில் நட என்னும் வினைப்பகுதி பி என்னும் விகுதி இரட்டிக்கப்பெற்று வேறுபட்டு நின்றது). 3. நடத்துவிப்பித்தான் (இதில் நட என்னும் பகுதி நடத்து எனப் பிறவினையாய் அதன்பின் விப்பி என்னும் விகுதிகள் பெற்று வேறு பட்டு நின்றது).

71. காலம் காட்டும் இடைநிலைகளைக் கூறும் நூற்பாக்களை எழுதி விளக்குக.

## இடைநிலை கூறும் நூற்பாக்கள்

1. 'தடற ஒற்று இன்னே ஐம்பால் மூவிடத்து
இறந்த காலம் தரும்தொழில் இடைநிலை.'

பொருள் : தகர டகர றகர ஒற்றுக்களும் இன் என்பதும் ஐந்து பாலிலும் மூவிடத்திலும் வந்து இறந்த காலத்தைத் தருகின்ற வினை இடைநிலையாகும்.

(எ-டு) நடந்தான், உண்டான், சென்றான், உறங்கினான்.

2 'ஆநின்று கின்றுகிறு மூவிடத்தின்
ஐம்பால்நிகழ்பொழுது அறைவினை இடைநிலை.'

பொருள் : ஆநின்று, கின்று, கிறு என்ற மூன்றும் ஐம்பாலிலும் மூவிடத்திலும் வந்து நிகழ்காலத்தைத் தருகின்ற வினை இடைநிலையாகும்.

(எ-டு) நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான்.

3. 'பவ்வ மூவிடத்து ஐம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலையாம்; இவை சில இல.'

பொருள் : பகர வகர ஒற்றுக்கள் இரண்டும் ஐம்பாலிலும் மூவிடத்திலும் வந்து எதிர்காலத்தைத் தருகின்ற வினை இடைநிலையாகும். ஈண்டுக் கூறப்பட்ட தகர முதலாக வகர மீறாகவுள்ள ஒன்பது இடைநிலைகளும் சில வினைகளுள் இல்லாமற் போதலும் உண்டு. (அவ்வழி விகுதியேனும் பகுதியேனும் காலத்தைக் காட்டும்.)

(எ-டு) நடப்பான், வருவான். (உண்க, வாழிய, என்பவற்றில் விகுதியும், பெற்றான் உற்றான் என்பவற்றில் பகுதியும் காலம் காட்டின.)

72. 'றவ்வொடு உகரம்' என்ற நூற்பாவில் "செய்யு நிகழ் பெதிர்வும்' என்ற இலக்கணம் எச்சத்திற்கா ? முற்றிற்கா ? ஆய்க. (1962)

'றவ்வொடு உகரம்' என்ற நூற்பாவில் 'செய்யும் நிகழ்பு எதிர்வும்' என்ற இலக்கணம் 'எச்சம் முற்று ஆகிய இரண்டிற்கும் உரியது' என்ற முறையில், 'செய்யும் என்னும் வாய்பாட்டு வினைகள் நிகழ்காலமும் எதிர் காலமும் காட்டும்' என மயிலைநாதர் உரை எழுதி யுள்ளார்.

ஆனால் சங்கர நமச்சிவாயரும், சிவஞான முனி வரும், 'செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றீறு நிகழ் காலமும் எதிர்காலமும் காட்டும்' என்று உரை எழுதி யுள்ளனர். காரணமும் காட்டியுள்ளனர்.

காரணம்: செய்யுமென்னும் வாய்பாட்டு எச்சமும் இடைநிலையின்றி ஈற்றினால் காலம் காட்டக் கூடியதாக இருப்பினும் அவ்வெச்சம் எதிர்காலம் காட்டும் என் பதை வினையியலில் செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டில் காலமும் செயலும் தோன்றி என்ற நூற் பாவில் நன்னூலார் விதந்து கூறியுள்ளார். அதைப் போலச் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றுச்சொல் காலம் காட்டுமென்று பின்னர் விதந்து கூறப்பட வில்லை. எனவே ஈண்டு றவ்வொடு உகரம் என்ற நூற்பாவில் வரும் செய்யும் என்பதன் இலக்கணம் முற்றிற்கே யாகும்.

73. நடவான்: இச்சொல்லுக்குப் பகுபத உறுப்புக்கள் கூறுக. (1968)

நட + ஆ + ஆன் = நடவான்

நடவான் என்னும் எதிர்மறை வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் ஆ என்னும் எதிர்மறை விகுதி யும் பெற்று இடையே வகர உடம்படு மெய்யும் பெற்று நடவா எனப் புணர்ந்து, அவ்வாறு புணர்ந்து நின்றதே பகுதியாய் ஆன் என்னும் ஆண்பால்

ஒருமை விகுதியுடன் கூடி ஒருமொழி மூவழிக் குறைத லும் அனைத்தே என்பதனால் விகுதியின் ஆகாரம் குறைந்து முடிந்தது. (நட-வினைப்பகுதி ; ஆ-எதிர் மறை விகுதி ; நடவா-கூட்டுப் பகுதி ; ஆன்-ஆண் பால் ஒருமை விகுதி. இனி ஒரு சாரார் ஆ என்பதை எதிர்மறை இடைநிலை எனவும் கூறுப.)

74. நன்னூலில் வடமொழியாக்கமாகக் கூறப் பட்ட இலக்கணத்தைத் தொகுத்து வரைக.

### வடமொழியாக்கம்

சமக்கிருதமொழியில் வழங்கும் சொற்கள் ஆரியச் சொற்கள் எனப்படும். அவை தமிழ் மொழியில் வந்து திரிந்தோ திரியாமலோ வழங்கும்போது வடசொற்கள் எனப்படும். இங்ஙனம் உள்ள ஆரியச் சொற்களை வட சொற்களாக ஆக்கிக்கொள்வதனையே வடமொழி ஆக்கம் என்பர்.

ஆரியமொழியில் அச்சு எனப்படும் உயிரெழுத்து 16. அல் எனப்படும் மெய்யெழுத்து 37. ஆக மொத்தம் 53 எழுத்துக்கள் உள்ளன. (இவற்றில் ஈற்றில் உள்ள இரண்டைக் கூட்டெழுத்தென விலக்கி மொத்தம் 51 என்பாரும் உளர்.)

இவ்வெழுத்துக்களில் 7, 8, 9, 10, 15, 16-ம் உயிர் கள் ஆரியத்திற்கே சிறப்பானவை. மெய்களில் கசடதப என்ற ஐ வருக்கத்திலும் முதற்கண் நிற்கும் 5 நீங்கலாக உரப்பியும் எடுத்தும் கனைத்தும் சொல்லப்படும் 15 மெய்களும், 30-ம் மெய்முதல் 37-ம் மெய்வரை உள்ள வற்றில் ளகரம் நீங்கலாக 7 மெய்களும் ஆரியத்திற்கே சிறப்பானவை. எனவே ஆரியத்தின் சிறப்பெழுத்து மொத்தத்தில் 28.

ஆரியத்தின் சிறப்பான இந்த 28 எழுத்துக்களும் தமிழ் மொழிக்கண் வரும்போது திரிந்து முடியும். அவை திரிந்து முடியும் திறன்: (1) ஏழாம் உயிர் இகரமும் இருவும் ஆகத்திரியும் (எ-டு) இடபம், இருடி. (2) மெய்களில் கசடதப என்ற ஐவருக்கத்தில் இடையே நின்றமெய்கள் அவ்வம் முதல் மெய்யாகத் திரியும். (எ-டு) விஜயம்-விசயம். (3) எட்டாவது மெய் யகரமாகத்திரியும். (எ-டு) பங்கஜம்-பங்கயம். (4) முப்பதாவது மெய் சகரமாகவோ யகரமாகவோ திரியும். (எ-டு)ஶாலா-சாலே. (5) முப்பத்தொன்ருவது மெய் சகரமாகவோ டகரமாகவோ திரியும். (எ-டு) ஷஷ்டி-சட்டி. (6) முப்பத்திரண்டாவது மெய் சகரமாகவோ தகரமாகவோ திரியும். (எ-டு)ஸித்தி-சித்தி (7) முப்பத்து மூன்ருவது மெய் அகரமாகவோ ககரமாகவோ திரியும். (எ-டு) ஹரன்-அரன், (8) முப்பத்தைந்தாவது மெய் இரண்டு ககரமெய்யாகத்திரியும். (எ-டு) பக்ஷம்-பக்கம். (9) ஆகார ஈறு ஐகார ஈருகத்திரியும். (எ-டு) மாலா-மாலே. (10) ஈகார ஈறு இகர ஈருகத்திரியும். (எ-டு) புரீ-புரி.

இனி ஆரியத்துள், (1) மொழிமுதலில் ரகரமெய் வந்தால் அதன் முன் அ, இ, உ என்பவற்றுள் ஒன்று வரும். (எ-டு) ரங்கன்-அரங்கன் ; ராமன்-இராமன் ; ரோமம்-உரோமம். (2) மொழிமுதலில் லகரமெய் வந்தால் அதன் முன் இ உ என்பவற்றுள் ஒன்று வரும். (எ-டு) லாபம்-இலாபம்; லோபம்-உலோபம். (3) மொழி முதலில் யகர மெய் வந்தால் அதன்முன் இகரம் வரும் (எ-டு) யமன்-இயமன்.

இனி ஆரியத்துள், இரண்டெழுத்து இணைந்து ஓரெழுத்து நீர்மையாய் வரும்போது (1) பின் நிற்கும் யரலக்களின் முன்பு இகரம் தோன்றும். (எ-டு) வாக்யம்—

வாக்கியம்; வக்ரம்—வக்கிரம்; சுக்லம்—சுக்கிலம், (2) பின் நிற்கும் மகர வகரங்களின் முன்பு உகரம் தோன்றும். (எ—டு) பத்மம்—பதுமம் ; பக்வம்—பக்குவம். (3) பின் நிற்கும் நகரத்துக்கு அகரம் தோன்றும். (எ—டு) ரத்நம்—அரதனம். (4) இரண்டெழுத்தில் ரகரத்திற்குப் பின் உகரம் வரும். (எ—டு) அர்த்தம்—அருத்தம்.

இனிப் பிற என்ற மிகையால் சக்தி—சத்தி எனவும், காவ்யம்—காப்பியம் எனவும், பர்வத:—பருப்பதம் எனவும், ஸ்தூல:—தூலம் எனவும், ஹஸ்த:—அத்தம் எனவும் திரிந்து வருவனவும் கொள்ளப்படும்.

75. "எட்டே யவ்வும் முப்பது சயவும் மேலொன்று சடவும் இரண்டு சதவும்"—பொருள் கூறி இரண்டற்கு உதாரணந் தருக. (1961)

ஆரிய மொழியின் மெய்களுள் எட்டாவதான ஜ என்பது யகரமாகத்திரியும்; முப்பதாவதான ශ என்பது சகரமாகவோ யகரமாகவோ திரியும். அதன்மேல் ஒன்றென்னும் முப்பத்தொன்றாவதான ஷ என்பது சகரமாகவோ டகரமாகவோ திரியும்; முப்பத்திரண்டாவதான ஸ என்பது சகரமாகவோ தகரமாகவோ திரியும்.

(எ—டு) விடை 74—னுள் காண்க.

76. பத்மம், ரத்நம், சுக்ரன், வனிதா என்ற வடமொழிச் சொற்களைத் தமிழில் எவ்வாறு எழுதுதல் வேண்டும்? விதியும் கூறுக. (1963)

(1) பத்மம் என்ற ஆரியச் சொல்லைப் பதுமம் என்று தமிழில் எழுதுதல் வேண்டும். "இணைந்தியல் காலை........மவ்வுக்கு உகரமும்........மிசை வரும்" என்ற விதிப்படி மகரத்தின் முன் உகரம் வந்து பதுமம் என்றாயிற்று.

(2) ரத்நம் என்ற ஆரியச் சொல்லை அரதனம் என்று தமிழில் எழுதுதல் வேண்டும். "இணைந்தியல் காலை.........நகரக்கு அகரமும்........மிசை வரும்" என்ற விதிப்படி நகரத்தின்முன் அகரம் வந்தும், "ரவ்விற்கு அம்முதலாம் முக்குறிலும்.......முன்வரும்" என்ற விதிப் படி மொழிமுதலில் அகரம் வந்தும், பிற என்ற மிகை யால் நகரம் னகரமாகியும் அரதனம் என்றாயிற்று.

(3) சுக்ரன் என்ற ஆரியச்சொல்லைச் சுக்கிரன் என்று தமிழில் எழுதுதல் வேண்டும். "இணைந்தியல் காலை யரலக்கு இகரமும்.........மிசை வரும்" என்ற விதிப்படி ரகரத்தின்முன் இகரம் வந்து சுக்கிரன் என்றாயிற்று.

(4) வனிதா என்ற ஆரியச் சொல்லை வனிதை என்று தமிழில் எழுதுதல் வேண்டும். ஏழாமுயிர் இய்யும் இருவும் என்ற நூற்பாவில் வந்த "ஆ ஈறு ஐயும்" என்ற விதிப்படி ஆகார ஈறு ஐகாரமாய்த் திரிந்து வனிதை என்றாயிற்று.

77. தமிழின் சிறப்பெழுத்துக்கள் யாவை?

*"றனழ எ ஒவ்வும் உயிர்மெய்யும் உயிரளபு*
*அல்லாச் சார்பும் தமிழ்; பிற பொதுவே."*

என்பது நூற்பா. தமிழ்மொழியில் உயிரெழுத்துக்களில் எஒ என்பனவும், மெய்யெழுத்துக்களில் றனழ என்பன வும், சார்பெழுத்துக்களில் உயிர்மெய்யும் உயிரளபெடை யும் ஒழிந்த ஆய்தம் ஒற்றளபெடை குற்றியலிகரம் குற் றியலுகரம் ஐகாரக்குறுக்கம் ஔகாரக்குறுக்கம் மகரக் குறுக்கம் ஆய்தக்குறுக்கம் என்பனவும் சிறப்பெழுத்துக் களாகும்.

78. வேற்றுமைப் புணர்ச்சி, அல்வழிப் புணர்ச்சி— இவற்றை விளக்கி அல்வழிப் புணர்ச்சிக்குரிய எடுத்துக்காட்டுகளைத் தருக. (1960)

இரு சொற்கள் தம்முள் புணருங் காலத்தில் ஐ, ஆல், கு, இன், அது, கண் என்னும் ஆறு வேற்றுமை யுருபுகளும் விரிந்தேனும் மறைந்தேனும் வேற்றுமைப் பொருள் நோக்கத்துடன் புணர்வது வேற்றுமைப் புணர்ச்சி எனப்படும். எனவே இப்புணர்ச்சி ஆறு வகைப்படும்.

ஐ முதலிய ஆறு வேற்றுமைப் பொருள் நோக்கமும் அல்லாத வழியில் இருசொற்கள் புணரும் புணர்ச்சி அல்வழிப் புணர்ச்சி எனப்படும். இது வினை, பண்பு, உவமை, உம்மை, அன்மொழி என ஐந்து தொகை நிலையும் எழுவாய், விளி, பெயரெச்சம், வினையெச்சம், தெரிநிலை முற்று, குறிப்பு முற்று, இடை, உரி, அடுக்கு என ஒன்பது தொகாநிலையும் ஆகப் பதினான்கு வகைப்படும்.

எடுத்துக்காட்டு

(1) 1. கொல்யானை — வினைத்தொகை
2. கருங்குதிரை — பண்புத்தொகை
3. பொற்சுணங்கு — உவமைத் தொகை
4. இராப்பகல் — உம்மைத்தொகை
5. பொற்றொடி — அன்மொழித் தொகை

(2) 1. சாத்தன் வந்தான் — எழுவாய்த்தொடர்
2. சாத்தா வா — விளித்தொடர்
3. உண்ட சாத்தன் — பெயரெச்சத்தொடர்
4. உண்டு வந்தான் — வினையெச்சத்தொடர்

5. உண்டான் சாத்தன் — தெரிநிலைமுற்றுத்தொடர்
6. குண்டுகட்டு எருமை — குறிப்புமுற்றுத்தொடர்
7. அணங்குகொல்
ஆய்மயில் — இடைச்சொற்றொடர்
8, நனிபேதை — உரிச்சொற்றொடர்
9. படைபடை — அடுக்குத்தொடர்

79. தழுவு தொடர்க்கும் தழாத் தொடர்க்கும் உள்ள வேறுபாட்டினைப் புலப்படுத்தி ஒவ்வோர் உதாரணங்காட்டி விளக்குக. (1966)

முன்நின்ற சொல் பின்வந்த சொல்லுடன் பொருள் தழுவித் தொடர்வது தழுவு தொடர் எனப்படும். முன் நின்ற சொல் பின்வந்த சொல்லுடன் பொருள் தழுவாமல் தொடர்வது தழாத்தொடர் எனப்படும். இவை தம்முள் வேற்றுமை.

**விளக்கம்:** (1) சாத்தன் வந்தான் என்ற தொடரில் சாத்தன் என்னும் சொல், வந்தான் என்னும் சொல்லுடன் பொருள் தழுவித் தொடர்ந்து நிற்கிறது. எனவே இது தழுவுதொடராகும். (2) கைக்களிறு என்ற தொடரில் கை என்னும் சொல், 'கையைக்களிறு' என உருபு விரிக்கப்பட்டபோதும் பொருள் தொடர்ச்சி கொள்ளவில்லை. எனவே இது தழாத் தொடராகும். 'சுரை யாழ அம்மி மிதப்ப' எனவும் 'இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற் பரல் அவலடைய இரலைதெரிப்ப' எனவும் வருவனவற்றில் சுரையாழ, மருப்பிற் பரல் என்பனவும் தழாத் தொடராகும்.

80. பெயரியலில் 'எட்டேவேற்றுமை' என்ற நன்னூலார் உயிரீற்றுப் புணரியலில் 'வேற்றுமை ஐம்முதல் ஆறும்' என்றது முரணாகாதோ? ஆய்க,

எழுத்ததிகாரத்தில் உயிரீற்றுப் புணரியலில், 'வேற்றுமை ஐம்முதல் ஆறும்; என்று கூறிய பவணந்தி முனிவர், சொல்லதிகாரத்தில் பெயரியலில் 'வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை' என்று கூறியுள்ளார். இங்ஙனம் ஓரிடத்தில் ஆறென்றும் மற்றோரிடத்தில் எட்டென்றும் கூறியது முன்னுக்குப் பின் முரண் போலத் தோன்றக்கூடும்.

எழுத்ததிகாரத்தில் கூறியிருப்பது வேற்றுமைப் பொருளைப்பற்றியதன்று ; வேற்றுமைப் புணர்ச்சியைப் பற்றியதாகும். அஃதாவது வேற்றுமைப் புணர்ச்சி அறுவகைப்படும் என்றவாறு.

சொல்லதிகாரத்தில் கூறியிருப்பது வேற்றுமைப் புணர்ச்சியைப் பற்றியதன்று; வேற்றுமைப் பொருளைப் பற்றியதாகும். அஃதாவது வேற்றுமைப்பொருள் எட்டு வகைப்படும் என்றவாறு.

எனவே இவ்வாறு கூறியது முரணாகாது.

இனி வேற்றுமைப் பொருள் எட்டெனில் அதனால் உண்டாகும் புணர்ச்சியும் எட்டன்றோ எனில், முதல் வேற்றுமை பெயராகலானும் எட்டாம் வேற்றுமை பெயரது விகாரமாகலானும் அவ்விரண்டிற்கும் உருபு இல்லையாகலானும் அவ்விரண்டையும் நீக்கி ஏனை ஆறு வேற்றுமைகளை மட்டும் வேற்றுமைப் புணர்ச்சி என்றார்.

81. 'விகார மனைத்து மேவலதியல்பே' என்று இயல்பு புணர்ச்சிக்கு விதி கூறப்பெற்றது ஏன்? (1968)

மலர்க்கணை தொடுத்தான் என விகாரமாயவழி மலராகிய கணையைத் தொடுத்தான் எனப் பொருள் படும். மலர்கணை தொடுத்தான் என இயல்பாய வழி

மலரையும் கணையையும் தொடுத்தான் எனப் பொருள் படும். இங்ஙனம் விகாரமாய வழியும் இயல்பாய வழியும் பொருள் வேறுபடுதலின், 'விகார மனைத்தும் மேவலதியல்பே' என்று இயல்பு புணர்ச்சிக்கும் விதி கூறவேண்டியதாயிற்று.

(மலர்க்கணை - பண்புத்தொகை; மலர் கணை - உம்மைத்தொகை.)

82. புணர்ச்சி விகாரம், செய்யுள் விகாரம்— இவைகளை விளக்கி வேறுபாட்டையும் குறிக்க.

**புணர்ச்சி விகாரம் :** நிலைமொழியும் வருமொழியும் தம்முள் புணருங்கால் இச்சொற்களின் இடையே எழுத்தேனும் சாரியையேனும் தோன்றுதலும் திரிதலும் கெடுதலும் புணர்ச்சி விகாரம் எனப்படும்.

(எ-டு) 1. பூக்கொடி, தமிழப்பிள்ளை — எழுத்தும், சாரியையும் தோன்றின.

2. பஃறலை, பனங்காய்—எழுத்தும், சாரியையும் திரிந்தன.

3. நிலவலயம்—எழுத்துக்கெட்டது.

**செய்யுள் விகாரம் :** செய்யுளகத்து அடி தொடை முதலியன நோக்கி அமைக்கவேண்டிய இடத்து, எழுத்தேனும் சொல்லேனும், வலித்தலும், மெலித்தலும், நீட்டலும், குறுக்கலும், விரித்தலும், தொகுத்தலும் செய்யுள் விகாரம் எனப்படும்.

(எ-டு) 1. 'குறுத்தாள் பூதம் சுமந்த'—குறுந்தாள் எனற்பாலது குறுத்தாள் என வலித்தல் விகாரமாயிற்று.

2. 'தண்டையின் இனக்கிளி கடிவோன்'— தட்டை எனற்பாலது தண்டை என மெலித்தல் விகாரமாயிற்று.

3. 'போத்தரூர் புல்லறிவினர்' — பொத்தரூர் எனற்பாலது போத்தரூர் என நீட்டல் விகாரமாயிற்று.

4. 'திருத்தார்நன் றென்றேன் தியேன்' — தீயேன் எனற்பாலது தியேன் எனக் குறுக்கல் விகாரமாயிற்று.

5. 'சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே' — விளையுமே எனற்பாலது விளையும்மே என விரித்தல் விகாரமாயிற்று.

6. 'சிறியிலை வெதிரின்' — சிறியஇலை எனற்பாலது சிறியிலை எனத் தொகுத்தல் விகாரமாயிற்று.

| புணர்ச்சி விகாரம் | செய்யுள் விகாரம் |
|---|---|
| 1. அல்வழி, வேற்றுமைப் பொருள் நோக்கத்தால் உண்டாகும். | 1. அடிதொடை முதலியன அமையவேண்டி உண்டாகும். |
| 2. நிலைமொழி வருமொழி என்னும் தொடர் மொழியில் மட்டும் வரும். தனி மொழியில் வாராது. | 2. தனிமொழியிலும், தொடர் மொழியிலும் வரும். |
| 3. உலக வழக்கு, செய்யுள் வழக்கு இருவிடத்திலும் வரும். | 3. செ[illegible]கண் மட்டும் வரும. உலக வழக்கில் வாராது. |
| 4. தோன்றல், திரிதல், கெடுதல் எனத் தன்னியல்பில் நிகழும். (இயற்கை) | 4. வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல் எனப் புலவனால் செய்யப்படும். (செயற்கை) |

83. 'ஒரு புணர்க்கிரண்டு மூன்று முறப்பெறும்.' இந்நூற்பாவுக்குப் பொருள் தந்து ஒவ்வோர் உதாரணங்காட்டி விளக்குக. (1967)

ஒரு புணர்க்கு இரண்டும் மூன்றும் உறப்பெறும் என்பது நூற்பா. இதன் பொருள்: ஒரு புணர்ச்சிக்கண் தோன்றல் திரிதல் கெடுதல் என்னும் புணர்ச்சி விகாரங்கள் எத்துணை வரப்பெறும் என்று ஐயுறற்க; ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் வரப்பெறும்.

(உ-ம்) 1. பூ+கொடி=பூங்கொடி. இதில் தோன்றல் விகாரம் ஒன்றுமட்டும் வந்தது. நிலம்+வலயம்= நிலவலயம். இதில் கெடுதல் விகாரம் ஒன்று மட்டும் வந்தது.

2. நிலம் + பனை = நிலப்பனை. இதில் மகரம் கெட்டுப் பகரம் தோன்றி இரண்டு விகாரங்கள் வந்தன. பல்+தலை=பஃறலை. இதில் நிலைமொழியீறும் வருமொழி முதலும் திரிந்து இரண்டு திரிதல் விகாரங்கள் வந்தன.

3. பனை+காய்=பனங்காய். இதில் நிலைமொழியீற்று ஐகாரம் கெட்டு, அம் என்னும் சாரியை தோன்றி, அச்சாரியையின் ஈறு திரிந்து மூன்று விகாரங்கள் வ[illegible]ன.

84. உடம்படுமெய் கூறிய நூற்பாவை எழுதி உரையும் உதாரணமும் தருக.

'இ ஈ ஐவழி யவ்வும், ஏனை
உயிர்வழி வவ்வும், ஏமுன் இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்.'

—இது உடம்படுமெய் கூறிய நூற்பாவாகும்.

இதன் உரை : இகர ஈகார ஐகார ஈறுகளின் முன் உயிர் முதன்மொழி வரின் யகரமெய் உடம்படு மெய் யாகும். மற்றை உயிரீற்றின்முன் உயிர்முதன்மொழி வரின் வகரமெய் உடம்படுமெய்யாகும். ஏகார ஈற்றின் முன் உயிர் முதன்மொழி வரின் யகரம் வகரம் என்ற இருமெய்யும் உடம்படுமெய்யாகும்.

(உ-ம்) மணி + அழகிது = மணியழகிது. (யகரமெய்)
விள + அழகிது = விளவழகிது. (வகரமெய்)
ஏ + ஏ = ஏயே. (யகரமெய்)
சே + அடி = சேவடி. (வகரமெய்)

85. 'விண் வத்துக் கொட்கும்'—ஈண்டு வந்துள்ள வகரமெய்யை உடம்படு மெய்யென்று கூறுதல் பொருந்துமா ? ஆராய்க. (1968)

விண் என்னும் மெய்யீற்றின் முன் அத்து என்னும் உயிர் முதன்மொழி வந்தவிடத்து இடையே வகரம் தோன்றி 'விண் வத்துக் கொட்கும்' என முடிந்துளது. இங்ஙனம் தோன்றிய வகரத்தை நச்சினார்க்கினியர் உடம்படுமெய் என்றார். இங்ஙனம் கூறுதல் பொருந்தா தென மறுத்து அவ்வகரத்தை எழுத்துப்பேறு எனச் சிவஞான முனிவர் வலியுறுத்தியுள்ளார்.

சிவஞான முனிவர் தந்த மறுப்பு: உயிரீற்றின் முன் உயிர்வந்தால் உயிரோடு உயிர்க்கு மயக்கம் (கூட்டம்) இன்மையால் அவை புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்கும். ஆகவே உடம்படாத அவ் விரண்டும் உடம்படுதற்பொருட்டு இடையே வரும் மெய்யை உடம்படுமெய் என்று கூறுப.

ஆனால், வருமொழியின் முதல் உயிர் ஏறி ஒற்றுமைப்பட்டுப் புணர்தற்குரிய மெய்யீறு உள்வழி இடையே தோன்றும் மெய்யை உடம்படுமெய் என்று கூறுதல் பொருந்தாது. இவ்வாறு தோன்றுவதை எழுத்துப் பேறெனவே கொள்ளவேண்டும்.

[இவ்விடத்து உடன்படல் என்பது உடம்படல் என மருவிற்று.]

86. 'விண்வத்துக் கொட்கும்' இவ்வாறு மெய் யீற்றின் வழிவந்த வகரத்தை உடம்படுமெய் என்று கூறுதல் பொருந்துமா ? ஆராய்க. (1965)

விடை 85-னுள் காண்க.

87. இயல்பாகும் அகரவீறுகள். ஆகார வீறுகள், முற்றுகரவீறுகள் யாவை ?

இயல்பாகும் அகர ஈறுகள்

1. செய்திய என்னும் வினையெச்சம்
2. பல்வகைப் பெயரினெச்சம்
3. வினைமுற்றுக்கள்
4. அ என்னும் ஆறும் வேற்றுமையுருபு
5. அஃறிணைப் பன்மைப் பெயரின் ஈறு
6. அம்ம என்னும் இடைச்சொல்

இயல்பாகும் ஆகார ஈறுகள்

1. ஆ
2. மா
3. மியா என்னும் முன்னிலையசை
4. வினைமுற்றுக்கள்

இயல்பாகும் முற்றுகர ஈறுகள்

1. ஒடு என்னும் மூன்றும் வேற்றுமையுருபு
2. அது என்னும் ஆறும் வேற்றுமையுருபு
3. எண்ணுப் பெயர்கள்
4. வினைத்தொகை
5. அது இது உது என்னும் சுட்டுக்கள்

88. பலசில என்ற சொற்கள் தம்முன்தாம் புணரும் புணர்ச்சி விதியைத் தருக.

'பலசில எனுமிவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும் அகரம் ஏக
லகரம் றகரம் ஆகலும் பிறவரின்
அகரம் விகற்பம் ஆகலும் உளபிற'

என்பது நூற்பா.

பலசில என்னும் இவ்விரு சொல்லும் தம்முன் தாம் வருமாயின் இயல்பாதலும், வல்லினம் மிகுதலும், நிலை மொழியீற்றில் உள்ள அகரம் கெட லகரமெய் றகர மெய்யாய்த் திரிதலும் உளவாம்.

(எ-டு) 1. பல+பல=பலபல; சில + சில=சிலசில. (இயல்பாயின.) 2. பல+பல=பலப்பல; சில+சில= சிலச்சில. (வல்லினம் மிகுந்தது.) 3. பல + பல=பற்பல; சில+சில=சிற்சில. (ஈற்று அரகம் கெட லகரம் றகர மாயிற்று.)

பிற என்ற மிகையான் அகரம் கெட லகரம் றகர மாகாமல் நிற்றலும் கொள்ளப்படும். (எ-டு) பல+பல =பல்பல; சில+சில=சில்சில.

89. 'அல்வழி யாமா மியா மூற்று முன் மிகா'— விளக்குக. (1959)

'அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா' என்பது நூற்பா. பொருள்: அல்வழிக்கண் ஆ, மா என்னும் பெயர்களும், மியா என்னும் முன்னிலை யசைச்சொல்லும், ஆகாரவீற்று அஃறிணைப் பன்மை எதிர்மறை வினைமுற்றுக்களும் ஆகிய இவற்றின்முன் வல்லினம் வரின்மிகா; இயல்பாய் முடியும்.

(எ-டு) 1. ஆ+குறிது=ஆகுறிது. 2. மா+குறிது =மாகுறிது. 3. கேண்மியா+கொற்ற=கேண்மியா கொற்ற. 4. உண்ணா+குதிரைகள்=உண்ணா குதிரைகள் (குதிரைகள் உண்ணமாட்டா.)

மேலும், இரட்டுற மொழிதல் என்னும் உத்தியான் ஆமா என்பதைக் காட்டுப்பசு என்னும் பொருளில் ஒரு சொல்லாகக்கொண்டு, இதன்முன் வரும் வல்லினம் மிகாது என்று கொள்ளப்படும். (எ-டு) ஆமா+குறிது=ஆமாகுறிது.

மற்றும் அருத்தாபத்தி என்னும் அளவையான், 'முற்றுமுன் மிகா' என்பது கொண்டு அம்முற்றுவ் வரும் வினையாலணையும் பெயர்முன் வரும் வல்லினம் மிகாது என்றும், அம்முற்று வினையெச்சமாயவழி அதன்பின் வரும் வல்லினம் மிகாது என்றும் கொள்ளப்படும்.

(எ-டு) 1. உண்ணா+குதிரைகள்=உண்ணாகுதிரைகள். (உண்ணாமல் இருந்தவை யாவையோ எனின் குதிரைகள்) 2. உண்ணா+கிடந்தன=உண்ணாகிடந்தன. (உண்ணாதனவாய்க்கிடந்தன.)

இனி உண்ணாக்குதிரைகள், உண்ணாக்கிடந்தன என வல்லினம்மிகுமேல் உண்ணா என்பதை முறையே ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாகவும், செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகவும் கொள்ள வேண்டும்.

90. நீ என்பதன் முன் வல்லினம் இயல்பாதல் "பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்" என்ற சூத்திர விதியில் அடங்காதோ? வேறு கூறியது என்னை? (1962)

'பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்களீற்று மெய் வலிவரின் இயல்பாம்; ஆவி யரமுன் வன்மை மிகா' என்னும் விதி விகாரப்படாத மொழியாய் அல்வழிக் கண்ணும் வேற்றுமைக் கண்ணும் ஆவி யரக்களில் ஓர் ஈற்றதாய் நின்று புணரும் பொதுப்பெயர்க்கே உரியது. அஃதாவது விகாரப்படாத பொதுப்பெயர்க்கு மட்டுமே' பொதுப்பெயர்.........ஆவி யரமுன் வன்மை மிகா' என்பது பொருந்தும்.

'பவ்வீ நீமீ முன்னர் அல்வழி இயல்பாம்' என்னும் விதி அஃறிணைப் பெயர்க்கும் விகாரப்பட்ட பொதுப் பெயர்க்கும் உரியது.

நீ என்பது பொதுப்பெயராயினும், அது அல்வழிக்கண் உயிரீறாயும், வேற்றுமைக்கண் நின் என நெடில் குறுகி னகர ஒற்றீறாயும் விகாரப்படுகிறது.

எனவே, நீ என்பதன் முன் வல்லினம் இயல்பாதல் 'பொதுப் பெயர் உயர்திணைப் பெயர்' என்னும் சூத்திர விதியில் அடங்காது; வேறு கூறப்படத்தான் வேண்டும்.

91. 'பவ்வீ நீமீ முன்னர் அல்வழி இயல்பாம்' என்ற விதி 'பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்கள்' என்ற சூத்திர விதியில் அடங்காதோ? வேறு கூறியது என்னை? (1961)

விடை 90-ல் காண்க.

**92.** குற்றுகர ஈறுகளின் முன் வன்கணம் எங்ஙனம் புணரும்?

1. வன்றொடர்க் குற்றுகரத்தின்முன் வன்கணம் இரு வழியிலும் மிகும்.

(எ-டு) கொக்கு+பெரிது=கொக்குப்பெரிது (அல்வழி)
கொக்கு+கால்=கொக்குக்கால் (வேற்றுமை)

2. மென்றொடர்க் குற்றுகரத்தின் முன் வன்கணம் அல்வழியில் மிகாது; வேற்றுமையில் ஒருசில வன்றொடர்க் குற்றுகரமாகி மிகும்; பெரும்பாலன மென்றொடராகவே நின்று மிகும். சில மென்றொடர்க் குற்றுகரம் ஈற்றில் ஐகாரச் சாரியை பெறுவதும் உண்டு.

(எ-டு) குரங்கு+கடிது=குரங்குகடிது (அல்)
குரங்கு+கால்=குரக்குக்கால் (வேற்)
வண்டு+கால்=வண்டுக்கால் (வேற்)
பண்டு+காலம்=பண்டைக்காலம் (அல்)

3. இடைத்தொடர்க் குற்றுகரத்தின்முன் வன்கணம் இருவழியிலும் இயல்பாகும்.

(எ-டு) தெள்கு+குறிது=தெள்குகுறிது (அல்)
தெள்கு+கால்=தெள்குகால் (வேற்)

4. ஆய்தத்தொடர்க் குற்றுகரத்தின்முன் வன்கணம் இருவழியிலும் இயல்பாகும்.

(எ-டு) எஃகு+கடிது=எஃகுகடிது (அல்)
எஃகு+கடுமை=எஃகுகடுமை (வேற்)

5. உயிர்த்தொடர்க் குற்றுகரத்தின் முன் வன்கணம் அல்வழியில் மிகாது; வேற்றுமையில் டற ஒற்றுக்கள் இரட்டி வன்றொடர்க் குற்றுகரமாகி மிகும்.

கசதப ஒற்றுக்கள் இரட்டாது உயிர்த்தொடராகவே நின்று இயல்பாகும்.

(எ-டு) வரகு+சிறிது=வரகுசிறிது (அல்)
முயிறு+கால்=முயிற்றுக்கால் (வேற்)
வரகு+கதிர்=வரகுகதிர் (வேற்)

6. நெடிற்றொடர்க் குற்றுகரத்தின் முன் வன் கணம் அல்வழியில் மிகாது; வேற்றுமையில் டற ஒற்றுக்கள் இரட்டி வன்றொடர்க் குற்றுகரமாகி மிகும்; கசதப ஒற்றுக்கள் இரட்டாது நெடிற்றொடராகவே நின்று இயல்பாகும்.

(எ-டு) ஆடு+குறிது=ஆடுகுறிது (அல்)
ஆடு+கால்=ஆட்டுக்கால் (வேற்)
நாகு+கால்=நாகுகால் (வேற்)

இவைகட்கு விதி:

1. வன்றொடர் அல்லன முன்மிகா அல்வழி.
2. இடைத்தொடர், ஆய்தத்தொடர், ஒற்று இடையின்
மிகாநெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.
3. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரகங்களுள்
றடவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.
4. மென்றொடர் மொழியுள் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொடர் ஆகா மன்னே.
5. ஐயீற் றுடைக்குற் றுகரமும் உளவே.

93. நெடிற்றொடர்க் குற்றுகரம் வேற்றுமைக் கண்ணும் அல்வழிக் கண்ணும் எவ்வாறும்? எடுத்துக்காட்டுத் தருக. (1959)

விடை 92-னுள் காண்க.

94. 'உடன்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே'—இயல்பே என்றது ஏன் ?

நிலைமொழியீற்றில் நின்ற மெய்யெழுத்தின்மேல் வருமொழிமுதலிலுள்ள உயிரெழுத்து வந்து பொருந்துவது இயல்பு புணர்ச்சியாகும். இவ்வாறு மெய்யும் உயிரும்கூடி உயிர்மெய்யாகும்போது மெய்யினது புள்ளியும் உயிரினது வடிவமும் கெட்டு நிற்றலின், இதனை விகாரப் புணர்ச்சி எனச் சிலர் கூறுவர். அங்ஙனம் கூறுவார் கூற்றை விலக்கி ஒலிவடிவில் யாக்கையும் உயிரும்போல் மெய்யினது மாத்திரை உள்ளடங்க ஒன்றுபட்டு, இரட்டைகிளைபோல் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாய் இணங்கி நிற்றலானும், ஒன்றாத தனிக்குறில்முன் ஒற்று முதலியன விகாரப்படுதலானும் ஒன்றுவதியல்பே என்றார் நன்னூலார்.

95. 'ஞணநமலவளன' என்ற நூற்பாவிற்குப் பதசாரம் தருக.

> 'ஞணநம லவளன ஒற்றிறு தொழிற்பெயர்
> ஏவல் வினை நனி யவ்வல் மெய்வரின்
> உவ்வுறும் ஏவல் உறுசில சில்வழி.'

என்பது நூற்பா. இதன் பதசாரம்: 1. உரிஞு உண்ணு என வருமொழியின்றி உகரம் பெறுதலும், மணலைவாரு சருகைவாரு எனச் சிறுபான்மை விலக்கிய ஈறு உகரம் பெறுதலும் உள என்பார் நனி என்றார். 2. யகரம் வருமொழிக்கு இகரம் விதித்தலின் யகரத்தோடு புணரும் இந்நிலைமொழியிறுதி உகரம் பெறாது என்பார். யவ்வல் மெய் என்றார். 3. உண்ணு கொற்றா, உண் கொற்றா என உகரம் பெற்றும் பெறாதும் வருவனவும், உரிஞு கொற்றா என உகரம் பெற்றே வருவனவும் உள என்பார் சில ஏவல் உறு சில்வழி என்றார்.

96. 'இல்லென் இன்மைச் சொற்கு' என்ற நூற்பாவில் விதிக்கப்பட்ட ஐகார ஆகாரங்களைச் சாரியை என்னுது விகுதி எனில் உண்டாகும் இழுக்கு என்னை ?

இன்மைப் பொருள் தரும் இல்லென்ற சொல்லுக்கு ஐகாரம் அடைய வல்லினம் விகற்பித்தலும் ஆகாரத் தொடு வன்மை மிகுவதும் ஆகும் என விதி கூறப் படுகிறது.

இங்ஙனம் கூறப்பட்ட விதியில் ஐகாரம் ஆகாரம் என்பனவற்றை முறையே குறிப்புமுற்று விகுதியும் எதிர்மறைப் பெயரெச்ச விகுதியும் எனக் கொள்ள லாகாது; சாரியைகள் என்றே கொள்ளவேண்டும்.

இல்லென் இன்மைச் சொற்கு என்ற சூத்திரம் மெய் யீற்றுப் புணரியலில் கூறப்படுதலானும், அதிலும் லகர வீற்றுக்குப் பொது விதி கூறிச் சிறப்பு விதி கூறும் வழி இன்மைப் பொருள்தரும் இல்லென்ற சொல் என விதந்து கூறினமையானும், விகுதி சேர்வதாயின் பதவியலுள் கூறவேண்டுமன்றி ஈண்டுக் கூறலாகாது ஆகலானும், ஆகாரத்தோடு வன்மை ஆகலும் என வல்லினப் பேற்றொடு ஆகாரத்தையும் உடன் நிகழ்த்திச் சாரியைப் பேருகக் கூறுதலானும், இயல்பும் ஆகும் என்றமையானும், எதிர்மறைப் பொருளை இல்லென்னும் பகுதியேயன்றி ஆகாரம் தரவேண்டாமையானும், தருமேல் இன்மைக்கு மாருய பொருளையே தரவேண்டு மாகலானும், ஆகார மறைவிகுதி தெரிநிலைக்கன்றி இல்லென்னும் குறிப்புக்கு வாராமையானும் ஈண்டுக் கூறப்பட்ட ஐகார ஆகாரங்கள் சாரியைகளே யாகும்.

சாரியை என்னாது விகுதி எனில் மேற்காட்டிய காரணங் களுடன் மாறுபட்டு இழுக்குப்படும்.

97. 'உருபின் முடிபவை ஒக்குமப் பொருளி னும்'—இதன் பொருளை எடுத்துக்காட்டுடன் விளக்கி எழுதுக. (1957)

'உருபின் முடிபவை ஒக்குமப் பொருளினும்' என்பது நூற்பா. இதன் பொருள்; உருபு புணர்ச்சிக் கண் முடியும் முடிபுகள், அவ்வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக் கண்ணும் ஒக்கும், (அஃதாவது இனி உருபு புணரியலிற் கூறப்போகும் விதிகள் இதற்குமுன் உயிரீற்றுப் புணரியலிலும் மெய்யீற்றுப் புணரியலிலும் கூறப்பட்ட வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கும் பொருந்தும்.)

விளக்கம்: (1) எல்லாம் + அது > எல்லாம் + அற்று + அது + உம் = எல்லாவற்றதும். இவ்வுருபு புணர்ச்சி முடிபு, 'எல்லாம் என்பது இழிதிணையாயின் அவற்றோடு உருபின்மேல் உம் உறுமே' என்ற உருபு புணரியலின் விதியால் முடிந்தது. எல்லாம்+கோடு> எல்லாம் + அற்று + கோடு + உம் = எல்லாவற்றுக் கோடும். இப்பொருட் புணர்ச்சி முடிபையும், முன் கண்ட உருபு புணரியல் சூத்திர விதியால் முடித்துக் கொள்ளவேண்டும்.

(2) தான்+அது=தனது. இவ்வுருபு புணர்ச்சிக்கு முடிபு 'தான் தாம் நாம் முதல் குறுகும்; யான் யாம் நீ நீர் என் எம் நின் நும் ஆம்பிற: குவ்வின் அவ்வரும்; நான்காறிரட்டல' என்ற உருபு புணரியலின் விதியால் முடிந்தது. தான் + கை = தன்கை. இப்பொருட் புணர்ச்சி முடிபையும் மேற்கண்ட உருபு புணரியல் சூத்திர விதியால் முடித்துக்கொள்ளவேண்டும்.

98. பொதுச்சாரியைகள் யாவை?

பொதுச்சாரியை (17)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அன் | 7. | அத்து | 13 | அ |
| 2. | ஆன் | 8. | அம் | 14. | உ |
| 3. | இன் | 9. | தம் | 15. | ஐ |
| 4. | அல் | 10. | நம் | 16. | கு |
| 5. | அற்று | 11. | நும் | 17. | ன |
| 6. | இற்று | 12. | ஏ | | |

பிற என்ற மிகையான் தன், தான், தாம், ஆம், ஆ என்பனவும் கொள்ளப்படும். (இவை விகுதி பதம் உருபு என்னும் மூன்று புணர்ச்சிக்கண்ணும் தனி மொழிக் கண்ணும் வருதலின் பொதுச்சாரியை எனவும், சொற்களுடன் சார்ந்தும் இயைந்தும் வருதலின் சொற் சாரியை அல்லது பதச்சாரியை எனவும் பெயர் பெறும்.)

99. 'ஆமா கோனவ் வணையவும் பெறுமே'— இதற்கு விளக்கவுரை தருக.

'ஆமா கோனவ் வணையவும் பெறுமே' என்பது நூற்பா, இதன் பொருள்: ஆ என்னும் பெயரும், மா என்னும் விலங்கின் பெயரும், கோ என்னும் இறைவனை உணர்த்தும் பெயரும் வேற்றுமை உருபுகளை ஏற்கு மிடத்து னகரச் சாரியை பொருந்துவதும் உண்டு; பொருந்தாமல் இருப்பதும் உண்டு.

(எ-டு) ஆனே, மானே, கோனே, ஆவை, மாவை, கோவை.

விளக்கம்: (1) அணையவும் என்ற எதிரது தழீஇய எச்சவும்மையான் னகரச் சாரியையுடன் உகரச் சாரியை பெறுவதும், னகரச் சாரியை இன்றி உகரச் சாரியை மட்டும் பெறுவதும்; இன்சாரியையும் உகரச் சாரியையும் பெறுவதும், இன்சாரியை மட்டும் பெறுவ தும் உண்டு. (எ-டு) ஆனுக்கு; ஆவுக்கு; ஆவினுக்கு;

ஆவினை. (2) இரட்டுற மொழிதல் என்னும் உத்தியான் ஆமா என்பதனைக் காட்டா என்னும் பொருளிற் கொண்டு இவ்விதி கொள்ளப்படும், (எ-டு) ஆமானை; ஆமானுக்கு. (3) அனையவும் என்று ஒழியாது பெறுமே என்று மிகுத்துக் கூறியவதனான் ஆ முதலிய சொற்கள் வேற்றுமை உருபு ஏற்காமல் தனித்து வரும்போதும் இவ்விதி கொள்ளப்படும். (எ-டு) ஆன்; மான்; கோன்; ஆமான். (4) ஆ கோ மா என அகர வரிசைப் படி வைக்காமல் ஆ என்பதனுடன் மா என்பதனைச் சாரவைத்தமையான் கோ என்பது இறைவன் என்பதும் மா என்பது விலங்குமா என்பதும் பெறப்பட்டன.

100. 'விகுதி பதம் சாரியை உருபு அனைத்தினும் — உரைத்த விதியின் ஓர்ந்து ஒப்பன கொளலே'--இதற்குப் பொருந்தும் உரை பொருந்தாவுரைகள் எவை? (1959)

'விகுதி பதம் சாரியை உருபு அனைத்தினும்— உரைத்த விதியின் ஓர்ந்து ஒப்பன கொளலே' என்பது நூற்பா.

பொருந்தா உரை: விகுதி பதம் சாரியை உருபு என்ற இந்நால்வகைப் புணர்ச்சியுள் ஒன்றற்குச் சொன்ன விதியை ஆராய்ந்து பொருத்தமுடையன வற்றை மற்றொன்றுக்கும் கொள்க. (இது மயிலைநாதர் கூறும் உரை.)

பொருந்தும் உரை: விகுதி பதம் சாரியை உருபு என்ற இந்நால்வகைப் புணர்ச்சிக்கண்ணும் விதிகள் பொதுப்படக் கூறப்பட்டனவேனும் அவ்வாறுரைக்கப் பட்ட விதிகளுள் 'இவ்விதி' இதற்குப் பொருந்தும் இவ்விதி இதற்குப் பொருந்தாது என உய்த்துணர்ந்து, எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்

விதியை அதற்குக் கொள்க. (இது சங்கர நமச்சிவாய ரும், சிவஞான முனிவரும், ஆறுமுக நாவலரும், சடகோபராமாநுசாச் சாரியாரும் கூறும் உரை.)

மயிலைநாதர் உரையைச் சங்கரநமச்சிவாயரும், சிவஞான முனிவரும் மறுத்துள்ளனர். அவர்கள் தரும் மறுப்பு: 1. அப்பொருளுக்கு அமைந்தசொல் இச் சூத்திரத்தில் இல்லை. 2. 'சாரியை சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை 'முன்னிப் புணர்ப்ப முடியும் எப் பதங்களும்' என்றும் 'பண்பிற்கியல்பே' என்றும், 'மெய்யுயிர் ஈறும் இருபதங்களும்' என்றும், 'உருபின் முடிபவை ஒக்குமப் பொருளினும்' என்றும், 'ஒற்றுயிர் முதலீற்றுருபுகள் புணர்ச்சியின் ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே' என்றும் கூறிய விதிகளில் அப்பொருள் அமைந்து கிடக்கிறது. எனவே மயிலை நாதர் உரை பொருந்தாது.

101. தம்மினாகிய தொழின்மொழி— விளக்குக.

பேய்கோட்பட்டான், சூர்கோட்பட்டான், புலி கோட்பட்டான் என்ற தொடர்களில் கொள்ளுதல் படுதல் என இருதொழில்கள் வருகின்றன. இவற்றில் கொள்ளுதல் என்பது பேய் சூர் புலி என்பவற்றின் தொழில். அஃதாவது தம் தொழில். படுதல் என்பது கொள்ளுதலால் ஆகிய தொழில். அஃதாவது பேய் முதலியவற்றின் தொழிலன்று; பேய் முதலிய வற்றான் ஆகியதொழில் எனவே படுதல் என்பது தம்மினாகிய தொழில் என்றும் கோள் என்பது படுதலை விசேடித்து வந்த இடைப்பிறவரல் என்றும் கொள்ள வேண்டும். ஆயினும் கோட்பட்டான் என்பது ஒற்றுமை நயம் கருதப்பட்டுத் தம்மினாகிய தொழின் மொழி எனக் கூறப்படும்.

102. புணர்ச்சி விதி கூறுக:— மாங்கொம்பு, பற்பல, பன்னிரண்டு, தமிழவளவன். (1968)

1. மா + கொம்பு = மாங்கொம்பு

'மரப்பெயர் முன்னர் இனமெல் லெழுத்து வரப் பெறுனவும் உள வேற்றுமை வழியே' என்ற விதிப் படி, மா என்னும் மரப்பெயரின் முன்னர்க் கொம்பு என்னும் ஆறும் வேற்றுமைப்பொருளில் வந்து புணர வருமொழி முதலுக்கு இனமான மெல்லெழுத்துத் தோன்றி மாங்கொம்பு என முடிந்தது.

(மா+கொம்பு > மா+ங்+கொம்பு = மாங்கொம்பு.)

2. பல + பல = பற்பல

பல என்னும் சொல் தனக்குமுன் தான் வந்து, 'பல சில எனுமிவை தம்முன் தான்வரின் இயல்பும் மிகலும் அகரம் ஏக லகரம் றகரமாதலும் பிறவரின் அகரம் விகற்பமாதலும் உளபிற' என்ற நூற்பாவில் கூறப்பட்ட அகரம் ஏக லகரம் றகரமாதலும் என்ற விதிப்படி நிலைமொழியின் அகர ஈறுகெட்டு நின்ற லகரமெய் றகரமெய்யாய்த்திரிந்து பற்பல என முடிந்தது.

(பல + பல > பல் + பல > பற் + பல = பற்பல.)

3. பத்து + இரண்டு = பன்னிரண்டு

பத்து என்னும் நிலைமொழி முன்னர் இரண்டு என்னும் வருமொழி வர, 'இரண்டு முன்வரின் பத்தி னீற்றுயிர் மெய் கரந்திட ஒற்றுனவ்வாகும் என்ப.' என்ற விதிப்படி நிலைமொழியான பத்து என்பதன் ஈற்று உயிர் மெய்யெழுத்துக்கெட்டுத் தகர ஒற்று னகர ஒற்றாய்த்திரிந்து பன் என்றாயிற்று. பன் என்பதன்

ஒற்று தனிக்குறில் முன்னொற்று உயிர்வரின் இரட்டும் என்ற விதிப்படி இரட்டி பன்ன் என்றாயிற்று. இவ்வாறு இரட்டித்த மெய்யின் மீது, 'உடன்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே' என்ற விதிப்படி வருமொழியின் முதலுயிர் ஏறிப் பன்னிரண்டு என முடிந்தது. (பத்து > பத் > பன் > பன்ன் + இரண்டு= பன்னிரண்டு.)

4. தமிழ்+வளவன்=தமிழவளவன்

தமிழ் என்னும் சொல்முன் வளவன் என்னும் சொல்வரத், 'தமிழ் அவ்வுறவும் பெறும் வேற்றுமைக்கே தாழுங் கோல்வந் துறுமே லற்றே.' என்ற விதிப்படித் தமிழ் என்னும் சொல் அகரச்சாரியை பெற்றுத் தமிழ வளவன் எனமுடிந்தது.

(தமிழ் + வளவன் > தமிழ் + அ + வளவன் = தமிழவளவன்.)

103. புணர்ச்சி விதி கூறுக:—உண்ணு குதிரைகள், மண்ணகம், வட்டவடிவம், தாழக்கோல். (1967)

1. உண்ணு+குதிரைகள்=உண்ணு குதிரைகள்

1. உண்ணு என்பதைப் பலவின்பால் எதிர்மறை வினைமுற்றாகக்கொள்ளின் உண்ணமாட்டா குதிரைகள் என்று பொருள்படும். ஈண்டு, அல்வழி ஆமா மியா முற்றுமுன் மிகா என்ற விதிப்படி உண்ணு என்னும் சொல்முன் குதிரைகள் என்பது மிகாது உண்ணு குதிரைகள் என முடிந்தது.

2. உண்ணு என்பதை வினையாலணையும் பெயராகக்கொள்ளின் உண்ணுதன யாவையோ எனின் குதிரைகள் என்று பொருள்படும். ஈண்டு அல்வழி

ஆமா மியா முற்றுமுன் மிகா என்ற நூற்பாவின் அருத்தாபத்தியால் உண்ணு என்னும் சொல்முன் குதிரைகள் என்பது மிகாது உண்ணு குதிரைகள் எனமுடிந்தது.

2. மண் + அகம்=மண்ணகம்

'தனிக் குறில் முன்னொற்று உயிர்வரின் இரட்டும்' என்ற விதிப்படி மண் என்பதன் ணகரம் இரட்டித்து. 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே' என்ற விதிப்படி இரட்டித்து நின்ற ணகர ஒற்றின்மேல் வருமொழியின் முதல் உயிர் ஏறி மண்ணகம் என முடிந்தது.

(மண் + அகம் > மண் + ண் + அகம் = மண்ணகம்.)

3. வட்டம் + வடிவம் = வட்ட வடிவம்

வட்டம் என்னும் சொல்முன் வடிவம் என்னும் சொல் வர 'மவ்வீறு ஒற்றொழிந்து உயிரீறு ஒப்பவும் வன்மைக்கு இனமாத்திரிபவும் ஆகும்' என்ற விதிப்படி வட்டம் என்பதன் மகரவீறுகெட்டு வட்ட என உயிரீறாகி, 'எண்மூவெழுத்தீற்று எவ்வகை மொழிக்கும் முன்வரு ஞநமய வக்கள் இயல்பும்' என்ற விதிப்படி வருமொழியின் வகரம் இயல்பாய் வட்டவடிவம் என முடிந்தது.

(வட்டம்+வடிவம் > வட்ட + வடிவம்=வட்டவடிவம்.)

4. தாழ்+கோல் = தாழக்கோல்

தாழக்கோல் என்பது தாழைத் திறக்கும் கோல் எனப் பொருள்பட்டு வேற்றுமைப் புணர்ச்சியாகலின் 'தமிழ் அவ்வுறவும் பெறும் வேற்றுமைக்கே தாழும் கோல் வந்துறுமேல் அற்றே.' என்ற விதிப்படித்

தாழ் என்பது அகரச் சாரியை பெற்றுத் தாழ என உயிரீறாகி, 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற விதிப்படி வல்லொற்று மிக்குத் தாழக்கோல் என முடிந்தது.

(தாழ்+கோல் > தாழ்+அ+கோல் > தாழ+க்+கோல் = தாழக்கோல்)

104. பிரித்துக் காட்டுக:— ஆயிடை, அதான்று, சார்வுழி, நாடுரி, கற்று, தெம்முனை, பன்னிரண்டு, பஞட்டு. (1967)

1. ஆயிடை = அ + இடை. (தூக்கிற் சுட்டு நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே என்ற விதிப் படி அகரச்சுட்டு நீண்டு யகர உடம்படு மெய் பெற்று முடிந்தது.)

2. அதான்று = அது + அன்று. (அது முன் வரும் அன்று ஆன்று ஆம் தூக்கின் என்ற விதிப்படி அன்று என்பது ஆன்று என நீண்டு முடிந்தது.)

3. சார்வுழி = சார் + உழி. (வ் என்னும் எழுத்துப் பேறு கொண்டு முடிந்தது.)

4. நாடுரி = நாழி + உரி. (உரி வரின் நாழியின் ஈற்றுயிர் மெய் கெட மருவும் டகரம் என்ற விதிப்படி முடிந்தது.)

5. கற்று = கன்று + ஆ. (கன்று என்னும் மென்றொடர்க் குற்றுகரம் வன்றொடராய்த் திரிந்து முடிந்தது.)

6. தெம்முனை = தெவ் + முனை. (தெவ்வென் மொழியே தொழிற்பெயரற்றே மவ்வரின் வஃகான் மவ்வுமாகும் என்ற விதிப்படி தெவ் என்பதன் வகரம் மகரமாகி முடிந்தது.)

7. பன்னிரண்டு = பத்து+இரண்டு. (இரண்டு முன்வரின் பத்தினீற் றுயிர்மெய் கரந்திட ஒற்று னவ் வாகும் என்ப என்ற விதிப்படி முடிந்தது.)

8. பனட்டு = பனை + அட்டு. (பனைமுன் ........... அட்டுறின் ஐகெட்டு அந்நீள்வுமாம் என்ற விதிப்படி நிலைமொழி ஐகாரம் கெட்டு வருமொழி அகரம் நீண்டு முடிந்தது.)

105. ஒருபாற்கு, தொடையல், பதிற்றுப்பத்து, மன்றம், நடந்தது, சாத்தனுக்கு, அவன்றனை, இல்லாப்பொருள் : இவற்றில் அமைந்துள்ள சாரியைகளைத் தனித்தனியே புலப்படுத்துக. (1967)

| புணர் மொழி | | சாரியை |
|---|---|---|
| ஒருபாற்கு | — ஒருபது + ஆன் + கு | — ஆன் |
| தொடையல் | — தொடை + அல் | — அல் |
| பதிற்றுப் பத்து | — பத்து + இற்று + பத்து | — இற்று |
| மன்றம் | — மன்று + அம் | — அம் |
| நடந்தது | — நட + த் + த் + அ + து | — அ |
| சாத்தனுக்கு | — சாத்தன் + உ + கு | — உ |
| அவன்றனை | — அவன் + தன் + ஐ | — தன் |
| இல்லாப்பொருள் | — இல் + ஆ + பொருள் | — ஆ |

106. மாங்கொம்பு, தேங்காய், கஃறீது—இவற்றிற்குப் புணர்ச்சி விதி கூறுக. (1966)

1. மாங்கொம்பு : விடை 102-னுள் காண்க.

2. தெங்கு+காய்=தேங்காய்

'தெங்கு நீண்டு ஈற்றுயிர்மெய் கெடும் காய்வரின்' என்ற விதிப்படி, காய் என்னும் சொல்வரத் தெங்கு என்னும் சொல் தேங்கு என முதல் நீண்டு, ஈற்றுயிர் மெய் கெட்டுத் தேங் என்றாகிப் பின்னர்த் தேங்காய் என முடிந்தது. (தெங்கு + காய் > தேங்கு + காய் > தேங் + காய் = தேங்காய்)

3 கல் + தீது = கஃறீது

'குறில் வழி லளத்தவ் வணையின் ஆய்த மாகவும் பெறூஉம்' என்ற விதிப்படி கல் என்னும் நிலை மொழியின் ஈற்று லகரம் ஆய்தமாகத் திரிந்து கஃ என்றாகி, னலமுன் றனவும் ணளமுன் டணவும் ஆகும் தநக்கள் ஆயுங்காலே என்ற விதிப்படி தீது என்னும் வருமொழியின் முதல் நகரம் தகரமாகத் திரிந்து றீது என்றாகிக் கஃறீது என முடிந்தது. (கல் + தீது > கஃ + றீது = கஃறீது)

107. கபிலபரணர், புளிஞ்சோறு, தேமொழி— இவற்றிற்குப் புணர்ச்சி விதி கூறுக. (1965)

1. கபிலன் + பரணன் = கபிலபரணர்

'சில விகாரமாம் உயர்திணை' என்ற விதிப்படி கபிலன், பரணன் என்பவற்றின் னகர ஈறுகள் கெட்டு ஈற்றில் ரகரமெய் ஒன்று தோன்றிக் கபிலபரணர் என முடிந்தது. (கபிலன் + பரணன் > கபில + பரண + ர் > கபிலபரணர்)

2. புளி + சோறு + புளிஞ்சோறு

'சுவைப் புளி முன் இன மென்மையும் தோன்றும்' என்ற விதிப்படி புளி என்னும் சுவைப் பெயரின் முன் வந்த சோறு என்னும் வருமொழிக்கு இனமான மெல்லினம் தோன்றிப் புளிஞ்சோறு என முடிந்தது. (புளி + சோறு > புளி + ஞ் + சோறு = புளிஞ்சோறு)

3. தேன்+மொழி=தேமொழி

'தேன்மொழி...மென்மை மேவின் இறுதியழிவும்' என்ற விதிப்படி தேன் என்னும் சொல்லின் இறுதி கெட்டுத் தேமொழி என முடிந்தது. (தேன்+மொழி> தே+மொழி=தேமொழி)

108, கூப்புகரம், ஆட்டுக்கால், பனந்திரள்—இவற்றிற்குப் புணர்ச்சி கூறுக. (1964)

1. கூப்பு+கரம்=கூப்புகரம்

கூப்பு என்னும் நிலைமொழி வன்றொடர்க் குற்றுகரம் கூப்புகரம் வினைத்தொகையாகிய அல்வழிப் புணர்ச்சி. இதற்கு இலக்கணம் விதந்து கூறப்படவில்லை. எனவே 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற பொது விதிப்படி வல்லினம் மிகவேண்டும். ஆயினும் அப்பொது விதியில் விதவாதன மன்னே என்று கூறிய மிகையான் விதவாதன சிறுபான்மை மிகா என்று கொள்ளப்படும் விதிப்படி வல்லினம் மிகாமல் கூப்புகரம் என இயல்பாய் முடிந்தது.

2. ஆடு+கால்=ஆட்டுக்கால்

ஆட்டுக்கால் என்பது ஆட்டினது கால் எனப் பொருள்பட்டு வேற்றுமைப் புணர்ச்சியாகிறது. எனவே, 'நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள் டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே' என்ற விதிப்படி ஆடு என்ற நெடிற்றொடர் டகர ஒற்று இரட்டி ஆட்டு என்றாகி, 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற விதிப்படி வல்லொற்று மிக்கு ஆட்டுக்கால் என முடிந்தது. (ஆடு+கால்>ஆட்டு+கால்> ஆட்டு + க் + கால் = ஆட்டுக்கால்.)

3. பனை + திரள் = பனந்திரள்

'பனைமுன்......வலிவரின் ஐபோய் அம்மும் திரள் வரின் உறழ்வும்' என்ற விதிப்படி பனைஎன்னும் நிலை மொழியின் ஈற்று ஐகாரம் கெட்டு அம்முச்சாரியை பெற்றுப் பனம் என்றாகி, 'மவ்வீறு......வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்' என்ற விதிப்படி பனம் என்பதன் ஈற்று மகரம் வருமொழியின் முதன்மெய்க்கு இனமாகத் திரிந்து பனந்திரள் என முடிந்தது. (பனை + திரள் > பன் + அம் + திரள் > பனம் + திரள் = பனந்திரள்.)

**109.** கஃறீது, கருப்புவில், களிற்றியானை, தெம் மன்னர்—இவற்றுள் இரண்டனைப் பிரித்து விதி கூறிப் புணர்த்துக் காட்டுக. (1963)

1. கரும்பு + வில் = கருப்புவில்

'மென்றொடர் மொழியுட்சில வேற்றுமையில் தம்மின வன்றொடராகா மன்னே' என்ற நூற்பாவின் எதிர்மறையால் 'பல வன்றொடராகும்' என்று கொள்ளப்படும் விதிப்படி கரும்பு என்னும் மென் றொடர்க் குற்றுகரம் கருப்பு என வன்றொடர்க் குற்றுகர மாகத் திரிந்து கருப்புவில் என முடிந்தது. (கரும்பு + வில் > கருப்பு + வில் = கருப்புவில்.)

2. களிறு + யானை = களிற்றியானை

இது அல்வழிப்புணர்ச்சி யாகலான், 'நெடிலோ டுயிர்த்தொடர்' என்ற நூற்பாவில் வந்த 'மிகவே' என்னும் மிகையான் 'சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டும்' என்று கொள்ளப்படும் விதிப்படி களிறு என்னும் உயிர்த்தொடர்க் குற்றுகரத்தின் றகர ஒற்று இரட்டிக் களிற்று என்றாகி, 'யகரம் வரக்குறள் உத்திரி

இகரமும்' என்ற விதியான் குற்றுகரம் குற்றிகரமாய்த் திரிந்து களிற்றியானை என முடிந்தது. (களிறு+ யானை > களிற்று+யானை > களிற்றி + யானை = களிற்றி யானை.)

110. கீழ் வருவனவற்றுள் எவையேனும் மூன்றற்குப் புணர்ச்சி விதி கூறுக: மருத்துப்பை, இற்றை நாள், தேக்குடம், தெம்முனை, காட்டரண். (1960)

1. மருந்து+பை=மருத்துப்பை

கருப்புவில் என்பதற்குக் கூறியவாறே கூறிக் கொள்க. மேலும், 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற விதிப்படி வல்லினம் மிகுந்ததையும் இணைத்துக்கொள்க. (மருந்து+பை > மருத்து+பை > மருத்து+ப்+பை=மருத்துப்பை.)

2. இன்று+நாள் = இற்றைநாள்

இது பண்புத் தொகையாய் அல்வழிப் புணர்ச்சி யாகலான் மென்றொடர் மொழியுட் சில என்ற நூற்பாவில் வந்த மன்னே என்ற மிகையான் அல்வழியுட் சில வன்றொடராகும் என்று கொள்ளப்படும் விதிப்படி இன்று என்னும் நிலைமொழி இற்று என வன்றொட ராகி, ஐயீற்றுடைக் குற்றுகரமும் உளவே என்ற விதிப் படி ஐகாரச் சாரியை பெற்று இற்றைநாள் என முடிந்தது. (இன்று+நாள் > இற்று+நாள் > இற்று+ ஐ+நாள் = இற்றை நாள்.)

3. தேன்+குடம் = தேக்குடம்

'தேன் மொழி......வலிவரின் ஈறுபோய் வலிமெலி மிகலுமாம் இருவழி' என்ற விதிப்படி தேன் என்னும் நிலைமொழியின் னகர ஈறு கெட்டுத் தே என்றாகி, வல்லெழுத்து மிக்குத் தேக்குடம் என முடிந்தது. (தேன் + குடம் > தே+க்+குடம்=தேக்குடம்.)

111. நாடுரி, எஃகுகடுமை, குண்டுகட்டு, வழு துணங்காய், தெவ்வுக்கடிது, முன்றில், கஃறீது, மகத்துக்கை—எவையேனும் ஆறினுக்குப் புணர்ச்சி விதி கூறுக. (1957)

1. நாழி+உரி=நாடுரி

'உரிவரின் நாழியின் ஈற்றுயிர்மெய் கெட மருவும் டகரம்' என்ற விதிப்படி. உரி என்னும் சொல் வந்தமையின் நாழி என்னும் நிலைமொழியின் ஈற்று உயிர் மெய்யான ழி என்பது கெட்டு டகர வொற்று வந்து நாட் என்றாகி, 'உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே' என்ற விதிப்படி நாட் என்பதன் ஈற்று மெய்ம்மீது உரி என்பதன் முதல் உயிர் ஏறி நாடுரி என முடிந்தது.

2. எஃகு+கடுமை=எஃகுகடுமை

இது வேற்றுமைப் புணர்ச்சி ஆகலானும், எஃகு என்னும் நிலைமொழி ஆய்தத் தொடர்க் குற்றுகரம் ஆகலானும், 'இடைத்தொடர் ஆய்தத்தொடர் ஒற்றிடையின் மிகா நெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை' என்ற விதிப்படி வல்லினம் மிகாது எஃகுகடுமை என இயல்பாய் முடிந்தது. (எஃகுகடுமை = இரும்பினது கடுமை)

3. குண்டு+கட்டு=குண்டுகட்டு

இது அல்வழிப் புணர்ச்சி ஆகலானும், குண்டு என்னும் நிலைமொழி மென்றொடர்க் குற்றுகரம் ஆகலானும், 'வன்றொடர் அல்லன முன்மிகா அல்வழி' என்ற விதிப்படி வல்லினம் மிகாது குண்டுகட்டு என இயல்பாய் முடிந்தது. (குண்டுகட்டு = ஆழமாகிய கண்ணையுடையது.)

4. வழுதுணை + காய் = வழுதுணங்காய்

'வேற்றுமையாயின் ஐகான் இறுமொழி ஈற்றழி வோடும் அம் ஏற்பவும் உளவே' என்ற விதிப்படி வழுதுணை என்ற நிலைமொழியின் ஈற்று ஐகாரம் கெட்டு அம்முச்சாரியை பெற்று வழுதுணம் என்றாகி, மவ்வீறு ......வன்மைக்கினமாத்திரிபவும் ஆகும்' என்ற விதிப் படி வழுதுணம் என்பதன் ஈற்று மகரம் வருமொழியின் முதன்மெய்க்கு இனமாகத் திரிந்து வழுதுணங்காய் என முடிந்தது. (வழுதுணை + காய்> வழுதுண் + காய்> வழுதுணம்+காய் = வழுதுணங்காய்.)

5. தெவ்+கடிது=தெவ்வுக்கடிது

'தெவ்வென் மொழியே தொழிற் பெயரற்றே'என்ற மாட்டேறு 'ஞ ண ந ம ல வ ள ன ஒற்றிறு தொழிற் பெயர் ஏவல் வினை நனி யவ்வல் மெய்வரின் உவ்வுறும் உருசில சில்வழி' என்ற விதியைத் தழுவ அவ்விதிப் படி தெவ்வென்னும் நிலைமொழி உகரச் சாரியை பெற்றுத் தெவ்வு என்றாகி, 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற பொது விதிப்படி வல்லொற்று மிக்குத் தெவ்வுக் கடிது என முடிந்தது. (தெவ் + கடிது > தெவ் + உ + கடிது > தெவ்வு+க்+கடிது=தெவ்வுக்கடிது.)

6. இல்+முன்=முன்றில்

இது இலக்கணப் போலியாகலின், இடையுரி வட சொலின் இயம்பிய கொளாதவும் போலியும் மரூஉவும் பொருந்திய வாற்றிற்கு இயையப் புணர்த்தல் யாவர்க் கும் நெறியே' என்ற புறனடை விதிப்படி இல், முன் என்ற சொற்கள் முன்பின்னாக மாறி நின்று இடையே றகர ஒற்றும் பெற்று முன்றில் என மரூஉவாக

முடிந்தது. (இல் + முன் > முன் + இல் > முன் + ற் + இல்=முன்றில்.)

112. புணர்ச்சிவிதி தருக: 1. பனாட்டு, 2. ஏரி கரை, 3. நாடு கிழவோன், 4. அஞ்செவி.

1. பனை+அட்டு=பனாட்டு

பனைமுன்......அட்டுறின் ஐ கெட்டு அந்நீள்வுமாம் வேற்றுமை' என்னும் விதிப்படி பனை என்னும் நிலைமொழியின் ஈற்று ஐகாரம் கெட்டுப் பன் என்றாகி அட்டு என்னும் வருமொழியின் முதலுயிர் அகரம் நீண்டு ஆட்டு என்றாகி உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவதியல்பே என்ற விதிப்படி பன் என்பதன் ஈற்று மெய்ம்மீது ஆட்டு என்பதன் முதலுயிர் ஏறிப் பனாட்டு என முடிந்தது. (பனை + அட்டு > பன் + அட்டு > பன் + ஆட்டு = பனாட்டு.)

2. ஏரி+கரை=ஏரிகரை

ஏரி, கரை என்னும் நிலைமொழி வருமொழிகளுக்கு இலக்கணம் விதந்து கூறப்படவில்லை; எனவே 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்ற பொதுவிதிப்படி வல்லினம் மிகவேண்டும். இருப்பினும் அப்பொது விதியில் 'விதவாதன மன்னே' என்று கூறிய மிகையான் விதவாதன சிறுபான்மை மிகா என்று கொள்ளப்படும் விதிப்படி வல்லினம் மிகாது என இயல்பாய் முடிந்தது.

3. நாடு+கிழவோன் = நாடுகிழவோன்

'நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள் டற வொற்றிரட்டும் வேற்றுமை மிகவே' என்ற விதிப்படி நாடு என்னும் நெடிற்றொடர்க் குற்றுகரத்தின் டகர

ஒற்று இரட்டவேண்டும்; ஆயினும் இந்நூற்பாவில் உள்ள மிகவே என்னும் மிகையான் சிறுபான்மை வேற்றுமைக்கண் இரட்டாது என்று கொள்ளப்படும் விதிப்படி டகர ஒற்று இரட்டாமல் நாடுகிழவோன் என இயல்பாய் முடிந்தது.

4. அகம்+செவி=அஞ்செவி

'அகம் முனர்ச் செவிகை வரின் இடையன கெடும்' என்ற விதிப்படி செவி என்னும் மொழி வர அகம் என்னும் நிலைமொழியின் இடைநின்ற ககர ஒற்றும் அதனை ஊர்ந்த அகர உயிரும் கெட்டு அம் என்றாகி, 'மவ்வீறு...வன்மைக்கினமாத் திரிபவும் ஆகும்' என்ற விதிப்படி அம் என்பதன் மகரம் செவி என்ற வரு மொழியின் முதன்மெய்க்கு இனமாகத் திரிந்து அஞ் செவி என முடிந்தது. (அகம்+செவி > அம்+செவி > அஞ்+செவி=அஞ்செவி.)

113. விதிகூறிப் புணர்ந்தவாற்றை விளக்குக : 1. தன்னை, 2. தனக்கு, 3. தனது, 4. என்னை, 5. மகத்துக்கை, 6. வரட்டறவும்.

1. தான்+ஐ=தன்னை

'தான் தாம் நாம் முதல் குறுகும்' என்ற விதிப்படி தான் என்பது தன் என்று குறுகித் 'தனிக்குறில்முன் ஒற்று உயிர் வரின் இரட்டும்' என்ற விதிப்படி தன் என்பதன் ஒற்று இரட்டித்து, 'உடன்மேல் உயிர் வந்து ஒன்றுவதியல்பே' என்ற விதிப்படி இரட்டிநின்ற மெய்ம்மீது ஐ என்னும் உயிர் ஏறித் தன்னை என முடிந்தது. (தான் + ஐ > தன் + ஐ > தன்ன் + ஐ = தன்னை.)

## 2. தான்+கு=தனக்கு

'தான் தாம் நாம் முதல் குறுகும்......குவ்வின் அவ்வரும் நான்கு ஆறு இரட்டல' என்ற விதிப்படி தான் என்பது தன் என்று குறுகி, அகரச் சாரியையும் பெற்று வருமொழி நான்காம் வேற்றுமையாகலின் தனிக்குறின் முன்னொற்று இரட்டாமல் தன என்றாகி, 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதபமிகும்' என்ற விதிப்படி வல்லெழுத்து மிக்குத் தனக்கு என முடிந்தது. (தான் + கு > தன் + கு > தன்+அ+கு > தன+க்+கு=தனக்கு.)

## 3. தான்+அது=தனது

'தான் தாம் நாம் முதல்குறுகும்......நான்கு ஆறு இரட்டல' என்ற விதிப்படி தான் என்பது தன் என்று குறுகி வருமொழி ஆறும் வேற்றுமையாகலின் தனிக் குறில் முன்னொற்று இரட்டாமல் 'உடன்மே லுயிர்வந் தொன்றுவதியல்பே' என்ற விதிப்படி வருமொழியின் முதலுயிர் ஏறித் தனது என முடிந்தது. (தான்+அது > தன் + அது=தனது.)

## 4. யான்+ஐ=என்னை

'தான் தாம்' என்ற நூற்பாவில் வந்த யான் யாம் நீ நீர் என் எம் நின் நும் ஆம் பிற' என்ற விதிப்படி யான் என்பது என் என்று திரிந்து, 'தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்' என்ற விதிப்படி என் என்பதன் னகர ஒற்று இரட்டி நின்ற மெய்ம்மீது 'உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே' என்ற விதிப்படி ஐ என்னும் வேற்றுமை உருபான உயிர் ஏறி என்னை என முடிந்தது. (யான் + ஐ > என் + ஐ > என்ன் + ஐ=என்னை.)

5. மக+கை=மகத்துக்கை

'இதற்கிது சாரியை எனின் அளவின்மையின்" என்ற நூற்பா விதிப்படி மக என்னும் பதமுன் கை என்னும் பதம் புணர்வழி அத்து என்னும் சாரியை வருவிக்க 'அத்தின் அகரம் அகரமுனை இல்லை' என்ற விதிப்படி மக என்னும் அகர ஈற்றின் முன் அத்துச் சாரியையின் அகரம் கெட்டு மகத்து என்றாகி, 'இயல் பினும் விதியினும்' என்ற நூற்பா விதிப்படி வல் லெழுத்து மிக்கு மகத்துக்கை என முடிந்தது. (மக+கை>மக+அத்து+கை>மக+த்து+கை > மகத்து+க்+கை=மகத்துக்கை.)

6. வர+டறவும்=வரட்டறவும்

'இதற்கிது முடிபென்று எஞ்சாது யாவும்—விதிப் பன இன்மையின் விதித்தவற் றியலான்—வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே' என்ற புறனடை விதிப்படி 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என விதித்த விதியின் இயல்பினால், 'வகுத்துரையாத டகர றகர வல்லொற்றும் மிகும்' என்று வகுத்துக்கொள்ளப்படும். அவ்வாறு கொள்ளப் படும் விதிப்படி வர என்னும் உயிரீற்றின் முன் டகர ஒற்றுமிக்கு வரட்டறவும் என முடிந்தது.

114. 'முச்சக நிழற்றும்' என்ற நூற்பாவுக்குப் பதசாரம் தருக.

'முச்சக நிழற்றும் முழுமதி முக்குடை
அச்சுதன் அடிதொழுது அறைகுவன் சொல்லே.'

என்பது நூற்பா. இதன் பதசாரம் : உலகம் தோன்றி யழியும் மாலைய (தன்மைய) என்பார் சகம் என்றும், உலகமே உருவமாயினான் உயிர் இன்புறுவதே தான்

இன்புறுவது என்பார் அக்கடவுள் முடிமேல் நிழற்றும் குடையை முச்சகத்திற்கும் நிழற்றும் என்றும், நிறைந்த தண்ணளியுடையான் என்பார், அதனை உவமை முகத்தான் குடைமேல் வைத்து முழுமதி முக்குடை என்றும், சுதந்தரமின்றித் தோன்றியழியும் உயிரும் பிறவுமாகிய சகத்திற்கு அவ்வாறு தோன்றியழியாத வன் தலைவனாகவேண்டும் என்பார் அச்சுதன் என்றும் நஞ்செயலன்று என்பார் அடிதொழுது அறைகுவன் என்றும், வரையறைப்படாத பெருமையுடையது என் பார் அவ்வாற்றல் தோன்றச் சொல் என்றும் நன் னூலார் கூறினர்.

115. சேனை, குழாம் என்றற்றொடக்கத்து ஒருமொழிகள் பல பொருள் தருதலின் "தொடர் மொழி பல பொருளன" என்பது பொருந்துமா? ஆய்க. (1962)

ஒருமொழி ஒரு பொருளன எனவும், தொடர் மொழி பல பொருளன எனவும் நன்னூலார் நூற்பாச் செய்தார்.

சேனை என்னும் ஒரு மொழி யானை குதிரை தேர் காலாள் என்ற பல பொருளையும் குழாம் என்னும் ஒரு மொழி திரண்டு நிற்கும் பல மக்களையும் உணர்த்து கின்றன. இங்ஙனம் சேனை குழாம் முதலிய ஒரு மொழிகள் பல பொருள் தருதலின் தொடர் மொழிகள் பல பொருளன என்று வகுத்த இலக்கணம் முரண் பட்டதுபோல நமக்குத் தோன்றக்கூடும்.

நன்னூலார், 'தொடர்மொழி பல பொருளன' என்று கூறியது பல சொற்களில் உள்ள பல பொரு ளையே அன்றிப் பல பொருள்கள் திரண்ட திரட்சிப் பொருளை அன்று.

மற்றும், சேனை குழாம் என்பவற்றில் உள்ள பல பொருள்களும் திரண்டுநிற்கும் ஒரு பொருளாகிய வழித்தான் சேனை என்றும் குழாம் என்றும் கூறப்படும்; அவை தனித்தனியாக நின்ற வழி அப்பெயர் எய்த மாட்டா: எனவே, சேனை குழாம் என்பனவும் பல பொருளான் இயைந்த ஒரு பொருளையே தருவனவாம்.

இக் கருத்துப் பற்றியே ஆசிரியர் அகத்தியனாரும், 'பலவின் இயைந்தவும் ஒன்றெனப்படுமே — அடிசில் புத்தகம் சேனை யமைந்த — கதவம் மாலை கம்பலம் அனைய' என்று நூற்பாச் செய்தார்.

116. 'மக்கள் தேவர் நரகர்' என்ற முறை வைப்பைத் தருக.

'மக்களுள் பிறந்தே தானமும் தவமும் இயற்றி வானமும் வீடும் எய்தற் சிறப்பினான் முன்னே மக்களை யும், அவ்வாறல்லாது எய்தற்கு அருமைச் சிறப்பினான் அவர்பின்னே தேவரையும், தீவினையால் வரும் இழி பினான் அவர்பின்னே நரகரையும் வைத்தார்' என்று மயிலைநாதர் முறைவைப்புக் கூறினார்.

'மக்களாகப் பிறந்து புண்ணிய பாவம் இயற்றி அப் புண்ணிய மிகுதியான் தேவராயும், அப்பாவ மிகுதியான் நரகராயும் பிறத்தலின் மக்கள் தேவர் நரகர் எனச் சாதன சாத்திய முறையே வைத்தார்' என்று சங்கர நமச்சிவாயர் முறைவைப்புக் கூறினார். (சாதனம்— கருவி; சாத்தியம் - அக்கருவியால் செய்துமுடிக்கும் பேறு.)

'மக்களாகப் பிறந்து புண்ணிய பாவம் இயற்றிப் புண்ணிய மிகுதியான் தேவராயும் பாவமிகுதியான் நரக ராயும் பிறத்தலின் மக்கள் தேவர் நரகர் எனச் சாதன

சாத்திய முறையே வைத்தார் என்க. அன்றியும், ஆசிரியர் தொல்காப்பியர் உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே என முன்னர்க்கூறிப் பின்னர் இவ்வென அறியும் அந்தம் (விகுதி) தமக்கிலவாகிய தெய்வம் சுட்டிய பெயர் முதலியனவும் உயர்திணை மருங்கின் பால்பிரிந்திசைக்கும் எனக் கூறலின் தேவர்களையும் உயர்திணைப் பாற்படுத்து மக்கள் தேவர் நரகர் உயர்திணை என முறை தெரித்தோதினர் எனக் கோடலும் ஆம் என்க' என்று சிவஞானமுனிவர் முறைவைப்புக் கூறினர்.

117. உயர்திணை என்பதற்குக் கொடுக்கப்பட்ட விளக்கத்தை எழுதுக.

திணை என்பது நிலம் குலம் ஒழுக்கம் எனப் பல பொருள் உணர்த்தும் பல பொருள் ஒரு சொல். ஈண்டுத்திணை என்பது குலத்தினை உணர்த்தும். ஒரு சிலர் திணை என்பது ஒழுக்கத்தை உணர்த்தும் என்பர். சாதி வேற்றுமை கருதி உலகப் பொருள்களை எல்லாம் உயர்திணை அஃறிணை என இரண்டு சாதியாக வகுத்து அவ்வேற்றுமை கருதி அவற்றை ஐம்பாலாகப் பகுத்தலே எல்லா ஆசிரியர்க்கும் கருத்தாவதன்றி ஈண்டு ஒழுக்கம் கருதவேண்டுவது இன்மையானும் அவ்வொழுக்கம் உயிரில்லனவற்றுக்கு இன்மையானும் திணை என்பதற்கு ஒழுக்கம் என்ற பொருள் கொள்ளுதல் பொருந்தாது.

உயர்ந்த திணை உயர்திணை எனவும், அது வினைத்தொகை எனவும் மயிலைநாதர் கருதுவார். உயர்திணை என்பது பண்புத்தொகை எனச் சங்கரநமச்சிவாயரும் சிவஞானமுனிவரும் கூறுவர்.

உயர்திணை என்பதை உயர்ந்த திணை என இறந்த கால வினைத்தொகையாக விரிக்கின், மரம் நாடோறும்

உயர்ந்தமை கருதி உயர்மரம் எனவும், கல்வியறிவு நாடோறும் உயர்ந்தமை கருதி அதனை உடையார் மேலேற்றி உயர்மக்கள் எனவும் கூறும் வினைத்தொகை போல உயர்திணை என்பதற்கு உயரும் புடை பெயர்ச்சி வினை, காட்சி வகையானும் கருத்து வகையானும் இன்மையின் உயர்திணை என்பது வினைத்தொகை யன்று; பண்புத் தொகையேயாம்.

118. உயர்திணை: இதனை வினைத்தொகை என்று கொள்ளுதல் பொருந்துமா? ஆராய்க. (1968)

விடை 117-னுள் காண்க.

119. 'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' — இப்பகுதிக்கு எழுதப்பட்டுள்ள விளக்கத்தை வரைக. (1963)

விடை 116, 117-னுள் காண்க.

120. இருவகைப் பேடுகள் யாவை? அவற்றைப்பற்றிக் கூறப்படும் இலக்கணம் யாது? (1957)

ஆணிலக்கணமோ அன்றிப் பெண்ணிலக்கணமோ முற்றும் நிரம்பப் பெறுமல் இரண்டிலக்கணமும் விரவி மக்கட் சாதியுட் பிறந்த உயிர் பேடு எனப்படும். இப்பேடு பெண்மைவிட்டு ஆண் அவாவுவனவாகிய பேடு எனவும், ஆண்மைவிட்டுப் பெண் அவாவுவன வாகிய பேடு எனவும் இருவகைப்படும். பேடு, அழிதூஉ, அலி, மகண்மா என்பன ஒருபொருட் கிளவிகள்.

பெண்தன்மை குறைந்து ஆண் தன்மை மிக்கிருப்பனவாகிய பேடு ஆண்பால் எனவும், ஆண் தன்மை குறைந்து பெண் தன்மை மிக்கிருப்பனவாகிய பேடு பெண்பால் எனவும் பகுக்கப்பட்டு உயர்திணையாகக் கொள்ளப்படும். அவைகள் உயர்திணையாகாமல் அஃறிணை எனக் கொள்ளப்படுதலும் உண்டு.

(எ-டு) 'பேடி யணியாளோ' — (பெண்பால்)
'பேடன் வந்தான்' — (ஆண்பால்)
'பேடு வந்தது' — (அஃறிணை)

(121) வழக்கு எத்தனை வகைப்படும்? அவற்றை விருத்தியுரைகாரர் எங்ஙனம் விளக்கியுள்ளார்? (960)




சொற்கள் உலக வழக்கினும் செய்யுள் வழக்கினும் வழங்கிவரும் முறை வழக்கு எனப்படும். தகுதி வழக்குப் போலாது எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லாற் கூறுவது இயல்பு வழக்காகும். இயல்பு வழக்குப் போலாது, ஒரு பொருளை அதற்குரிய சொல்லாற் கூறுதல் தகுதியன்று என விலக்கி வேறோர் சொல்லாற் கூறுதலே தகுதி என்று கருதிக் கூறுதல் தகுதி வழக்காகும்.

(1) இலக்கண நெறியால் வருவது இலக்கணமுடையது ஆகும். (எ–டு) நிலம், நீர், தீ, காற்று, வான். (2) இலக்கணமுடையதன்றிப் படைப்புக்காலத்து இலக்கணமுடையதோடு ஒருங்கு படைக்கப்பட்டது போல வருவது இலக்கணப் போலியாகும். (எ–டு) முன்றில், புறநகர், உலாப்புறம், கோயில். (3) தொன்றுதொட்டதன்றி இடையே இலக்கணம் சிதைந்து மரீஇயது மரூஉவாகும். (எ–டு) அருமந்த பிள்ளை, மலாடு, இந்த, யார், ஆர். [இலக்கணப் போலியினையும் மரூஉவினையும் வேறு அறிதற்குச் சான்றோர் ஆட்சியே கருவியாகும். அன்றியும் நிலை மொழி வருமொழிகள் முன்பின்னாக மாறிநிற்பன இலக்கணப்போலி எனவும் அவை ஒழிந்த சிதை வெல்லாம் மரூஉ எனவும் கொள்ளலாம்.] (4) இடக்கர் என்பது மறைத்துமொழி கிளவி என்பவாகலின் அதனை மறைத்துப் பிறிதோர் சொல்லாற் கூறுவது இடக்கரடக்கலாம். (எ–டு) கால் கழீஇ வருதும்; புலி நின்றிறந்த நீரல் ஈரம். (5) இடக்கர் போலக் கூறத்தகாத தன்றேனும் மங்கல மில்லாதவற்றை மங்கலமாகக் கூறுவது மங்கலமாகும். (எ–டு) துஞ்சினார், நன்காடு. (6) ஒரு குழுவினுள்ளார் யாதானுமொரு காரணத்தான் ஒரு பொருளினது சொற்குரிய சொல்லாற் கூறாது வேறோர் சொற்குறியாற் கூறுவது குழூஉக் குறியாம். (எ–டு) பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றல்; யானைப்பாகர் ஆடையைக் காரை என்றல்.

122. வழக்கு எத்தனை வகைப்படும்? விருத்தியுரை தந்து விளக்குக. (1959)

விடை 121–ல் காண்க.

**123. தகுதிவழக்கு என்று பெயர் அமைந்தமைக்குக் காரணங்கூறி, அதன் ஒவ்வொரு வகைக்கும் ஒவ்வோர் உதாரணம் காட்டுக. (1965)**

**விடை 121-ல் காண்க.**

124. முன்றில், கோயில்: இவை இலக்கணப் போலியாமாறு எங்ஙனம்? (1967)

இல், முன் என்பன நின்றவாறே நின்று புணராமல் நிலைமாறி முன் + இல் = முன்றில் என்று புணர்ந்தமையால் இலக்கணப் போலியாயிற்று. சொற்கள் முன் பின்னாக மாறி நின்று புணர்வது இலக்கணப் போலியாகலின்.

கோ, இல் என்பன 'இ ஈ ஐ வழி யவ்வும், ஏனை உயிர் வழி வவ்வும்' என்ற விதிப்படி வகர உடம்படுமெய் பெற்றுக் கோவில் என்று முடிவது இலக்கணமுடையது. ஆனால் இது இலக்கணமுடையது போலத் தோன்றுதொட்டு யகரமெய் பெற்றுக் கோ + ய் + இல் = கோயில் என முடிதலின் இலக்கணப் போலியாயிற்று, படைப்புக் காலத்து இலக்கணமுடையதோடொருங்கு படைக்கப்பட்டது போல வருவது இலக்கணப் போலியாகலின்.

125. குறிப்பு, வெளிப்படை — இவற்றின் இயல்புகள் யாவை? எடுத்துக்காட்டுடன் விளக்கம் தருக. (1957)

குறிப்பு: இருதிணை ஐம்பாற் பொருளைக் குறிப்பான் தரும் சொல் குறிப்பு எனப்படும். இவை, ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி, ஆகுபெயர், அன்மொழி, வினைக்குறிப்பு, முதற் குறிப்பு,

தொகைக் குறிப்பு, பல்லாற்ருன் வரும் குறிப்பு என ஒன்பது வகையாகவும் இவைபோல் பிற வகையாகவும் வரும்.

வெளிப்படை : இருதிணை ஐம்பாற் பொருளை வெளிப்படையாகத் தரும் சொல் வெளிப்படை எனப் படும்.

(எ-டு) (1) ஆயிரமக்கள் பொருதார் : பெருந் தேவி பொறையுயிர்த்த கட்டிலின்கீழ் நால்வர் மக்கள் இருந்தார். ஈண்டு மக்கள் என்னும் பொதுப் பெயரும், பொருதார் இருந்தார் என்னும் பொது வினையும் இரு திணை ஆண்பெணுள் ஒன்றனை ஒழித்து மற்ருென்றி னைக் குறிப்பால் காட்டின. இவை ஒன்ருெழி பொதுச் சொல். (2) குறுத்தாள் பூதம், மரைமலர். ஈண்டுக் குறுத்தாள் என்ற வலித்தலும் மறை என்ற முதற் குறையும் குறுந்தாள் தாமரை என்பவற்றைக் குறிப் பால் உணர்த்தின. இவை விகாரம். (3) கால் கழீஇ வருதும்; நன்காடு. ஈண்டு இடக்கரடக்கலும் மங்கல மும் தத்தம் பொருளைக் குறிப்பால் உணர்த்தின. இவை தகுதி. (4) புளி தின்ருன். ஈண்டுப் புளி என் னும் சுவைப் பெயர் பழத்தைக் குறிப்பால் உணர்த் திற்று; இது ஆகுபெயர். (5) பொற்ருெடி வந்தாள். ஈண்டுப் பொற்ருெடி என்னும் வேற்றுமைத்தொகை அதனை உடையாளைக் குறிப்பால் உணர்த்திற்று. இது வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. (6) 'சொலல் வல்லன் சோர்விலன்' ஈண்டு வல்லன் இலன் என்பன பெயர்ப்பொருளை ஒழித்து வினைக் குறிப்புப் பொருளைக் குறிப்பால் உணர்த்தின. இவை வினைக் குறிப்பு. (7) 'அறத் தாறிதுவென வேள்ளைக் கிழிபு', ஈண்டு அறத்தாறிது வென என்ற முதற்குறிப்பு அக்குறளைக் குறிப்பால்

உணர்த்திற்று. இது முதற்குறிப்பு. (8) 'அலங் குளைப் புரவி ஐவரொடு சினை இ'. ஈண்டு ஐவர் என்னும் தொகை பாண்டவர் ஐவரைக் குறிப்பால் உணர்த்திற்று. இது தொகைக் குறிப்பு. (9) கற்கறித்தும் நன்கட் டாய் என்பது நன்ருக அடவில்லை என்பதையும், நீயிர் பெரிதும் அறிதிர் என்பது ஒன்றும் அறியீர் என்பதை யும், பறவாக்குளவி என்பது காட்டுமல்லிகை என்பதை யும், உவர்க்கடலன்ன செல்வர் என்பது பிறர்க்குப் பயன்படாதவர் என்பதையும் குறிப்பால் உணர்த்தின. இவை பல்லாற்ருன் வரும் குறிப்புச் சொல். (இதன் கண் எழுத்துச் சுருக்கம், எழுத்துப் பெருக்கம், மாத்தி ரைச் சுருக்கம், விஞவுத்தரம் போன்றவைகளும் அடங் கும்.) (10) நிலம், நீர், தீ, காற்று. இவை பொருளை வெளிப்படையாக உணர்த்தின.

126. பலவாற்ருனும் வரும் குறிப்புச் சொற்கள் பொருள்களைக் குறிப்பால் உணர்த்துவதற்கு இரண்டு உதாரணம் தந்து விளக்குக. (1964)

1. கற்கறித்தும் நன்கட்டாய். 2. சோலையை ஓரெழுத்தால் என்சொல்லும் தொக்கதன்மேல்— நீலப் பேர் எவ்வெழுத்திஞல் நிரம்பும் — மாலைக் — குடை வேந்தன் சென்னி குலநதியின் பேரைக்— கடைசேர்ந்த ஓரெழுத்தாற் காண். — இவை பல்லாற்ருன் வரும் குறிப்புச் சொற்களுக்குக் காட்டப்பட்ட காட்டுக்களில் இரண்டு.

கற்கறித்தும் நன்கட்டாய் என்பது நன்ருக அட வில்லை என்ற எதிர்மறைப் பொருளைக் குறிப்பால் உணர்த்திற்று. சோலையை ஓரெழுத்தால் என் சொல் லும் என்பது கா என்பதையும் அதன்மேல் நீலப்பேர் எவ்வெழுத்திஞல் நிரம்பும் என்பது காவி என்பதையும்

கடை சேர்ந்த ஓரெழுத்தால் சென்னி குலநதியின் பேரைக் காண் என்பது காவிரி என்பதையும் குறிப்பால் உணர்த்தின. இது எழுத்துப் பெருக்கம் என்ற குறிப்பு.

127. இலக்கணை என்பது யாது? அதன் வகையினைக் குறிப்பிட்டு ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உதாரணங்காட்டி விளக்குக.

[வடநூலார் சொற்பொருளை வாச்சியம், (வெளிப்படை), வியங்கியம் (குறிப்பு), இலக்கணை என்று மூன்றென்பர்.]

இலக்கணை என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது.

இவ்விலக்கணை விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூன்று வகைப்படும்.

**விளக்கம்:** (1) சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்— நின்றதுகொல் நேர் மருங்கிற் கையூன்றி— முன்றில்— முழங்கு கடாயானை மொய்ம் மலர்த்தார் மாறற்கு— உழந்துபின் சென்ற என் நெஞ்சு.' என்பது விட்ட இலக்கணைக்கு உதாரணம்.

நெஞ்சிற்கு மருங்கும் கையும் ஊன்றுதல் முதலிய தொழிலும் இன்மையின் இது விட்ட இலக்கணையாயிற்று.

2. 'கங்கையின் கண் இடைச்சேரி' 'புளி தின்றான்' என்பன விடாத இலக்கணைக்கு உதாரணங்கள்.

ஈண்டுக் கங்கை என்பது கங்கைக் கரையையும், புளி என்பது புளியம்பழத்தை உணர்த்தின. இடைச்சேரி கங்கைக் கரையில் இருத்தலும் புளியம்பழத்தைத் தின்றலும் உண்மையின் இவை விடாத இலக்கணையாயின.

(3) 'பாயிருள் பருகிப் பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப்பகுதி' என்பது விட்டும்விடாத இலக்கணைக்கு உதாரணம்.

இருளைப் பருகுதலும் பகலைக் காலுதலும் பரிதிக்கு இன்மையானும், இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் பரிதிக்கு உண்மையானும் இது விட்டும் விடாத இலக்கணையாயிற்று.

128. வடக்கும் ஒரு திசையாக இருக்க வடசொல்லைத் திசைச் சொல்லில் அடக்காது வேறு கூறியது என்னை? (1962)

வடக்கும் ஒரு திசையாக இருக்க வடசொல்லைத் திசைச் சொல்லில் அடக்காது வேறு கூறியதற்கு இரண்டு காரணங்கள் உள. ஒன்று, தமிழ் நாட்டிற்கு வடதிசைக்கண் வழங்கும் தமிழ் ஒழிந்த பதினேழ் மொழிகளுள் தென் தமிழ்க்கு எதிரியது (ஒப்பானது) கடவுட் சொல்லாகிய ஆரியம் ஒன்றுமே என்பது தோன்ற ஆரியத்தினின்று தமிழ்நடை பெற்றதை வடசொல் என்றும் ஏனைப் பதினாறு மொழிகளினின்று தமிழ் நடைபெற்றதைத் திசைச் சொல் என்றும் சான்றோரான் நியமிக்கப்பட்ட செய்கையாகும். மற்றொன்று ஆரியச் சொல் எல்லாத் தேயத்திற்கும் விண்ணுலகம் முதலியவற்றிற்கும் பொதுவாகலான் அவ்வாரியத்தினின்று தமிழ்நடை பெற்றதைத் திசைச் சொல் என்றல் கூடாது என்பதாம்.

இனி, எல்லாத் தேயத்திற்கும் பொதுவான ஒன்றை வடசொல் என ஒரு திசை மேல் வைத்துக் கூறியது என்னை எனின் வடதிசையாகிய ஆண்டுப் பயிற்சி மிகுதிபற்றி அவ்வாறு கூறப்பட்டது என்பதாம்.

129. பெயர்வினை யிடையுரி என்றதன் முறை வைப்பை எழுதுக.

பெயர்வினை யிடையுரி என்றதன் முறைவைப்பு

பெயர்ச்சொல், பொருளை விளக்குதலான் முன்னர் வைக்கப்பட்டது. வினைச்சொல், அப்பொருளின் புடை பெயர்ச்சியை விளக்குதலான் அதன்பின் வைக்கப் பட்டது. இடைச்சொல், அப்பொருளையும் அப் பொருளின் புடைபெயர்ச்சியையும் தம்மாலன்றித் தத்தம் குறிப்பான் விளக்குதலின் பெயருமாகாது வினையுமாகாது அவற்றின் வேறுமாகாது இடை நிகரனவாய் நிற்றலானும், வேற்றுமையுருபு முதலியன வாய் வேறுசொல்லென நிற்பினும் பெயர்வினைக்கு உறுப்பாவனவன்றித் தனித்தியலாமையானும் பெயர் வினைகட்குப் பின் வைக்கப்பட்டது. உரிச்சொல், பெயர்வினை இடைச்சொற்களைப்போல வழக்கும் செய்யுளும் என இரண்டற்கும் உரியதாகாமல் செய்யுள் ஒன்றற்கே உரித்தாய் வருதலானும், இசை குறிப்புப் பண்பு மூன்றனையும் விளக்கிப் பொருட்கு உரிமை பூண்டு நிற்றலானும், பண்புப் பெயருள் சிலவற்றையே வேருக வைத்து வகுக்கப்பட்டதாகலானும் இடைச் சொல்லுக்குப்பின் வைக்கப்பட்டது.

(இனித் திசைச்சொல்: கொடுந்தமிழ்மொழியாயும் அன்னியமொழியாயும் வருதலின் உரிச்சொல்லின் பின் வைக்கப்பட்டது. வடசொல் அன்னிய மொழியாயே வருதலின் ஈற்றில் வைக்கப்பட்டது.)

130. திரிசொல்லின் இலக்கணம் யாது? இரண்டு வகை உதாரணங்கள் காட்டி விளக்குக. (1967)

### திரிசொல்லின் இலக்கணம்

ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

ஒருபொருள் குறித்த பலசொல், பலபொருள் குறித்த ஒருசொல் என இரண்டு வகையாகிக் கற்றுரால் அரிதில் உணரும் பொருளை உடையன திரிசொல் எனப்படும். அஃதாவது எளிதில் பொருள் உணரும் உலகவழக்குச் சொல் போலாது அரிதில் பொருள் உணரும் செய்யுள் வழக்குச் சொல்லாம்.

(உ-ம்) 1. கிள்ளை, சுகம், தத்தை என்றற்றொடக்கத்தன கிளி என்னும் ஒரு பொருளைக் குறித்த பல பெயர்த்திரிசொல். படர்ந்தான், இகந்தான் என்றற்றொடக்கத்தன சென்றான் என்னும் ஒரு பொருளைக் குறித்த பல வினைத் திரிசொல்.

2. வாரணம் என்றற்றொடக்கத்தன யானை, கோழி, சங்கு என்னும் பல பொருளைக் குறித்த ஒரு பெயர்த் திரிசொல். வரைந்தான் என்றற்றொடக்கத்தன மணந்தான், எல்லையிட்டான், நீக்கினான் என்னும் பல பொருளைக் குறித்த ஒரு வினைத் திரிசொல்.

131. கொடுந்தமிழ்ச் சொற்கள் இன்ன என்பதையும் அவை இன்ன நாட்டிற்குரியவென்பதையும் அவற்றிற்குரிய செந்தமிழ்ச்சொல் இன்ன என்பதையும் தொகுக்க.

| கொடுந்தமிழ்ச்சொல் | உரியநாடு | செந்தமிழ்ச்சொல் |
|---|---|---|
| 1. பெற்றம் | தென்பாண்டி | ஆ |
| 2. சொன்றி | ௸ | சோறு |
| 3. தள்ளை | குட்டம் | தாய் |
| 4. அச்சன் | குடம் | தந்தை |
| 5. கையர் | கற்கா | வஞ்சர் |
| 6. கிழார் | வேண் | தோட்டம் |
| 7. பாழி | பூழி | சிறுகுளம் |
| 8. செய் | பன்றி | செறு (வயல்) |
| 9. கேணி | அருவா | சிறுகுளம் |
| 10. எகின் | அருவாவடதலை | புளி |
| 11. எலுவன் | சீதம் | தோழன் |
| 12. இகுளை | மலாடு | தோழி |
| 13. ஆய் | புனனாடு | தாய் |

132. இருதிணைப் பொதுப் பெயர்களும், இருதிணைப் பொது வினைகளும் யாவை?

இருதிணைப் பொதுப் பெயர்கள்

| | | |
|---|---|---|
| முதற்பெயர் | —4 | (ஆண்மை, பெண்மை, ஒருமை, பன்மை) |
| சினைப்பெயர் | —4 | ௸ |
| சினைமுதற் பெயர் | — 4 | ௸ |
| முறைப்பெயர் | —2 | (ஆண்மை, பெண்மை) |
| தன்மை | —4 | (யான், நான், யாம், நாம்) |
| முன்னிலை | —5 | (எல்லீர், நீயிர், நீவிர், நீர், நீ) |
| எல்லாம், தான், தாம் | —3 | |
| ஆக | 26 | |

(இன்னன என்றதால் ஒரு பொருளை இருதிணைக் கண்ணும் வைத்துக் கூறும் பொதுப் பெயரும், உயர் திணை இருபாற்கும் பொதுவாக வரும் பொதுப் பெயரும், தன்மை முன்னிலை வினையாலணையும் பெயர் களும் கொள்ளப்படும்.)

இருதிணைப் பொது வினைகள்

| | |
|---|---|
| தன்மை வினை | 1 |
| முன்னிலை வினை | 1 |
| வியங்கோள் | 1 |
| வேறு, இல்லை, உண்டு | 3 |
| பெயரெச்சம் | 1 |
| வினையெச்சம் | 1 |
| ஆக | 8 |

193. தன்மைப் பெயர்களைத் தொல்காப்பியர் உயர்திணையாகக் கூறியிருக்க, இவர் பொதுப் பெயர் என்று கூறல் பொருந்துமா? ஆய்க. (1964)

'அவ்வழி, அவனிவன் உவனென வரூஉம் பெயரும்' என்ற சூத்திரத்து, 'யான்யாம் நாம் என வரூஉம் பெயரும் ........ பாலறிவந்த உயர்திணைப் பெயரே' என்று ஆசிரியர் தொல்காப்பியர் கூறியுள்ளார். அதாவது தன்மைப் பெயர்களை உயர் திணைப் பெயர்களாகக் கூறியுள்ளார்.

ஆனால் நன்னூலார் இத்தன்மைப்பெயர்களை உயர் திணை அஃறிணை என்ற இரண்டற்கும் பொதுவான பொதுப் பெயர் எனக் கூறியுள்ளார்.

இங்ஙனம் நன்னூலார் கூறியதற்குக் காரணங்கள்

1. மயிலைநாதர் கூறுவது: 'பேய்பூதம் மந்தி கிளிபூவை பேசுதலால் — ஆகுமே தன்மை பொது' என்ற பழஞ் சூத்திரத்தால் தன்மை உயர்திணைக்கே யன்றி அஃறிணைக்கும் உரித்தாயிற்று.

2. சங்கரநமச்சிவாயர் கூறுவது: 'கேட்குந போலவும் கிளக்குந போலவும்—இயங்குந போலவும் இயற்றுந போலவும்- அஃறிணை மருங்கினும் அறையப் படுமே' என்பது (நன்னூல்) விதியாகலானும், பேய்

பூதங்கள் இவற்றை உரைத்தலும் கேட்டலும் உளவாதலானும் தன்மை முன்னிலை பொதுப்பெயர் எனப்பட்டன.

3. சிவஞான முனிவர் கூறுவது: ஆசிரியர் தொல்காப்பியர் மரபியலுள், 'மக்கள் தாமே ஆறறிவுயிரே- பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' எனவும் 'ஒருசார் விலங்கும் உளவென மொழிப' எனவும் கூறிய சூத்திரங்களினால் கிளியும் குரங்கும் யானையும் முதலாயின மனவுணர்வுடையன வாயின் ஆறறிவுயிராய் அடங்குமெனக் கூறலின் அம்மரபு பற்றித் தன்மைப் பெயர்கள் பொதுப் பெயர் எனப்பட்டன.

சங்கரர்க்குச் சிவஞான முனிவர் தரும் மறுப்பு: 'கேட்குந போலவும் கிளக்குந போலவும்' என்ற விதி புணர்ந்துரை வகையால் வழுவமைதியாகக் கூறப்பட்டனவேயாம். ஆதலின் அவ்விதி பற்றிப் பொதுப் பெயர் எனப்பட்டன என்று கொள்வது பொருந்தாது.

முடிபு: மயிலைநாதர் முதலிய மூவரும் வெவ்வேறு காரணங்கள் காட்டினும், 'தன்மைப் பெயரைப் பொதுப் பெயர் என்பது பொருந்தும்' என்ற முடிபில் ஒத்து நிற்றலின் நன்னூலார் கூற்றுப் பொருந்துவதேயாகும்.

134. ஆகுபெயராவது யாது? அதன் வகைகளைக் கூறி உதாரணமும் தருக.

'பொருள்முதல் ஆறோடு அளவைசொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே'.

என்பது ஆகுபெயர்ச் சூத்திரம். ஒன்றன் பெயர் அதனோடு தொடர்புடைய பிறிதொன்றற்கு ஆகிவருவது ஆகுபெயராகும்.

இவ்வாகுபெயர் பொருளாகுபெயர், இடவாகு பெயர், காலவாகுபெயர், சினையாகுபெயர், குணவாகு பெயர், தொழிலாகுபெயர் என அறுவகைப்படும். இனி இவற்றின் மேலும், அளவையாகுபெயர், சொல் லாகுபெயர், தனியாகுபெயர், கருவியாகுபெயர், காரிய வாகுபெயர், கருத்தாவாகுபெயர் எனவும், இருமடி யாகுபெயர், மும்மடியாகுபெயர், அடையடுத்தவாகு பெயர், இருபெயரொட்டாகுபெயர், உவமையாகு பெயர், தேவர் பெயரை மக்கட்கிட்டு வழங்குமாகு பெயர் எனவும், விட்டவாகுபெயர் விடாதவாகுபெயர் எனவும், அன்மொழித்தொகை யாகுபெயர் எனவும், பலவகைப்படும். (இவை எல்லாம் பொருள் முதலிய ஆறனுள் அடங்குமேனும், ஆகுபெயர்க்குப் பொருள் கொள்வார் கொள்ளும் கருத்து வேற்றுமையான் பல் வேறு வகைப்பட்டன.)

## எடுத்துக்காட்டு

1. தாமரைச்சேவடி — பொருளாகுபெயர் (முதலாகுபெயர்)
2. அகன் அமர்ந்து — இடவாகுபெயர்
3. கார் அறுத்தான் — காலவாகுபெயர் (மும்மடியாகுபெயர்)
4. புளி முளைத்தது — சினையாகுபெயர் (இருமடியாகுபெயர்)
5. புளி தின்றான் —குணவாகுபெயர் (விடாதவாகுபெயர்)
6. வற்றலோ டுண்டான் —தொழிலாகுபெயர்
7. (a) இரண்டு தந்தான்—எண் அளவை ஆகுபெயர்
   (b) கழஞ்சு பெற்றான் — எடுத்தல் ,, ,,
   (c) நாழி உடைந்தது — முகத்தல் ,, ,,
   (d) ஒரு முழம் வேண்டும் — நீட்டல் ,, ,,

8. உரை செய்தான் — சொல்லாகுபெயர்
9. விளக்கு முறிந்தது — தானியாகுபெயர்
10. திருவாசகம் படித்தான் — கருவியாகுபெயர் (அடையடுத்தவாகுபெயர்)
11. இது பாட்டியல் — காரியவாகுபெயர்
12. இது திருவள்ளுவர் — கருத்தாவாகு பெயர் (விட்டவாகுபெயர்)
13. வகரக் கிளவி — இருபெயரொட்டாகு பெயர் (பின்மொழியாகுபெயர்)
14. காளை வந்தான் — உவமவாகுபெயர்
15. முருகன் வந்தான் — தேவர்ப்பெயராகுபெயர்
16. பொற்றொடி வந்தாள் — அன்மொழித் தொகையாகுபெயர்

135. வகரக்கிளவி, அதுவாகுகிளவி என்பன போன்ற இருபெயரொட்டு ஆகுபெயர்கள் இரு மொழிக்கண் வந்தனவல்ல என்பதனை விளக்குக. (1961)

வகரக்கிளவி, அதுவாகுகிளவி, மக்கட்சுட்டு என்பன இருபெயரொட்டாகுபெயர்கள். இவற்றுள் வகரம் அதுவாதல் மக்கள் என்ற அடைமொழிகள் கிளவி சுட்டு என்னும் இயற்பெயர்களை விசேடிக்கவில்லை. கிளவி சுட்டு என்னும் ஆகுபெயர்ப் பொருளாகிய எழுத்தையும், சொற்பொருளையும், பொருளையும் விசேடித்து நிற்கின்றன. எனவே, வகரக்கிளவி முதலியவற்றில் வகரம் முதலியன அடைமொழியாய் நிற்கக் கிளவி சுட்டு என்பன மட்டுமே ஆகுபெயர்ப் பொருளைத் தருதலின் வகரக்கிளவி முதலியன இருமொழிக்கண் வந்தனவல்ல; ஒரு மொழிக்கண் வந்த ஆகுபெயர்களேயாகும். இவை பின்மொழியாகுபெயர்.

ஆனால் பொற்றொடி என்னும் அன்மொழித் தொகையில், பொன் என்னும் அடைமொழி தொடி என்னும் இயற்பெயரையே விசேடித்து நிற்கிறது. பின் அவ்விரு சொல்லின் தொகை யாற்றலால் ஆகுபெயர்ப் பொருள் உணரப்படுகிறது.

136. ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக் கும் உள்ள வேறுபாடுகளைத் தெற்றெனப் புலப் படுத்துக. (1967)

கார் அறுத்தான், புளி தின்றான் எனபன ஆகு பெயர்க்கு எடுத்துக்காட்டு. பொற்றொடி வந்தாள், உயிர்மெய் இருநூற்றுப்பதினறு என்பன அன் மொழித் தொகைக்கு எடுத்துக் காட்டு.

வேறுபாடு

| ஆகுபெயர் | அன்மொழித்தொகை |
|---|---|
| 1. ஒரு சொல்லாய் வரும். | 1. பல சொல்லாய் வரும். |
| 2. முதல் சினை முதலிய தொடர்பால் பிற பொருள் உணர்த்தும். | 2. வேற்றுமைத்தொகை முதலிய தொகையாற்ற லால் பிற பொருள் உணர்த்தும். |
| 3. நியதிப்பெயராய் (வரை யறுத்த பெயராய்) வரும். | 3. நியதிப்பெயராய் வாராது. |
| 4. தொன்றுதொட்டு வரும். | 4. யாதாயினும் ஒரு காரணத்தான் புதிது புதிதாய் உண்டாக்கப் பட்டுவரும். |

விளக்கம்: கார், புளி என்ற ஆகுபெயர்கள் ஒரு சொல்லாயும் முறையே காலம் சுவை என்ற தொடர்பால் பிறபொருள் உணர்த்தியும், பலரும் கூறும் நியதிப் பெயராயும், தொன்றுதொட்டும் வந்தன. பொற்றொடி, உயிர்மெய் என்பன பலசொற்களாயும், முறையே வேற்றுமைத்தொகை உம்மைத் தொகை என்பவற்றால் பிற பொருள் உணர்த்தியும், வரையறைப்படாத பெயராயும், இடையே ஒருவரால் உண்டாக்கப் பட்டும் வந்தன.

137. ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள வேறுபாட்டினை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக. (1963)

விடை 136-ல் காண்க.

138. ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள வேறுபாடுகளை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக. (1960)

விடை 136-ல் காண்க.

139. 'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்' என்ற நூற்பாவிற்குப் பதசாரம் தருக.

'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும்ஈ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.'

என்பது நூற்பா. இதற்குப் பதசாரம்: 1. எல்லாப் பெயரும் எல்லா வேற்றுமையும் ஏலாது என்பார் ஏற்கும் என்றார். 2. வினைச்சொல் இடைச்சொல் உரிச் சொற்களுள் பெயர்பட நின்றனவும் தழீஇக் கோடற்கு எவ்வகை என்றார். 3. வினை முதலிய மூன்றும் (வினை இடைஉரி) வேற்றுமை கொள்ளாதென்பார் பெயர் என்றார். 4. ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய் என

ஈண்டு எய்தியதனை, எழுவாய் உருபு திரிபில் பெயரே எனப் பின்னர் விலக்குதலின் பெயர் முழுவதும் உருபா கும் எழுவாயுருபினை நீக்கி, விளியுருபிற்குப் பெயர் இறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனை ஆறுரு பிற்குப் பெயரின் இறுதியாகிய புறப்பாட்டெல்லையினை யும் தழீஇக்கோடற்கு ஈறாய் என்றார். 5. பொருளையே யன்றிச் சொல்லையும் வேறுபடுப்பது ஐம் முதலிய ஏழுருபிற்குமே ஒக்கும்; எழுவாய்க்கு ஒவ்வாது: ஆனால் பொருளை மட்டும் வேறுபடுப்பது எட்டு வேற்றுமைக் கும் ஒக்கும். ஆகலின் சொல்லையும் உடன் கூட்டாது பொருள் என்றார். 6. வேற்றுமை என்னும் காரியத் தைச் செய்யும் கருத்தாவாகிய வேற்றுமை உருபிற்கு வேற்றுமை என்பது காரணக்குறி என்பார், வேற்றுமை செய்வன வேற்றுமை என்றார். 7. 'ஏழியன் முறையது எதிர்முக வேற்றுமை—வேறெனை விளம்பான் பெயரது விகாரமென்று—ஓதிய புலவனும் உளன் ஒரு வகை யால்—இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன், என ஆசிரியர் அகத்தியனார் கூறுபவாகலின் விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை எழுவாயுள் அடக்காது வேறு கோடலே தந்துணிபு என்பார் எட்டே என்றார் நன்னூலார்.

140. 'ஆறன் உருபும் ஏற்குமவ் வுருபே'—இதன் பொருள்களைத் தந்து ஆராய்க.

'ஆறன் உருபும் ஏற்குமவ் வுருபே'—
என்பது நூற்பா.

முதல் உரை: (பெயர்களேயன்றி) ஆறும் வேற்றுமை உருபும் (பெயர் ஐ ஆல் கு இன் அது கண்

என்ற) அவ்வுருபுகளை ஏற்கும். (இவ்வுரையை மயிலை நாதரும், சங்கர நமச்சிவாயரும் குறித்துள்ளனர்.)

இரண்டாவது உரை: எழுவாய் வேற்றுமையாகிய அவ்வுருபு, ஐ முதலிய ஆறு வேற்றுமை யுருபுகளையும் ஏற்கும். (இவ்வுரையைச் சிவஞானமுனிவரும், ஆறுமுக நாவலரும், சடகோபராமாநுசாச்சாரியாரும் குறித்துள்ளனர்.)

முதல் உரைக்குச் சிவஞானமுனிவர் தரும் மறுப்பு: (1) உருபேற்றல் பெயர்க்கே உரிய இலக்கணமன்றி வினை முதலியவற்றிற்குரிய இலக்கணம் அன்று. (2) பெயர்வழித் தம் பொருள் தரவரும் உருபே எனவும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறுய் எனவும் வரையறை கூறிப் போந்தமையின் ஈண்டு இடைச்சொல் உருபேற்கு மெனில் மாறுகொளக் கூறலாகும். (3) சாத்தனதை சாத்தனதால் என்புழிச் சாத்தனது என்பது குழையது கோட்டது என்ருற்போலத் துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று உருபேற்றுநின்ற வினைக்குறிப்புப் பெயர். (4) ஆறனுருபு உருபேற்குமெனின் உருபேற்புழிப் பெயர்போலத் தனித்து நின்று உருபேற்றல் வேண்டும். (5) அதனை அதனல் எனத் தனித்து நின்று உருபேற்றது எனில் அது என்னும் சுட்டுப்பெயர் உருபேற்றதாமன்றி அது என்னும் ஆறனுருபு உருபேற்றதன்ரும். ஆகவே ஆறனுருபு அவ்வுருபுகளை ஏற்கும் என்பது பொருந்தாது.

மறுப்புக்கு மறுப்பு: (1) உருபேற்றல் பெயர்க்கு உரிய இலக்கணமாயினும் ஓடிஞன் என்ற வினை வினையாலணையும் பெயராயவழி ஓடிஞனைக்கண்டேன் என உருபேற்றல் போல அது என்னும் ஆறன் உருபாகிய

இடைச்சொல்லும் சாத்தன் என்னும் பெயருடன் கூடி அவனது உடைமைப் பொருளைக் குறிக்கும் பெயராய் நின்று சாத்தனதை, சாத்தனதால் என உருபேற்கின்றது. (2) பெயர்வழித் தம் பொருள் தரவரும் உருபே என்ற விதியை 'ஆறன் உருபும்' என்புழிவந்த உம்மையான் தழுவிக் கொண்டமையான் மாறுகொளக்கூறல் ஆகாது. (3) குழையது கோட்டது என்பன குழையை உடையது கோட்டை உடையது என உடையான் பொருள்படுமாறு போலச் சாத்தனது என்பது சாத்தனை உடையது என உடையான் பொருள்படாமல், சாத்தனுக்கு உடைமையானது என உடைமைப் பொருள்படுதலின் துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்றுவந்த வினைக் குறிப்புப் பெயரன்று. (4) யாதானும் ஒன்று உருபேற்புழித்தனித்து நின்று உருபேற்க வேண்டும் என்ற யாப்புறவில்லை. (5) அதனை அதனால் எனத் தனித்து நின்று உருபேற்றதென எவரும் கூறவில்லை. அது கற்பனைக் கூற்று.

முடிவு: அவ்வுருபு என்ற சுட்டு, பெயர் முதலிய எட்டு உருபுகளையும் சுட்டுமன்றி அவற்றுள் ஒன்றாகிய பெயர் ஒன்றை மட்டும் சுட்டியது எனல் பொருந்தாமையானும், ஆறனுருபு என்பதற்கு ஆறும் வேற்றுமையுருபு எனப் பொருள் கொள்ளுதல் நேர்மைப் பொருளாயும், ஐ முதலிய ஆறு உருபுகள் என்று கொள்வது வலிந்த பொருளாயும் நிற்குமாகலானும், எழுவாய் வேற்றுமை ஐ முதலிய ஆறுருபுகளும் ஏற்குமெனில் எட்டாம் வேற்றுமை ஏலாதெனப்பட்டு முரண்படுமாகலானும் ஆறும் வேற்றுமையுருபு அவ் வெட்டுருபுகளையும் ஏற்றுவரும் என்ற முதல் உரையே பொருந்துவதாகும்.

141. 'ஆறனுருபு மேற்குமவ் வுருபே' இச் சூத்திரத்திற்குப் 'பெயரே யன்றி ஆறும் வேற்றுமை யுருபும் அவ்வுருபுகளை யேற்கும்' என்று பொருள் கொள்ளுதல் ஏன் பொருந்தாது? (1968)

விடை 140-னுள் காண்க.

142. 'ஆறனுருபு மேற்குமவ் வுருபே'— இச் சூத்திரத்திற்குப் பிறர் கூறும் பொருள் யாது? அது பொருந்துமா? ஆராய்க. (1965)

விடை 140-னுள் காண்க.

143. 'வினை பெயர் வினாக்கொளல் அதன் பயனிலையே'— ஈண்டுப் பயனிலை என்றதை முடிக்குஞ்சொல் எனக் கொள்ளுதல் பொருந்துமா? ஆராய்க. (1966)

'வினைபெயர் வினாக்கொளல் அதன் பயனிலை' என்றவிடத்துப் பயனிலை என்பதற்கு முடிக்குஞ் சொல் எனச் சங்கர நமச்சிவாயர் உரை கூறினார். அதனை நீக்கிப் பயனிலை என்பதற்குப் பொருள் நிலை எனச் சிவஞான முனிவர் உரை கூறினர்.

1. வினைபெயர் வினாக்கொளும் என முற்றுச் சொல்லாற் கூறாது வினைபெயர் வினாக்கொளல் எனத் தொழிற் பண்புச் சொல்லால் கூறுதலானும், 2. இரண்டாம் வேற்றுமை முதலியவற்றுக்கு உருபும் பொருளும் கூறுதலான் இம் முதல் வேற்றுமைக்கும் உருபும் பொருளும் கூறவேண்டுமாதலானும், 3. எட்டு வேற்றுமைக்கும் முடிக்குஞ் சொல் 'எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும் அல்ல வினை கொளும்' என்னும் சூத்திரத்தாற் பிற்கூறுதலானும், 4. ஈண்டுங் கூறின் கூறியது கூறலாமாதலானும் பயனிலை என்பதை

முடிக்குஞ் சொல் என்று கூறுவது பொருந்தாது எனச் சிவஞானமுனிவர் மறுக்கின்றார்.

144. எட்டு வேற்றுமைக்கும் உரிய உருபுகள், பொருள், சொல்லுருபுகள் இன்னின்ன எனப் பகுத்துத் தருக.

| வேற்றுமை | உருபு | பொருள் | சொல்லுருபு |
|---|---|---|---|
| முதல் | திரிபில்லாத பெயர் | கருத்தா | ஆனவன், என்பவன் |
| 2 | ஐ | செயப்படு பொருள் | ——— |
| 3 | ஆல், ஆன், ஓடு, ஒடு, | கருவி, கருத்தா, உடனிகழ்ச்சி | கொண்டு, உடன் |
| 4 | கு | கொடை பகை முதலியன | பொருட்டு, நிமித்தம், ஆக |
| 5 | இல், இன் | நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது | இருந்து, நின்று |
| 6 | அது, ஆது, அ | உடைமைப்பொருள் (பண்பு, உறுப்புமுதலியன.) | உடைய |
| 7 | கண், கால் முதலியன | இடப்பொருள் | ——— |
| 8 | பெயர்கள் இயல்பும், திரிபும் | விளிப்பொருள் | ——— |

145. இரண்டாம் வேற்றுமை எவ்வெப் பொருள்களில் வரும்? ஒவ்வோர் உதாரணங் காட்டுக. (1968)

இரண்டாம் வேற்றுமை ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை முதலாகிய பொருள்களில் வரும்.

(உ-ம்) 1. குடத்தை வனைந்தான் (ஆக்கல்), 2. குடத்தை உடைத்தான் (அழித்தல்), 3. ஊரை அடைந்தான் (அடைதல்), 4. ஊரைத் துறந்தான் (நீத்தல்), 5. காளையை ஒத்தான் (ஒத்தல்), 6. பொன்னை உடையான் (உடைமை).

ஆதி என்ற மிகையால் கருத்துண்டாதல், கருத்தின்றாதல், இருமையுமாதல், ஈருருபிணைதல், கருத்தாவாதல், அக நிலையாதல், தெரிநிலை என்ற பொருள்களும் கொள்ளப்படும். இவற்றுக்கு உதாரணம் வருமாறு: 1. சோற்றை உண்டான். 2. சோற்றைக் குழைத்தான், 3. எறும்பை மிதித்து வழியைச் சென்றான், 4. ஆரியனை ஐயுற்றபொருளை வினவினான். 5. தன்னைப் புகழ்ந்தான், 6. வருதலைச் செய்தான், 7. மாடம் செய்யப்பட்டது.

146. ஆறும் வேற்றுமை உருபுகளும் பொருள்களும் இன்ன என எழுதுக.

ஆறும் வேற்றுமைக்கு அது ஆது என்ற இரண்டும் ஒருமை உருபுகள்; அ என்ற ஒன்று மட்டும் பன்மை உருபு.

இதன் பொருள் கிழமைப் பொருள் (உடைமைப் பொருள்.) அது தற்கிழமை பிறிதின்கிழமை என இரு வகைப்படும். அவற்றுள் தற்கிழமை பண்பு, உறுப்பு, ஒன்றன் கூட்டம், பலவினீட்டம், திரிபினாக்கம் என ஐந்து வகைப்படும்; பிறிதின்கிழமை பொருள், இடம், காலம் என மூன்று வகைப்படும்.

147. விளிகொள்ளும் பெயரும் விளி ஏலாப் பெயரும் யாவை?

### விளிகொள்ளும் பெயர்கள்

1. இ, உ, ஊ, ஐ, ஓ என்ற உயிரீற்றையும், ன, ள, ர, ல, ய என்ற மெய்யீற்றையும் உடைய உயர் திணைப் பெயர்கள் விளிகொள்ளும்.

2. ஆ, இ, உ, ஊ, ஐ என்ற உயிரீற்றையும், ன, ள, ல, ய, ண என்ற மெய்யீற்றையும் உடைய பொதுப் பெயர்கள் விளி கொள்ளும்.

3. ஞ, ந என்பவை ஒழிந்த ஏனை இருபத்திரண்டு ஈற்றையும் உடைய அஃறிணைப் பெயர்கள் விளி கொள்ளும்.

### விளி கொள்ளாப் பெயர்கள்

1. தன்மைப் பெயர்கள் விளி கொள்ளா.
2. முன்னிலைப் பெயர்கள் விளி கொள்ளா.
3. படர்க்கைப் பெயர்களின் அ, இ, உ, எ, யா என்பவற்றை முதலாகவும் ன, ள, ர, வை, து என்பவற்றை ஈறாகவும் உடைய பெயர்களும் தாம், தான் என்பனவும் விளி கொள்ளா.

### இவற்றிற்கு விதிகள்

1. 'இ உ ஊ வோடு ஐஓ னளரல
யவ் வீற் றுயர் திணை, ஓரவல் லிவற்றொடு
ணஃகான் ஆவீறாகும் பொதுப் பெயர்,
ஞ ந ஒழி அனைத்தீற்று அஃறிணை விளிப்பன.
2. நீயிர் நீவிர் நான் எழுவா யலபெறா.
3. நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாம்தான் இன்னன விளியா.

**148.** விளியுருபு ஏலாப் பெயர்களைத் தருக. (1957)

விடை 147-னுள் காண்க.

149. ‘முதலிவை சினையிவை எனவேறுள வில’— இந்நூற்பாவின் பொருள்களை ஆராய்க.

‘முதலிவை சினையிவை எனவேறுளவில’- உரைப் போர் குறிப்பின அற்றே பிண்டமும்’ என்பது நூற்பா.

**இதன் பொருள் :** (1) ‘இவையே முதல் இவையே சினை என வேறறியக் கிடப்பனவில்லை; சொல்லுவோர் குறிப்பினானே முதலே சினையுமாம்; சினையே முதலுமாம்; பிண்டப் பொருளும் அவ்வாறே யாம்.’ (இது மயிலை நாதர் உரை.)

**விளக்கம் :** யானையது கோடு என்புழிச்சினையாகக் குறிக்கப்பட்ட கோடு, கோட்டது நுனி என்புழி முதலாக நிற்கிறது. இங்ஙனம் ஒரு பொருளே ஒன்றற்குச் சினையாயும் மற்றொன்றற்கு முதலாயும் நியதியின்றி வருதலின் ‘வேறுளவில’ எனக் கூறப்பட்டது.

(2) ‘கடங்கள் (குடங்கள்) இவை; படங்கள் (துணி கள்) இவை எனப் பொருள்கள் வேறுவேறாக நிற்றல் போல, முதற்பொருள்கள் இவை சினைப்பொருள்கள் இவை என வேறுவேறாய் இரண்டாக நிற்பனவில்லை. ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துக்கூறுவார் குறிப்பின் மாத்திரையவேயாம். பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாம்’ (இது சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர் முதலியோர் உரை.)

**விளக்கம் :** யானையைக் குறித்தவழி யானையுண் டாய்க் கை கால் கோடு முதலியன வேறில்லையாய்த் தோன்றும். கோடு முதலியவற்றைக் குறித்தவழிக் கோடு முதலியன உண்டாய் யானையில்லையாய்த் தோன் றும். இங்ஙனம் ஒரு பொருள் முதல் எனப்பட்டு அத னுள் ஓர் உறுப்பே சினை எனப்படுதலின் ‘வேறுளவில’

எனக் கூறப்பட்டது. அஃதாவது முதலை நோக்கின் சினையில்லை; சினையை நோக்கின் முதல் இல்லை. எனவே இரண்டையும் உடன் நோக்குதல் உரைப்போர் குறிப்பான் உணரப்படும்.

ஆய்வு: மயிலைநாதர் உரையைப் பின்வந்த சங்கரரும் சிவஞானமுனிவரும் மறுக்கின்றனர். அம்மறுப்பும் மறுக்கப் படத்தக்கதாகவே உளது. இனி இவ்விருவகை உரைகளும் சிறந்த கருத்தையே புலப்படுத்தலானும், ஒரு நூற்பாவுக்கு, ஒன்றுக்கு மேற்பட்ட உரைகளை ஏற்றல் உரையாளர்களின் வழக்கமாகலானும் இந்நூற் பாவுக்கு இரண்டு உரைகளையும் ஏற்றல் சால்புடைத் தாகும்.

150. விளக்குக: உருபு மயக்கம், பொருள் மயக்கம்.

உருபு மயக்கம்

ஒரு வேற்றுமையுருபு நிற்கவேண்டிய இடத்து மற்றொரு வேற்றுமையுருபு நின்று முந்திய உருபுக்குரிய பொருளையே தருவது உருபு மயக்கம் எனப்படும். இதனை வேற்றுமை மயக்கம் எனவும் கூறுப. [ஈண்டு மயக்கம் என்பது ஒன்று மற்றொன்றாக மாறுபடுவதைக் குறிக்கும்.]

(எ-டு) 1. நாணற் கிழங்கு மணற்கு ஈன்ற முளை. ஈண்டு மணற்கண் என ஏழாவது நிற்கவேண்டிய இடத்து மணற்கு என நான்காவது நின்று ஏழாவதன் இடப் பொருளையே தந்ததாகலின் ஏழாவதற்கு நான் காவது வந்த உருபு மயக்கமாயிற்று.

(2) நாகு வேயொடு நக்கு வீங்குதோள். ஈண்டு வேயை என இரண்டாவது நிற்கவேண்டிய இடத்து

வேயொடு என மூன்ருவது நின்று இரண்டாவதன் செயப்படு பொருளையே தந்ததாகலின் இரண்டாவதற்கு மூன்ருவது வந்த உருபு மயக்கமாயிற்று.

விதி: 'யாதன் உருபின் கூறிற் ருயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.'

பொருள் மயக்கம்

இரு சொற்களுக்கு இடையே வேற்றுமையுருபு தொக்கு நிற்புழி ஒன்றுக்கு மேற்பட்ட உருபுகளை விரித்து இரண்டு முதல் ஏழ் எல்லை வரையிலும் பொருள்கொள்ள முடியுமாயின் அது பொருள் மயக்கம் எனப்படும். [ஈண்டு மயக்கம் என்பது இரண்டு முதலிய பொருள் கூடி நிற்கும் கூட்டத்தைக் குறிக்கும்.]

(எ-டு) 1. தெய்வ வணக்கம்: ஈண்டுத் தெய்வத்தை வணங்கும் வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம் என இரண்டாவதும் நான்காவதும் விரிந்து செயப்படு பொருளும் கொடைப்பொருளும் ஆகிய இருபொருள் மயங்கி (கூடி) நின்றதாகலின் பொருள் மயக்கமாயிற்று.

2. பொன்மணி: ஈண்டுப் பொன்னுன் ஆகிய மணி, பொன்னெடு சேர்ந்த மணி, பொன்னின்கண் மணி, பொன்னுகிய மணி, பொன்னும் மணியும் என ஐந்து பொருள் மயங்கி நின்றதாகலின் பொருள் மயக்கமாயிற்று.

விதி: 'தொக்குழி மயங்குந இரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கும் என்ப.'

**151. 'ஆறும் தருவது வினையே' — ஆறு யாவை? உம்மையாற் கொள்ளப்படுவன யாவை?**

**செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்ற ஆறு பொருள்களையும் வினை தரும்.**

ஆறும் என்பதை முற்றும்மையாகக் கொண்டு, 'முற்றும்மை ஒரோவழி எச்சமுமாகும்' என்ற விதியான் அதனை எச்சவும்மையாக்கி இவ்வாறு என்னும் தொகை யில் சில குறைந்து வரவும் பெறும் என்பது கொள்ளப் படும். வனைந்தான் எனற வினை ஆறும் தருவதுபோலக் கொடியாடிற்று என்புழி ஆடிற்று என்னும் வினை ஆறும் தாராமல் செயப்படுபொருள் குறைந்து வந்தது. கொடி துஞ்சும் என்புழித் துஞ்சும் என்னும் வினை ஆறும் தாரா மல் செயப்படுபொருளோடு கருவியும் குறைந்து வந்தது.

இனி, ஆறும் என்னும் முற்றும்மையை உயர்வு சிறப்பும்மையாக்கி இழிந்தன சிலவுள என்று அவையும் கொள்ளப்படும். வனைந்தான் என்னும் வினை, செய்ப வன் முதலிய ஆறும் தருதலோடு, தனக்கு வனைந்தான் பிறர்க்கு வனைந்தான் என இன்னதற்கு என்ற பொருளை யும்; 'அறங்கருதி வனைந்தான்' என இதுபயன் என்ற பொருளையும் தந்தது.

152. 'வினைகள் ஒன்றற் குரியவும் பொதுவுமா கும்' —இதனை உதாரணங்களுடன் விளக்குக.

வினைகள் திணை பால் இடங்களில் ஒன்றற்குரிய வாயும் பொதுவாயும் வரும்; இன்னும் முக்காலங்களில் ஒன்றற்குரியவாயும் பொதுவாயும் வரும். மற்றும் தன் வினை பிறவினைகள், விதிவினை மறைவினைகள், செய்வினை செயப்பாட்டுவினைகள், பெயரெச்ச வினையெச்சங்கள் என்பவற்றுள் ஒன்றற்குரியவாயும் பொதுவாயும் வரும்.

எடுத்துக்காட்டு

1. வந்தான்: இது திணையுள் உயர்திணை ஒன்றற்கே உரியது; பாலுள் ஆண்பால் ஒன்றற்கே உரியது;

இடத்துள் படர்க்கை ஒன்றற்கே உரியது; முக்காலத்துள் இறப்பு ஒன்றற்கே உரியது. 2. வாழ்க: இது இருதிணைக்கும் ஐம்பாலுக்கும் மூன்றிடத்திற்கும் பொது. 3. உண்ணும்: நிகழ்வு எதிர்வு என்ற இரண்டு காலத்திற்கும் பொது. 4. ஆடினன்: இது தன்வினை ஒன்றற்கே உரியது. 5. ஆட்டினன்: இது பிறவினை ஒன்றற்கே உரியது. 6. வெளுத்தான்: இது தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொது. 7. உண்பான்: இது விதிவினை ஒன்றற்கே உரியது. 8. உண்ணுன்: இது மறைவினை ஒன்றற்கே உரியது. 9. செய்யாய்: இது விதிவினை மறைவினை இரண்டுக்கும் பொது. 10. உண்ட சாத்தன்: இது செய்வினை ஒன்றற்கே உரியது. 11. உண்ட சோறு: இது செயப்பாட்டுவினை ஒன்றற்கே உரியது. 12. புலி கொன்ற யானை: இது செய்வினை செயப்பாட்டுவினை இரண்டுக்கும் பொது. 13. தேடிய பொருள்: இது பெயரெச்சம் ஒன்றற்கே உரியது. 14. தேடிய வந்தான்: இது வினையெச்சம் ஒன்றற்கே உரியது. 15. பொருள் தேடிய தலைவன் புக்கான்: இது பெயரெச்சம் வினையெச்சம் இரண்டுக்கும் பொது.

153. 'முற்றுவினைப்பதம் ஒன்றே மூவொன்பானும்'—மூவொன்பானுவது எப்படி?

ஒரு வினைச்சொல்லைப் படர்க்கையில் வைத்து ஐந்து பாலொடு பெருக்கிப் பின் முக்காலத்தொடும் முரணப் பதினைந்து வகை உண்டாகும். இனி அவ்வினையைத் தன்மையில் வைத்து ஒருமைப் பன்மையொடு பெருக்கிப் பின் முக்காலத்தொடும் முரண ஆறு வகை உண்டாம்: மற்றும் அவ்வினையை முன்னிலையில் வைத்து ஒருமைப் பன்மையொடு பெருக்கிப் பின் முக்காலத்தொடும்முரண ஆறுவகை உண்டாகும். இவ்வாறு உண்டாயவற்றை எல்லாம் கூட்டில் இருபத்தேழு வகை கிடைக்கும்.

படர்க்கை — 5 பால் × 3 காலம் = 15 வகை
தன்மை — ஒருமைப்பன்மை × 3 காலம் = 6 வகை
முன்னிலை ஒருமைப்பன்மை × 3 காலம் = 6 வகை

ஆக 27 வகை

விதி : ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையிலும்
முக்காலத்திலும் முரண முறையே
மூவைந்து இருமூன்று ஆருய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூவொன் பானும்.

154. ஏவல் வினைக்கும் வியங்கோள் வினைக்கும் உள்ள வேறுபாடென்ன ?

| ஏவல்வினை | வியங்கோள்வினை |
| --- | --- |
| 1. விதித்தல் (கட்டளைப்) பொருளில் மட்டும் வரும். | 1. வாழ்த்தல், விதித்தல், வேண்டல், வைதல் முதலிய பல பொருளில் வரும். |
| 2, முன்னிலையில் மட்டும் வரும். | 2. மூவிடங்கட்கும் பொது வாய் வரும். |
| 3. ஒருமைப்பன்மை பாகுபாடு உண்டு. | 3. ஒருமைப் பன்மை பாகுபாடு இல்லை. |
| 4. வினைப்பகுதியுடன் ஏவல் விகுதிபுணர்ந் தும் வரும்; கெட்டும் வரும். | 4. வினைப்பகுதியுடன் வியங்கோள் விகுதி புணர்ந்தே நிற்கும் ; விகுதியின் ஈற்றுயிர் மெய் ஒரோவழி கெடுவதுண்டு. |

155. 'பயனில்சொல் பாராட்டுவானை மகன் எனல் மக்கட் பதடி எனல்'— எனல் என்னும் சொல் வந்துள்ள இரண்டிடங்களுக்கும் உரிய இலக்கண வேறுபாடு யாது? விளக்குக. (1966)

'பயனில் சொல் பாராட்டுவானை' என்ற குறளில் 'மகன் எனல்' 'பதடி எனல்' என வந்த இரண்டும் அல்லீற்று வியங்கோள் என்றும் முன்னது எதிர்மறைக் கண்ணும் பின்னது உடன்பாட்டின் கண்ணும் வந்தன என்றும் பரிமேலழகர் உரைத்தார்.

ஆனல், 'மகன் எனல்' என்ற விடத்து எனல் என்பது எதிர்மறை ஒருமை ஏவல் என்றும், 'பதடி எனல்' என்ற விடத்து எனல் என்பது வியங்கோள் என்றும் சிவஞான முனிவர் உரைத்தார்.

மகன் எனல் என்பது மகன் என்று சொல்லற்க என்று பொருள் தருதலால் எதிர்மறையாயிற்று. பதடி எனல் என்பது மக்களுள் பதடி என்று சொல்லுக என்று பொருள் தருதலால் உடன்பாடாயிற்று.

156. பெயரெச்சங்கள் காரியப்பொருட்டாயும், காரணப்பொருட்டாயும், இவ்விருதிறத்தவாயும் வருதற்கு உதாரணம் தந்து விளக்குக. (1961)

(1) உண்ட சோறு: நோய் தீர்த்த மருந்து— ஈண்டுச் சோறு மருந்து என்பன காரணப் பொருளாய் நிற்க அவற்றின் காரியமாக உண்ணப்படல் தீர்த்தல் என்ற தொழில்கள் வந்துள்ளன. எனவே உண்ட, தீர்த்த என்ற பெயரெச்சங்கள் காரியப் பொருட்டாய் வந்தனவாகும்.

(2) உணவு உண்ட இளைப்பு, சங்கு சுட்ட சுண்ணாம்பு — ஈண்டு இளைப்பு, சுண்ணாம்பு என்பன

காரியமாய் நிற்க அவற்றின் காரணமாக உண்ணப்படுதல், சுடப்படுதல் என்ற தொழில்கள் வந்துள்ளன. எனவே உண்ட சுட்ட என்ற பெயரெச்சங்கள் காரணப் பொருட்டாய் வந்தனவாகும்.

(3) வனைந்த குடம் — ஈண்டு வனைதலாகிய தொழில் முன் நிகழப் பின் குடம் தோன்றியது எனக் கொண்டால் வனைந்த என்பது காரணப் பொருட்டாகும். முன்னர்க் குடம் இருக்க அதனைச் சிறப்பிக்க வனைதல் என்ற தொழில் (அலங்கரித்தல்) பின் நிகழ்ந்தது எனக் கொண்டால் காரியப் பொருட்டாகும். இங்ஙனம் குடத்திற்கு முன்னும் பின்னும் வனைதல் என்ற தொழில் நடைபெறுதலின் வனைந்த என்ற பெயரெச்சம் இருதிறத்தவாயும் வந்ததாகும்.

157. செய்யும் என்பது எச்சமாகவும் முற்றாகவும் நின்று பெறும் விதிகளைத் தந்து விளக்குக.

செய்யும் என் எச்சம்: இது பெயரெச்சத்துள் ஒரு வகையாகும். எதிர்காலம் காட்டும். பால்காட்டும் விகுதியைப் பெறாது செய்வதாதி அறுபொருட் பெயரும் எஞ்சநிற்கும். செய்யும் என் எச்சத்து ஈற்று உயிர்மெய் கெடுவதுண்டு. செய்யுளில் உம் என்னும் இறுதி உந்து எனத்திரியும்.

விதி : ('செய்த செய்கின்ற) செய்யுமென் பாட்டிற்
காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.'
'செய்யுமென் எச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்உந்து ஆகலும் (முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும்) உளவே.'

(எ-டு) 1. உண்ணும் சாத்தன்; உண்ணும் கலம்.
2. ஆம் பொருள்; போம் பொருள்.
3. தெண்கடற் றிரைமிசைப் பாயுந்து.

செய்யும் என் முற்று : இது வினைமுற்றுக்களில் ஒரு வகையாகும். நிகழ்காலம் எதிர்காலம் இரண்டையும் காட்டும். காலங்காட்டும் இடைநிலை பெரும்பாலேயே உம் என்னும் விகுதி காலங்காட்டும். இறுதியில் நின்ற உயிரேனும் உயிர்மெய்யேனும் கெடுவது உண்டு.

விதி : '(றவ்வொடு உகர உம்மை) ................
................. செய்யும் நிகழ்பெதிர்வும்'
'செய்யுமென் ......................
.............................. முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.'

(எ-டு) 1. குதிரை உண்ணும்; யானை செல்லும்.
2. தோழி கலுழ்ம். (உயிர்கெட்டது.)
3. அம்பலூரும் அவனொடு மொழிமே.
(உயிர்மெய் கெட்டது)

158. ஆம் பொருள் : இது வினைத் தொகையா? பெயரெச்சத் தொடரா? காரணங் காட்டி நிறுவுக. (1967)

ஆகும் பொருள் என்ற பெயரெச்சத் தொடர் 'செய்யுமென் னெச்சவிற் றுயிர் மெய் சேறலும்' என்ற விதிப்படி கு என்னும் உயிர்மெய் கெட்டு ஆம் பொருள் என முடிந்துள்ளது. எனவே ஆம்பொருள் என்பது பெயரெச்சத் தொடரேயாகும்.

மற்றும், வினைத் தொகை என்பது பெயரெச்சத்தின் ஈறுகெட்டுப் பகுதிமாத்திரம் நின்று முடியும் என்பதற்குக் 'காலம் கரந்த பெயரெச்சம் வினைத்

தொகை' என்ற விதி உள்ளது. அதன்படி ஆகும் என்னும் பெயரெச்சத்தின் காலங்காட்டும் உம் என்னும் விகுதி கெட்டு உகரச் சாரியை வந்து ஆகுபொருள் என்று முடியவேண்டும். அங்ஙனம் முடியாமல் மகர ஒற்றுப் பெற்று நிற்றலின் ஆம் பொருள் என்பது வினைத் தொகையன்று.

159. வினையெச்ச வாய்பாடுகளை எழுதி அவை காலம் காட்டுமாற்றையும் வரைக.

செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர், செய்வான், செய்பான், செய்பாக்கு என்ற பன்னிரண்டும் வினையெச்ச வாய்பாடுகளாகும். இவற்றுள் செய்து முதலிய ஐந்தும் இறந்த காலமும், செய என்ற ஒன்று நிகழ்காலமும், செயின் முதலிய ஆறும் எதிர்காலமும் காட்டும். இப் பன்னிரு வகையான எச்சங்களில் செய்து என்ற ஒன்று மட்டும் இடை நிலையாலும் ஏனைப் பதினொன்றும் விகுதியாலும் காலங்காட்டும்.

இனிச் செயின் என்னும் வாய்பாட்டுப் பொருளில் செய்தால், செய்தக்கால், செய்தலும் என வருவனவும், செய்வான் என்னும் வாய்பாட்டுப் பொருளில் செயற்கு என வருவனவும், எதிர்மறைப் பொருளில் செய்யாமல், செய்யாமை, செய்யாக்கடை என வருவனவும் வினையெச்ச வாய்பாடுகளாகக் கொள்ளப்படும். இவற்றுள் செய்யாமல் செய்யாமை என்பன இறந்த காலமும், ஏனைய எதிர்காலமும் காட்டும்.

இனிச் செய்து என்னும் எச்சம் உகர ஈருக நில்லாது ஆடி தழீஇ என இகர ஈறும், போய் என யகர ஈறும் விகாரப்பட்டு விகுதியான் இறந்தகாலம் காட்டுதலும், புக்கு விட்டு எனப் பகுதி இரட்டித்து

விகாரப்பட்டுப் பகுதியான் இறந்தகாலம் காட்டுதலும் உண்டு.

160. 'செய்து செய்பு' என்ற நூற்பாவில் 'பிற' என்ற மிகையால் தழீஇக் கொள்ளப்படுவன யாவை? (1962)

செய்து செய்பு என்ற நூற்பாவில் இன வினையெச்சம் பிற என்றதனால், 'அற்றால் அளவறிந்துண்க' 'ஒலித்தக்கால் என்னும் உவரி' 'காண்டலும் இதுவே சொல்லும்' எனச் செயின் எனும் வாய்பாடுபோல் எதிர் காலம் காட்டுவனவும், 'கூற்மல் குறித்ததன்மேல் செல்லும் கடும் கூளி' 'கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்' 'ஈதலியை யாக்கடை' என எதிர்மறை விகற்பங்களாய் வருவனவும், இத்தொடக்கத்துக் குறைச்சொல்லாய் வினையெஞ்ச நிற்பன எல்லாமும் தழீஇக் கொள்ளப் படும்.

இன்னும் பிற என்றதனால் செய்தென்னும் வாய்பாட் டெச்சங்களும் இடைநிலையின்றி ஆடிக்கொண்டான் தழீஇக்கொண்டான் என இறுதிநிலை விகாரப்பட்டும், புக்கு நின்றான் என முதனிலை விகாரப்பட்டும் காலங் காட்டுவனவும் உளவெனவும், செயவெனச்சம் எதிர் காலத்திற்கு முரித்தெனவும் தழீஇக்கொள்ளப்படும்.

161. முதலில் நான்கும் ஈற்றின்மூன்றும் என்ற நூற்பாவின் பொருள்களை ஆராய்க.

'அவற்றுள்,
முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.

என்பது நூற்பா.

முதற்பொருள்: செய்து முதலிய பன்னிரண்டனுள் முதலிற் கூறப்பட்ட செய்து செய்பு செய்யா செய்யூ என்ற நான்கும் ஈற்றில் கூறப்பட்ட வான் பான் பாக்கு என்ற மூன்றும் வினைமுதல்வினை கொண்டுமுடியும்; ஒழிந்த ஐந்தும் வினைமுதல்வினையையும் பிறிதன் வினையையும் கொண்டு முடியும். (இது மயிலைநாதர், சடகோபராமாநுசாச்சாரியார் ஆகிய இருவரும் கொண்ட உரை.)

இரண்டாம் பொருள்: செய்து முதலிய பன்னிரண்டனுள் முதலிற் கூறப்பட்ட செய்து, செய்பு, செய்யா, செய்யூ என்ற நான்கும் ஈற்றில் கூறப்பட்ட வான், பான், பாக்கு என்ற மூன்றும் வினைமுதலைக் கொண்டு முடியும்; இடைநின்ற செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்ற ஐந்தும் பிறவாறு வருவனவும் வினை முதலையும், பிறவற்றையும் கொண்டு முடியும். (இது சங்கரநமச்சிவாயர், சிவஞானமுனிவர், ஆறுமுக நாவலர் ஆகிய மூவரும் கொண்ட உரை.)

முதல் உரைக்கு மறுப்பு: 'வினை முதல் கொள்ளும் பிறவு மேற்கும்பிற' என்பதற்குப் பதிலாக 'வினை முதல் வினை கொளும் பிறவினை கொள்ளும்' எனச் கூறினும் யாப்பமையும் அவ்வாறு கூறாமையானும், வினைகொண்டு முடியுமென இதற்குக் கூறின் முன்னர்க் கூறிய பெயரெச்சத்திற்கும் பெயர்கொண்டு முடியு மெனக் கூறல்வேண்டும். அவ்வாறு கூறாமையானும், பெயரெச்ச வினையெச்சங்கள் பெயரையும் வினையை யும் கொண்டு முடியும் என்பது, பொதுவியலுள் 'பெயர் வினையும்மை' என்ற நூற்பாவில் தத்தம் எச்சம் கொள்ளும் என்பதனால் கூறப்படுதலானும் ஈண்டு வினைமுதல் வினைகொளும் என்ற உரை பொருந்தாது

162. வினையெச்சங்கள் காரணப் பொருட்டாயும் காரியப் பொருட்டாயும் காரண காரியமென்னும் இருபொருட்டாயும் வருதற்கு ஒவ்வோர் உதாரணங் காட்டுக. (1968)

1. நடந்து வந்தான் என்பது வினையெச்சம் காரணப்பொருட்டாய் வந்ததற்கு உதாரணமாகும். (வருதலாகிய தொழிற்குமுன் நடத்தலாகிய தொழில் நிகழ்தலின் நடந்து என்னும் எச்சம் காரணப்பொருட்டாயிற்று.)

2. நெல் விளைய மழை பொழிந்தது என்பது வினையெச்சம் காரியபொருட்டாய் வந்ததற்கு உதாரணமாகும். (பொழிதலாகிய வினைக்குப்பின் விளைதலாகிய தொழில் நிகழ்தலின் விளைய என்னும் எச்சம் காரியப் பொருட்டாயிற்று.)

3. உண்ண வந்தான் என்பது வினையெச்சம் காரண காரியம் என்னும் இருபொருட்டாயும் வந்ததற்கு உதாரணமாகும். (வருதலாகிய தொழிற்குமுன் 'உண்ண வேண்டும்' என்ற கருத்து நிகழ்தலின் காரணமாகியும், வருதலாகிய தொழிற்குப்பின் உண்ணலாகிய தொழில் நிகழ்தலின் காரியமாயும் இரு பொருள்படுதலின காரணகாரிய மென்னும் இரு பொருட்டாயிற்று.)

163. முற்றெச்சம் பற்றிய நூற்பாவை எழுதி விளக்குக.

'வினைமுற்றே வினையெச்ச மாகலும்
குறிப்பு முற்று ஈரெச்ச மாகலும் உளவே' என்பது முற்றெச்சம் பற்றிய நூற்பாவாகும்.

தெரிநிலை வினைமுற்று வினையெச்சம் ஆதலும், குறிப்பு வினைமுற்று வினையெச்சமும் பெயரெச்சமும்

ஆதலும் உளவாகும். (ஈண்டு முற்று எச்சமாதல் என்பது தன்னுருவில் திரியாமல் நின்று எச்சப் பொருளை மட்டும் தருதலாகும்.)

(எ-டு) (1) மோயினள் உயிர்த்த: முகந்தனர் கொடுப்ப, ஈண்டு மோயினள், முகந்தனர் என்ற தெரிநிலை முற்றுக்கள் மோந்து முகந்து என வினையெச்சப் பொருளைத் தந்தன. (2) உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து: நீர்வார் கண்ணை நீயிவண் ஒழிய. ஈண்டுக் கையினர் கண்ணை என்ற குறிப்பு முற்றுக்கள் கையினராய், கண்ணை உடையையாய் என வினையெச்சப் பொருளைத் தந்தன. (3) வெந்திறலினன் விறல்வழுதி: அஞ்சாயலள் ஆயிழை. ஈண்டு வெந்திறலினன், அஞ்சாயலள் என்ற குறிப்பு முற்றுக்கள் வெந்திறலையுடைய, அஞ்சாயலையுடைய எனப் பெயரெச்சப் பொருளைத் தந்தன.

இனி நூற்பாவில் ஆகலும் ஆகலும் என எண்ணின் கண் நின்ற எச்சவும்மையான் (1) உண்டான் சாத்தன் ஊருக்குப்போனான் என்புழி உண்டான் என்ற தெரிநிலைமுற்று உண்ட எனப் பெயரெச்சமாதலும், (2) வெறுத்த ஞானி வீட்டை யடைந்தான் என்புழி வெறுத்த என்ற எச்சம் வெறுத்தான் என முற்றாதலும், (3) பெறுவது கொள்வாரும் கள்வரும் நேர் என்புழி நேர் என்ற முதனிலை, முதனிலைத் தனிவினையும் வினை முற்றும் ஆதலும், (4) வரிப்புனை பந்து என்புழி வரி என்ற முதனிலை வரிந்து என வினையெச்சமாதலும் கொள்ளப்படும்.

**164.** இடைப்பிறவரல் என்றால் என்ன? விளக்குக.

வேற்றுமையுருபுகளும் வினைமுற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் தாம்தாம் கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்கும் இடையே பிற சொற்கள் வருதல் உள. அங்ஙனம் இடையே வருவனவற்றை இடைப்பிறவரல் என்ப.

**விளக்கம் :** (1) சாத்தன் வயிறார உண்டான் என்புழிச் சாத்தன் என்ற முதல் வேற்றுமைக்கும் அது கொண்டு முடியும் உண்டான் என்ற வினைக்கும் இடையேவந்த 'வயிறார' என்பது இடைப்பிறவரலாம். (2) சாத்தனது இத்தடக்கை யானை என்புழிச் சாத்தனது என்ற ஆறும் வேற்றுமைக்கும் அது கொண்டு முடியும் யானை என்ற பெயர்க்கும் இடையே வந்த 'இத்தடக்கை' என்பது இடைப்பிறவரல். (3) வந்தான் அவ்வூர்க்குப் போன சாத்தன் என்புழி வந்தான் என்ற வினைமுற்றுக்கும் அது கொண்டு முடியும் சாத்தன் என்ற பெயர்க்கும் இடையே வந்த 'அவ்வூர்க்குப்போன' என்பது இடைப் பிறவரல் (4) வந்த அவ்வூர்ச் சாத்தன் என்புழி வந்த என்ற பெயரெச்சத்திற்கும் அது கொண்டு முடியும் சாத்தன் என்ற வினைக்கும் இடையே வந்த 'அவ்வூர்' என்பது இடைப்பிறவரல். (5) வந்து இற்றைநாள் போனான் என்புழி வந்து என்ற வினையெச்சத்திற்கும் அது கொண்டுமுடியும் போனான் என்ற வினைக்கும் இடையேவந்த 'இற்றைநாள்' என்பது இடைப் பிறவரல்.

கருதலர்ச் சீறிய கடுங்கொல்யானை என்புழிச் சீறிய என்ற பெயரெச்சத்திற்கும் அதுகொண்டு முடியும் யானை என்ற பெயருக்கும் இடையே கடுங்கொல் என்பது வந்ததாயினும், கொல் என்பது வினைத் தொகைச் சொல்லாகலின் அதனைக் காலங்கரந்த பெய

ரெச்சமாகக்கொண்டு ‘சீறிய கொன்ற’ எனப் பெயரெச்ச அடுக்காகக்கொள்ள வேண்டுதலின் கொல் என்பது இடைப்பிறவரலன்று கடும் என்பது மட்டுமே இடைப் பிறவரலாகும்.

165. ‘ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே’ இச் சூத்திரத்திற்கு விளக்கங் கூறி ஒவ் வோர் உதாரணங் காட்டுக. (1968)

‘ஒருமொழி ஒழிதன் இனங்கொளற்கு உரித்தே’ —என்பது நூற்பா.

பொருள்: ஒருமொழி—பெயர் வினை இடை உரி என்ற நான்கு சொற்களுள் ஒவ்வொன்றும்; ஒழிதன் இனம்—எஞ்சி நின்ற தத்தம் இனங்களை; கொளற்கு உரித்து—கொள்ளுதற்கு உரியதாம்.

**விளக்கம்:** (1) ‘சோற்றை நனி உண்டான்’ என்பது கறியை நனி தின்றான் என்ற இனப் பொருள் கொண்டது. இதில் சோறு என்ற பெயர்ச்சொல் கறி என்ற தன் இனத்தையும், உண்டான் என்ற வினைச் சொல் தின்றான் என்ற தன் இனத்தையும் கொண்டன. (2) ‘நஞ்சுண்டான் சாவான்’ என்பது ‘நஞ்சுண்டாள் சாவாள்’ ‘நஞ்சுண்டார் சாவார்’ என்ற இனப் பொருள் கொண்டது. இதில் ஆன் என்னும் விகுதி இடைச்சொல் ஆள் ஆர் என்னும் தன் இனமாகிய விகுதி இடைச்சொற்களைக் கொண்டது. (3) ‘ஆன்றோர் வறிதே முறுவலிப்பர்’ என்பது ‘கயவர் நனி நகைப்பர்’ என்ற இனப்பொருள் கொண்டது. இதில் வறிது (சிறிது) என்னும் உரிச்சொல் நனி (மிகுதி) என்னும் தன இனமாகிய உரிச்சொல்லைக் கொண்டது.

**166.** 'ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே'— இந்நூற்பாவிற்குப் பொருள் தந்து உதாரணங்காட்டி விளக்குக. (1966)

*விடை: 165-ல் காண்க.*

**167.** பத்துவகை எச்சங்களையும் எழுதி உதாரணங்களுடன் விளக்குக.

எச்சங்கள் சொல்லெச்சம் குறிப்பெச்சம் என இரு பிரிவுபடும். அவற்றுள் சொல்லெச்சமானது பெயர், வினை, உம்மை, சொல், பிரிப்பு, என, ஒழியிசை, எதிர் மறை, இசை என ஒன்பது வகைப்படும். குறிப்பெச்சம் ஒரே வகைப்படும். ஆக எச்சங்கள் பத்து வகையாயின.

**விளக்கம் :** (*1*) பெயரைக் கொண்டு முடிவது பெயரெச்சமாம். (எ-டு) செய்த, செய்கின்ற, செய்யும். (*2*) வினையைக் கொண்டு முடிவது வினையெச்சமாம். (எ-டு) செய்து, செய, செயின். (*3*) உம்மென்னும் இடைச்சொல் இறந்ததையேனும் எதிரதையேனும் தரின் உம்மை எச்சமாம். (எ-டு) சாத்தனும் வந்தான். ஈண்டு உம் என்பது முன்னர்க் கொற்றனும் வந்தான் என இறந்ததைத் தந்தது. (**4**) சொல்லென்னும் சொல் எஞ்சி நிற்பது சொல்லெச்சமாம். (எ-டு) கடி என்றார் கற்றறிந்தார். ஈண்டுக் கடி என்று சொன்னார் என்பது கடி என்றார் எனச் சொல் என்னுஞ் சொல் எஞ்சி நின்றது. (5) ஏ, ஓ என்னும் இடைச் சொற்கள் பிரிக்கப்பட்ட பொருளைத்தரின் பிரிநிலை யெச்சமாம். (எ-டு) சாத்தனே கொண்டான்; சாத்தனோ கொண்டான். ஈண்டு ஏகார ஓகாரங்கள் பிறர் கொண்டிலர் என்ற பிரிக்கப்பட்ட பொருளைத் தந்தன. (6) என என்னும் இடைச் சொல் தனக்குரிய வினையைக்

கொண்டு முடியின் எனவெச்சமாம். (எ-டு) கடல் ஒல்லென ஒலித்தது; நரம்பு விண்ணென விசைத்தது. ஈண்டு என என்பது ஒலித்தது விசைத்தது என்னும் வினை கொண்டது. (7) மன், தில், ஓ என்னும் இடைச் சொற்கள் ஒழிந்த பொருளைத் தரின் ஒழியிசை யெச்சமாம். (எ-டு) கூரியதோர்வாள் மன்; வருக தில்லம்ம; கொளலோ கொண்டான். ஈண்டு மன் தில் ஓ என்பன முறையே வாள்கோடிற்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டுய்யப் போயினானல்லன் என்ற ஒழிந்த பொருள்களைத் தந்தன. (8) ஏ, ஓ உம் என்னும் இடைச்சொற்கள் எதிர்மறைப் பொருளைத் தரின் எதிர்மறை யெச்சமாம். (எ-டு) வரலும் உரியன். ஈண்டு உம் என்பது வாராமைக்கும் உரியன் என எதிர்மறைப் பொருளைத் தந்தது. (9) பெயரெச்சம் முதலாக எதிர்மறை யெச்சம் ஈருகக் கூறப்பட்ட எண் வகை எச்சங்களினின்று நீங்கிப் பிறவாறான சொற் களில் ஒன்றும் பலவும் எஞ்சி நிற்பது இசையெச்சமாம். இசை என்பது சொல்; அது ஈண்டு நால்வகைச் சொற் களையும் சுட்டுகின்றது. (எ-டு) இணரெரி தோய்வன்ன இன்னா செயினும் - புணரின் வெகுளாமை நன்று என்ற திருக்குறட்குப் 'பிறவுயிர்க்கு இன்னாசெயின் அவை பிழையாது தமக்கு வருதல் கருதித் தம்மாட்டு அன்பும்' என்றற்றொடக்கத்து அகலவுரை இசை யெச்சம். (10) பொருளைக் குறிப்பால் உணர்த்திடும் ஒன்றொழி பொதுச்சொல் முதலிய ஒன்பதும் குறிப் பெச்சமாம். (எ-டு) ஆயிரமக்கள் பொருதார் ஈண்டு மக்கள் என்னும் பெயரும் பொருதார் என்னும் வினையும் பெண்ணை ஒழித்து ஆணைக் குறிப்பால் உணர்த்தின.

168. இசையெச்சம், குறிப்பெச்சம், எதிர்மறையெச்சம்—இவற்றை எடுத்துக்காட்டால் விளக்குக. (1957)

விடை 167-னுள் காண்க.

169. தொகைநிலைத்தொடர்மொழி என்பதில் தொகை என்பதற்குரிய விளக்கங்களைத் தருக.

தொகை என்பது பலபொருள் ஒருசொல். இதற்கு 'உருபு முதலிய தொகுதல் (மறைதல்)' என ஒரு பொருளும், 'ஒட்டி ஒருசொல் நீர்மைப்படுதல் (திரண்டு ஒன்றுதல்)' என மற்றொரு பொருளும் கூறப்படுகின்றன.

இவ்விரு பொருளில் 'உருபு முதலிய தொகுதல்' என்னும் முதற்பொருளை மட்டும் தழுவி உரை வகுத்தவர்கள் நச்சினார்க்கினியர், மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர், சிவஞான முனிவர் ஆகியோர்.

'ஒட்டி ஒருசொல் நீர்மைப் படுதல்' என்னும் இரண்டாவது பொருளைமட்டும் தழுவி உரை வகுத்தவர்கள் சேனாவரையர், தெய்வச்சிலையார் ஆகியோர்.

இனி இவ்விருபொருளையும் தழுவி இளம்பூரணர் உரை வகுத்தார்.

'ஐயும் கண்ணும் அல்லாப் பொருள் வயின்—மெய் உருபு தொகா இறுதியான' எனவும், 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' எனவும் ஆசிரியர் தொல்காப்பியர் கூறுதலினாலும், 'உருபுஇடை ஒழிய' எனவும் 'ஒருமொழிபோல் நடப்பன தொகை நிலைத் தொடர்ச்சொல்' எனவும் ஆசிரியர் நன்னூலார் கூறுதலினாலும் இவ்விரு பொருளும் இவ்விரு ஆசிரியர்க்கும் உடன்பாடு என்பது பெறப்படும்.

எனவே, தொகை என்பதற்கு இவ்விரு பொருளும் உண்டு எனவும், இரண்டில் ஒன்று குறைந்து ஒன்று மட்டும் பெற்றுக் 'கேழற் பன்றி' என ஒருசொல் நீர்மைப்படினும், 'துறைகெழுநாட்டே' என உருபு மட்டும் தொக்குவரினும், 'நிலங்கடந்தான்' என உருபும் தொக்கு, ஒரு சொல் நீர்மையும் பட்டுவரினும் தொகையேயாம் எனவும் கொள்வது தக்கதாம்.

170. கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து என்பன தொகை நிலைத் தொடராமாறு யாங்ஙனம்? (1961)

பெயரொடு பெயரும் பெயரொடு வினையும் கூடுங் கால் இடையே ஆறு வேற்றுமையுருபும் தொக்கு வருவது வேற்றுமைத் தொகை என்பது விதி.

ஈண்டுக் 'கடந்தான் நிலம்' 'இருந்தான் குன்றத்து' என்பவற்றில் வேற்றுமை உருபுகள் இடையே தொகா மல் இறுதியில் தொக்குவருதலின் இவை தொகை நிலைத் தொடராகுமோ என்ற வினா எழக்கூடும். இதற்கு விடை: 'நிலங்கடந்தான்' 'குன்றத்திருந்தான்' என இடையிலே வேற்றுமையுருபு தொக்கு ஒரு சொல் நீர்மைப்பட்டு நின்ற தொகைநிலைத் தொடர்களே 'கடந்தான் நிலம்' 'இருந்தான் குன்றத்து' என மாறிக் கூறப்படுதலின் இவையும் தொகைநிலைத் தொடர் மொழிகளேயாம் என்பது.

171. அறுவகைத் தொகைகளையும் எழுதி விளக்குக.

வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உவமத்தொகை, உம்மைத்தொகை, அன் மொழித்தொகை எனத் தொகைநிலைத் தொடர்மொழி ஆறுவகைப்படும்.

## வேற்றுமைத்தொகை

ஐ முதலிய ஆறு வேற்றுமை உருபுகளும் இடையிலே கெட்டு நிற்கப் பெயரோடு பெயரும் பெயரோடு வினையும் தொடர்வது வேற்றுமைத் தொகையாம்.

**விதி :** இரண்டு முதலா இடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே.

(எ-டு) நிலங்கடந்தான், தலைவணங்கினான், சாத்தன் மகன், ஊர் நீங்கினான், சாத்தன்கை, குன்றக் கூகை, ஈண்டு நிலங்கடந்தான் முதலியவற்றில் இரண்டாவது முதலிய வேற்றுமை உருபுகள் இடையே தொக்கு வந்தன. கடந்தான் நிலம் என இறுதிக்கண் உருபு தொக்கு வருவதும் உண்டு.

## வினைத்தொகை

காலங்காட்டும் இடைநிலை முதலியன இடையிலே கெட்டு நிற்கப் பெயரெச்சத்தின் முதனிலை பெயரொடு தொடர்வது வினைத்தொகையாம்.

**விதி :** காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

(எ-டு) கொல்யானை, அலர்தாமரை. ஈண்டுக் கொன்ற முதலிய பெயரெச்சம் இடைநிலையும் விகுதியும் கெட்டுக் கொல் முதலிய பகுதியாகிப் பெயரொடு தொக்கு வந்தது.

## பண்புத்தொகை

ஆகிய என்னும் பண்பை விளக்கும் மொழி இடையே கெட்டுநிற்பப் பண்புப்பெயரும் பண்பிப் பெயரும் தொடர்வதும், அவ்வாறே பொதுப்பெயரும் சிறப்புப்பெயரும் தொடர்வதும் பண்புத்தொகையாம்.

விதி : பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை.

(எ-டு) செந்தாமரை, கருங்குவளை; கேழற்பன்றி, சாரைப்பாம்பு. ஈண்டுச் செம்மை முதலிய பண்புப் பெயரும் தாமரை முதலிய பண்பிப்பெயரும் தொடர இடையே ஆகிய என்ற உருபு கெட்டுவந்தது; கேழல் முதலிய சிறப்புப்பெயரும் பன்றி முதலிய பொதுப் பெயரும் தொடர இடையே ஆகிய என்ற உருபு கெட்டு வந்தது.

### உவமத்தொகை

போல முதலிய உவமவுருபுகள் இடையே கெட்டு நிற்ப உவமப்பெயரும் பொருட்பெயரும் தொடர்வது உவமத் தொகையாம்.

விதி : உவம வுருபிலது உவமத் தொகையே.

(எ-டு) புலிக்கொற்றன், மழைக்கை, துடியிடை, பொற்சுணங்கு. ஈண்டுப் புலி முதலிய உவமப்பெயர் களுக்கும் கொற்றன் முதலிய பொருட்பெயர்களுக்கும் இடையேபோல முதலிய உவமவுருபுகள் கெட்டுவந்தன.

### உம்மைத்தொகை

எண்ணப்படும் பொருள் முதலிய பெயர்களுக்கு இடையிலும் ஈற்றிலும் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்ற அளவைப் பெயர்களுக்கு இடையிலும் ஈற்றிலும் உம் என்னும் இடைச்சொல் கெட்டு நிற்பது உம்மைத் தொகையாம்.

விதி : எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனும்நான் களவையுள் உம்மிலது அத்தொகை.

(எ-டு) கபிலபரணர், காலேயரைக்கால்; கழஞ் சரை, தொடியரை; நாழியாழாக்கு, கலனே தூணி;

சாணரை, சாணேயிருவிரல். ஈண்டுக் கபிலரும் பரணரும் என்று எண்ணப்படும் பொருள்களுக்கு இடையிலும் ஈற்றிலும் உம்மென்னும் இடைச்சொல் தொக்கு வந்தது. பிறவும் அன்ன.

### அன்மொழித் தொகை

வேற்றுமைத் தொகை முதலிய ஐந்து தொகை நிலைத்தொடர் மொழிகளுக்கு மேல் மற்றும் ஓரிரு சொற்கள் தொக்கு வருவது அன்மொழித் தொகையாம்.

**விதி:** ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி.

(எ-டு) பூங்குழல், தாழ்குழல், கருங்குழல், கனங் குழல், உயிர்மெய். ஈண்டுப் பூங்குழல் முதலிய ஐந்து தொகைகளின் புறத்தே 'உடையாள்' முதலிய சொற் கள் தொக்கு வந்தன.

**172. வினைத்தொகை என்பதற்குக் கூறப்படு கின்ற பொருள் வேற்றுமைகளை எழுதுக. (1964)**

'கொல்கின்ற' என்பது முதலிய பெயரெச்சங் களின் காலங்காட்டும் இடைநிலை முதலியன கெட்டுப் பகுதி மட்டும் வரும்பெயரொடு தொடர்வது வினைத் தொகையாம். இக்கருத்தைக் 'காலங்கரந்த பெயரெச் சம் வினைத்தொகை' என நன்னூலார் தெரிவிக்கின்றார்.

இனி 'அட்டது களிறு' அடாநின்றது களிறு, அடுவது களிறு' என வரும் முற்றுக்களின் இறுதி தொகுதலின் அடுகளிறு என வினைத் தொகையா யிற்று என்பது மற்றொரு கருத்து. 'அடுகளிறு' என்பது 'அடுகளிறு இது; அடுகளிறு வந்தது' எனப் பின்னும் பெயர் வினைகளை ஏற்றலின், முற்றுக்

களின் இறுதி தொக்கதன்று; பெயரெச்சத்தின் இறுதி தொக்கதேயாகும்.

இனி, அடுகளிறு என்பதில் உள்ள 'அடு' என்னும் முதனிலை வினையாகிய காரணத்தின்கண், 'அட்டது' முதலிய முக்கால வினையாகிய காரியங்கள் தொக்கு நிற்றலின் அடுகளிறெனா வினைத் தொகையாயிற்று என்பதும் ஓர் கருத்து. காரணத்தின்கண் காரியம் தொக்கு நிற்றற்குக் களிறு என்னும் முடிக்குஞ் சொல் வேண்டாமையானும், அது 'அடு' என்னும் ஒரு மொழி இலக்கணமே யாகலானும், ஈண்டு அதிகரித்த தொடர்மொழி இலக்கணம் ஆகாமையானும் இக்கருத்தும் பொருந்தாது; பெயரெச்சத்தின் இறுதி தொக்கது வினைத்தொகை என்னும் கருத்தே பொருந்தும்.

173. 'செய்யதாமரை, செய்யது தாமரை என்ற தொடர்களே, செந்தாமரை என்று ஆயின' என்று கொள்ளலாகாதா? ஆய்க. (1963)

செய்ய தாமரை என்பதில் உள்ள 'செய்ய' என்னும் பெயரெச்ச இறுதித்தொக்குச் செந்தாமரை என்று ஆயிற்று என்பாரும், செய்யது தாமரை என்பதில் உள்ள 'செய்யது' என்னும் முற்று இறுதி தொக்குச் செந்தாமரை என்று ஆயிற்று என்பாரும் உளர்.

'பண்பை விளக்கும் மொழி தொக்கது குணத்தொகை' என்பது விதியாகலானும் ஈண்டுத் தொக்கது எனப்படும் பெயரெச்ச இறுதியும் முற்று இறுதியும் மொழியாகாமையானும், வட்டக்கல் முதலிய பண்புத் தொகைக்கு அவ்விறுதிகளை விரித்தல் கூடாமையானும், பெயரெச்ச விறுதிதொக்கதேல் அதனை வினைத்தொகை

என்றல் வேண்டுமன்றிப் பண்புத் தொகை என்றல் கூடாமையானும், முற்று இறுதி தொக்கதேல் 'செந்தா மரை இது; 'செந்தாமரை விரிந்தது' எனப் பின்னும் பெயர் வினைகள் ஏற்றல் கூடாமையானும், செய்ய தாமரை செய்யது தாமரை என்ற தொடர்களே, செந்தாமரை என்று ஆயின' என்று கொள்ளல் ஆகாது; 'செம்மை ஆகிய தாமரை என்பதில் உள்ள ஆகிய என்னும் பண்பை விளக்கும் மொழி தொக்குச் செந்தாமரை எனவாயிற்று' என்று கொள்வதே பொருந்தும்.

174. முன்மொழி பின்மொழி பன்மொழி புற மொழிகளில் பொருள் சிறந்து நிற்கும் தொகை நிலைத் தொடர்கள் யாவை? (1962)

1. குடம் வனைந்தான், விரிபூ, செந்தாமரை, வேற்கண் என்றற்றொடக்கத்து இனம் விலக்கி வரும் வேற்றுமைத்தொகை வினைத்தொகை பண்புத்தொகை உவமத்தொகை ஆகிய நான்கிடத்தும் முன் மொழி களில் பொருள் சிறந்து நிற்கும்.

2. நிலம் உழுதான், சுடுதீ, செஞ்ஞாயிறு, தாய் தலையன்பன் என்றற்றொடக்கத்து இனம் விலக்காது வரும் வேற்றுமைத்தொகை வினைத்தொகை பண்புத் தொகை உவமத்தொகை ஆகிய நான்கிடத்தும் பின் மொழிகளில் பொருள் சிறந்து நிற்கும்.

3. கபிலபரணர் என்றற் றொடக்கத்து உம்மைத் தொகையில் அனைத்து மொழிக்கண்ணும் (பன்மொழி யிலும்) பொருள் சிறந்து நிற்கும்.

4. பூங்குழல் என்றற் றொடக்கத்து அன்மொழித் தொகையில் புறமொழியில் பொருள் சிறந்து நிற்கும்.

**175.** தொகைப் பொருள் சிறக்கும் இடங்கள் எவை? விளக்குக. (1959)

முன்மொழி, பின்மொழி, பன்மொழி, புறமொழி என்ற இந்நான்கு இடங்களும் தொகைப் பொருள் சிறக்கும் இடங்களாம்.

விளக்கம் : விடை 174-ல் காண்க.

**176.** மரவேலி : இத்தொடர்த் தொகைச் சொல்லில் மயங்கி நிற்கும் பொருள்கள் யாவை? (1968)

மரவேலி என்ற தொடர்த் தொகைச் சொல்லில் ஆறு பொருள்கள் மயங்கி நிற்கின்றன. அவை வருமாறு :

1. மரத்தைக் காக்கும் வேலி (2ம் வேற்றுமைத் தொகை),
2. மரத்துக்கு வேலி (4ம் ,, ),
3. மரத்தினது வேலி (6ம் ,, ),
4. மரத்தின் புறத்து வேலி (7ம் ,, ),
5. மரத்தாலாகிய வேலி (3ம் ,, ),
6. மரமாகிய வேலி (பண்புத் தொகை).

**177.** வழுக்கள் ஏழு யாவை? அவற்றிற்குக் காட்டுத் தருக.

திணை, பால், இடம், பொழுது, வினா, இறை, மரபு என வழுக்கள் ஏழு வகைப்படும்.

எடுத்துக்காட்டு

1. அவன் வந்தது — திணை வழு.
2. அவன் வந்தாள் — பால் வழு.
3. யான் வந்தான் — இட வழு.
4. நாளை வந்தாள் — கால வழு.

5. கறக்கின்ற எருமையை நோக்கி 'இது பாலோ சினையோ' என்பதும், ஒரு விரல் காட்டி 'இது பெரிதோ சிறிதோ' என்பதும் வினு வழு.

6. கடம்பூர்க்கு வழி யாது எனின் 'இடம்பூணி என் ஆவின் கன்றன்று' என்பதும், கருவூர்க்கு வழி யாது எனின் 'பருநூல் பன்னிரு தொடி' என்பதும், உப்பு இருக்கிறதோ எனில் பருப்பு இல்லை என்பதும் இறை (விடை) வழு.

7. யானை மேய்ப்பானை இடையன் என்பதும், ஆடு மேய்ப்பானைப் பாகன் என்பதும் மரபு வழு.

## 178. திணை பால் வழுவமைதிகளைத் திரட்டுக.

### திணை வழுவமைதி

1. திணை ஐயத்தை அவற்றின் பொதுச் சொல் கொடுத்து வினவவேண்டும்; மெய் தெரிந்த பொருளிடத்து அன்மைச் சொல் கொடுத்து விடையிறுக்க வேண்டும்.

(எ-டு) குற்றியோ மகனோ தோன்றுநின்ற உரு ?; மகனன்று; குற்றியல்லன்.

2. உயர்திணையைத் தொடர்ந்த அஃறிணைப் பொருளாதியாறும் உயர்திணை முடிபு பெறும்.

(எ-டு) நம்பி பொன்பெரியன்; நம்பி நாடு பெரியன்.

3. இருதிணைப் பொருள்கள் விரவியவழிச் சிறப்பினாலேனும், மிகுதியாலேனும், இழிபினாலேனும் ஏதேனும் ஒரு திணையால் முடிக்கப்பெறும்.

(எ-டு) 'திங்களும் சான்றோரும் ஒப்பர்'—இது திணைவிரவி மிகுதியான் உயர்திணை முடிவு ஏற்றது.

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிபட்டார் மூத்தார் குழவி எனுமிவர்'—இது திணைவிரவி மிகுதியான் உயர்திணை முடிபு ஏற்றது. 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா'—இது திணைவிரவி இழிபினான் அஃறிணை முடிபு ஏற்றது.

4. உவப்பு, உயர்வு, சிறப்பு, செறல், இழிப்பு என்னும் ஐந்து காரணங்களினால் ஒரு திணைச்சொல் மற்றொரு திணைச்சொல்லால் முடிவு பெறுதல் உண்டு.

(எ-டு) பசுவை என் அம்மை என்றல் உவப்பு. பசுங்கிளியார் என் உயிர்தந்தார் என்றல் உயர்வு. தம் மக்களைத் தம் பொருள் என்றல் சிறப்பு, ஏவவும் செய்கலான் தான் தேரான் அவ்வுயிர் போமளவும் ஓர் நோய் என்றல் செறல் (கோபம்). நாம் அரண் உடைமை என்றல் இழிப்பு.

## பால் வழுவமைதி

1. பால் ஐயத்தை அவற்றின் பொதுச்சொல் கொடுத்து வினவவேண்டும்; மெய்தெரிந்த பொருளிடத்து அன்மைச்சொல் கொடுத்து விடையிறுக்க வேண்டும்.

(எ-டு) ஆண்மகனோ பெண்மகளோ தோன்றுநின்றார்?; பெண்மகள் அல்லன்; ஆண்மகன் அல்லள்.

2. ஐம்பாற்பொருள்கள் விரவியவழிச் சிறப்பினாலேனும், மிகுதியாலேனும், இழிபினாலேனும் ஏதேனும் ஒரு பாலால் முடிக்கப்பெறும்.

(எ-டு) 'தானும் தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்'—இது ஆண்பால் பெண்பால் விரவிச் சிறப்பினான் ஆண்பால் முடிவு ஏற்றது.

3. உவப்பு, உயர்வு, சிறப்பு, செறல், இழிப்பு என்னும் ஐந்து காரணங்களினால் ஒருபாற்சொல் மற்றொரு பாற்சொல்லால் முடிவு பெறுதல் உண்டு.

(எ-டு) புதல்வனை என் அம்மை என்றல் உவப்பு, ஒருவனை அவர் என்றல் உயர்வு. தாதாய் மூவேழ் உலகிற்கும் தாயே என்றல் சிறப்பு. எனைத்துணைய ராயினும் என்னும் தினைத்துணையும் தேரான் பிறனில் புகல் என்றல் செறல். பெண்வழிச் செல்வானை இவன் பெண் என்றல் இழிப்பு.

4. ஒருமைப் பாலிற்குப் பன்மைப்பாற் சொலும், பன்மைப் பாலிற்கு ஒருமைபாற்சொலும் கொடுத்து முடித்தல் உண்டு.

(எ-டு) வெயில் எல்லாம்; நீர் எல்லாம். (இவை ஒருமைக்குப் பன்மை வந்தவை). இரண்டு கண்ணும் சிவந்தது; இருநோக்கு இவள் உண்கண் உள்ளது. (இவை பன்மைக்கு ஒருமை வந்தவை.)

இவ்வழுவமைதிகளுக்கு விதி :

1. ஐயம் திணைபால் அவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருள்மேல் அன்மையும் விளம்புவ.
2. உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறும்
அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின.
3. திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே.
4. உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே.
5. ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்
(ஓரிடம் பிறவிடம்) தழுவலும் உளவே.

**179.** 'யான் எம்மூர் புகுவன்'; இதனை ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி என்று கூறுதல் பொருந்துமா? ஆராய்க. (1967)

'யான் எம்மூர் புகுவன்' என்னும் தொடரில் யான் என்ற ஒருமையும் எம் என்ற பன்மையும் வந்தமையால் இது ஒருமைப் பன்மை மயக்கமாகத் தோன்றும். அதனால் 'ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும் ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.' என்ற விதிப்படி இதனை வழுவமைதி எனச் சிலர் குறிக்க எண்ணலாம்.

யான் என்னூர் புகுவன் என்று கூறவந்த ஒருவன் என்னூர் என்னாது தன் கிளைஞரையும் தன்னொடு படுத்து எம்மூர் என்று குறித்தானாகலின் இது வழாநிலையேயாம்; வழுவமைதியன்று.

**180.** கால விட வழுவமைதிகளைத் திரட்டுக.

### கால வழுவமைதி

1. தமது தொழில் இடையறாது முக்காலத்திலும் ஒத்து நடக்கும் பொருள்களை நிகழ்காலத்தாற் கூற வேண்டும்.

(எ-டு) அவனியைத் தாங்கி அரசர் இருக்கிறார்; நினக்குத் துணை யான் இருக்கிறேன்; மலை நிற்கிறது; யாறு ஒழுகிறது. இனி, 'மலை நிற்கும். தீச்சுடும்' எனச் 'செய்யும்' என் முற்றை உதாரணமாகக் காட்டுவது பொருந்தாது; மலை நிற்கும் தன்மையது, தீச்சுடும் தன்மையது எனப் பொருள்பட்டு இயற்கைப் பொருளை இற்றெனக்கிளத்தல் என்ற நூற்பாவில் அடங்கிவிடும் ஆகலின்.

2. ஏற்குமிடத்தில் விரைவு மிகுதி தெளிவு என்னும் மூன்று காரணத்தினாலும், யாதொரு காரணமும் இன்றி இயல்பினாலும் மூன்று காலமும் பிறழ்ந்து வருதலும் உண்டு.

*(எ-டு)* உண்கின்ற ஒருவன் 'உண்டேன்' என்பது விரைவு. 'அக்காட்டில் புகில் கூறை கோட்பட்டான்' என்பது மிகுதி. 'அறஞ்செய்யின் துறக்கம் புக்கான்' என்பது தெளிவு. 'யான் பண்டு விளையாடுவது இக்கா' என்பது இயல்பு.

இடவழுவமைதி

1. ஓரிடத்துச் சொல்லை மற்றோர் இடத்துச் சொல்லாகக் கூறுதலும், ஓரிடத்துச் சொல்லுடன் பிற இடத்துச் சொற்களை விரவிக் கூறுதலும் உண்டு.

(எ-டு) 'எம்பியை இங்குப் பெற்றேன் என்னை னக் கரிய தென்றான்' இதில் 'எம்பியே! உன்னை' என முன்னிலையாகக் கூறவேண்டியது எம்பியை எனப் படர்க்கையாகக் கூறப்பட்டது. 'நீயோ அவனோ யாரிது செய்தார்; நீயோ அவனோ யானோ யாரிது செய்தார்.' இவற்றில் ஓரிடத்துடன் பிறவிடம் விரவி வந்தன.

2. கொடை செலல் என்னும் படர்க்கையிடச் சொல் தன்மை முன்னிலைகளுடன் மயங்கி வருதல் உண்டு.

(எ-டு) எனக்குக் கொடுத்தான்; என்பாற் சென்றான்; நினக்குக் கொடுத்தான்; நின்பாற் சென்றான்.

இவ்வழுவமைதிகளுக்கு விதி :

1. முக்கா லத்தினும் ஒத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழும் காலத் தானே.

2. விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉம்முக் காலமும் ஏற்புழி.

3. (ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்)
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

4. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்.

181. ஆறுவகை வினா, எட்டுவகை விடை எவை? உதாரணம் தந்து விளக்குக.

அறிவு, அறியாமை, ஐயுறல், கொளல், கொடை, ஏவல் என வினா ஆறு வகைப்படும்.

சுட்டு, மறை, நேர், ஏவல், வினாதல், உற்றதுரைத்தல், உறுவது கூறல், இனமொழி என விடை எட்டு வகைப்படும். இவ்வெட்டனுள் முன்னைய மூன்றும் செவ்வன் இறை எனவும் பின்னைய ஐந்தும் இறை பயப்பது எனவும் கூறப்படும்.

உதாரணமும் விளக்கமும் : 'இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது' என்று (அறிந்துகொண்டே ஆசிரியர்) வினவுவது அறிவினா. 'இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது' என்று (அறியாமல் மாணாக்கன்) வினவுவது அறியான் வினா. 'குற்றியோ மகனோ' என்று (ஒன்றிலும் துணிவுபெறாமல்) வினவுவது ஐய வினா. 'பொன்னுளவோ மணியுளவோ' என்று (கொள்வதற்காக) வினவுவது கொளல்வினா. 'சாத்தற்கு ஆடையில்லையோ' என்று (ஆடை கொடுப்பதற்காக)

வினவுவது கொடை வினா. 'சாத்தா உண்டாயோ' என்று (உண் என ஏவுதற்கு) வினவுவது ஏவல் வினா.

வஞ்சிக்கு வழியாது எனில் 'இது' என்று (சுட்டிக் காட்டி) உரைப்பது சுட்டு என்னும் விடை, சாத்தா இது செய்வாயோ என்றவழிச் 'செய்யேன்' என்று (மறுத்து) உரைப்பது மறை என்னும் விடை. 'செய் வேன்' என்று (உடன்பட்டு) உரைப்பது நேர் என்னும் விடை. 'நீயே செய்' என்று (ஏவலாக) உரைப்பது ஏவல் என்னும் விடை. 'செய்வேனு' என்று (வினா வாக) உரைப்பது வினா எதிர்வினுதல் என்னும் விடை. 'உடம்பு நொந்தது' என்று (தனக்கு உற்றதனை) உரைப்பது உற்றதுரைத்தல் என்னும் விடை. 'உடம்பு நோம்' என்று (தனக்கு நேரப்போவதனை) உரைப்பது உறுவது கூறல் என்னும் விடை. 'மற்றையது செய் வேன்' என்று (இனங்குறித்து) உரைப்பது இனமொழி என்னும் விடை.

182. பலபொருள் ஒரு சொல்லை எங்ஙனம் கூறல் வேண்டும் ?

ஒரு சொல் ஒரு பொருளைக் குறிப்பது பெரும் பான்மை வழக்காகும். சிறுபான்மை ஒருசொல் ஒன்றற்கு மேற்பட்ட பல பொருளைத் தருவது உண்டு. அங்ஙனம் பலபொருளை ஒரு சொல் தருமாறுல் அது பல பொருள் ஒருசொல் எனப்படும்.

அப் பலபொருள் ஒருசொல்லும் வினை சார்பு இனம் இடம் என்னும் நான்கினுல் குறிப்பிட்ட ஒரு பொருளை மட்டும் விளக்கி நிற்கும். இந்நான்கினுலும் குறிப்பிட்ட பொருள் இன்னதென்று விளங்காமல் போகுமாயின் அச்சொல்லுக்கு முன்னே பின்னே சிறப்புச் சொல் கொடுத்துக் கூறவேண்டும்.

விதி : வினைசார்பு இனம் இடம் மேவி விளங்காப்
பலபொரு ளொருசொல் பணிப்பர் சிறப்பெடுத்தே.

மா என்பது மாமரம், வண்டு, விலங்கு, திருமகள், மாமைநிறம், கருமை, பெருமை எனப் பல பொருள் தரும் பல பொருள் ஒரு சொல். 'மா பூத்தது, மா காய்த்தது' என்றவழிப் பூத்தது காய்த்தது என்ற வினைகளால் மா என்பது மரம் என்னும் பொருளை விளக்கியது. 'மா வீழ்நொச்சி மணிக்குரல் ஊழ்த்து' என்றவழி நொச்சிக்குரல் என்ற சார்பால் மா என்பது வண்டு என்னும் பொருளை விளக்கியது. 'மாவும் மருதும் ஓங்கின' என்றவழி மருது என்னும் இனத்தான் மா என்பது மரம் என்னும் பொருளை விளக்கியது. மாமறுத்த மலர் மார்பு என்றவழி மார்பு என்னும் இடத்தான் மா என்பது திருமகள் என்னும் பொருளை விளக்கியது.

'மாவேறினான்' என்ற வழி ஏறினான் என்ற வினை இருந்தும் ('மாமரமா ? குதிரையா ?' எனக்) குறிப்பிட்ட பொருள் விளங்கவில்லை. இவ்விடத்து, 'மாமரம் ஏறினான்; பாய் மா வேறினான்' எனச் சிறப்புச் சொல்லைப் பின்னோ முன்னோ கொடுத்துக் கூற வேண்டும்.

183. எழுத்தியல் திரியாப் பொருள்திரி புணர் மொழி—விளக்குக.

இரண்டு முதலிய சொற்கள்கூடி உண்டாகும் தொடர், புணர்மொழி எனப்படும். இப் புணர்மொழி ஒரே வகையாகப் பிரிக்கப்பட்டுக் குறிப்பிட்ட ஒரு

பொருளையே தரும்போது பொருள்திரியாப் புணர் மொழி எனப்படும். இனி இப்புணர்மொழி வெவ்வேறு வகையாகப் பிரிக்கப்பட்டுக் குறிப்பிட்ட ஒன்றற்குமேல் பல பொருளைத் தருமாயின் பொருள் திரி புணர்மொழி எனப்படும். இப்பொருள் திரி புணர்மொழி பொருளில் திரியுமாயினும் எழுத்தளவில் திரியாது நிற்றலால் எழுத்தியல் திரியாப் பொருள்திரி புணர்மொழி எனவும் கூறப்படும்.

செம்பு, ஒன்பது, தொடி என்ற மூன்று சொற்கள் கூடிச் செம்பொன்பதின்றொடி என்ற தொடர்—புணர் மொழி—உண்டாகிறது. இப் புணர்மொழி செம்பு+ ஒன்பது+இன்+தொடி எனப் பிரிக்கப்பட்டுச் 'செம்பு என்னும் உலோகம் ஒன்பது பலம் உளது' என்ற ஒரு பொருளைத் தருகிறது. மற்றும் அப்புணர்மொழி செம்மை + பொன் + பத்து + இன் + தொடி எனப் பிரிக்கப்பட்டுச் 'செழுமையான பொன் என்னும் உலோகம் பத்துப் பலம் உளது' என்ற மற்றொரு பொருளையும் தருகிறது. இங்ஙனம் செம்பொன் பதின்றொடி என்னும் புணர்மொழி எழுத்துருவத்தில் திரியாமல் பொருளில் திரிந்தமையால் 'எழுத்தியல் திரியாப் பொருள்திரி புணர்மொழி' எனப்பட்டது.

நாகன்றேவன்போத்து என்பது நாகன்+தேவன்+ போத்து எனவும், நாகு+அன்றே+வன்மை+போத்து எனவும் பிரிக்கப்படும். தாமரைக்கணியார் என்பது தாமரை+கணியார் (தாமரைப் பூவை ஒத்த கண்ணை உடையார்) எனவும், தா+மரை+கணியார் (தாவுகின்ற மான்போன்ற கண்ணை உடையார்) எனவும், தாம்+ அரைக்கு+அணியார் (தாம் இடிப்பில் அணியமாட் டார்) எனவும் பிரிக்கப்படும். குன்றேறுமா என்பது

குன்று+ஏறு+ஆமா எனவும், குன்று+ஏரு+மா எனவும் பிரிக்கப்படும். இங்ஙனம் பிரிக்கப்பட்டுப் பொருள்களில் திரிதலின் நாகன்றேவன் போத்து என்றற் ரொடக்கத்தனவும் எழுத்தியல் திரியாப் பொருள் திரி புணர்மொழிகளாம்.

184. மரபு வழுவமைதிகளைத் திரட்டுக.

மரபுவழுவமைதி

*1.* ஒரு பொருள்மேல் பலபெயர்வரின் இறுதியில் ஒரு வினை கொடுக்காமல், அவ்வினையைச் சொற்றொறும் கொடுத்தல். 2. திணை நிலம் சாதி குடி உடைமை குணம் தொழில் கல்வி முதலிய காரணங்களினால் உண்டாகும் சிறப்புப்பெயருக்கு முன்னால் இயற்பெயர் வருதல். 3. வினை நிகழ்ச்சி உளதாகியவழிச் செய்யுட்கண் படர்க்கை முப்பெயருக்கு முன்னே சுட்டுப்பெயர் வருவது. 4. ஒரு சொல்லே அசைநிலைக்கு இருமுறையும், பொருள்நிலைக்கு மும்முறையும், இசைநிறைக்கு நான்முறையும் அடுக்கி வருதல். 5. ஒரு பொருட் பன்மொழி செவிக்குச் சொல்லின்பம் தருதல் என்ற சிறப்புடன் வருமாயின் ஏற்றுக்கொள்ளல். 6. செயப்படு பொருளைச் செய்ததுபோல் (கருத்தாவைப் போல்) வினைமுதல் வினை ஏற்றிக் கூறுவது. 7. இனமில்லாதவற்றை அடைகொடுத்துக் கூறுதல். 8. அடை சினை முதல் என முறையே வாராமல் ஈரடை முதல் அடைதல்; ஈரடை சினையொடு செறிதல்; பிறவாறு மயங்கல். 9. இயற்கைப் பொருளை இற்று என்னும் வினைக் குறிப்புச் சொல்லால் கூறுதல். 10. காரணமின்றி ஆக்கச் சொல் பெறுதல்; ஆக்கமின்றிக் காரணம் அடுத்தல்; இருமையும் இன்றி நடத்தல். 11. சொற்கள் வெளிப்படையாகப் பொருள் உணர்த்தாமல் குறிப்பால்

பொருளை உணர்த்துதல். 12. கேட்குந போலவும் கிளக்குந போலவும் இயங்குந போலவும் இயற்றுந போலவும் அஃறிணை மருங்கினும் அறையப்படுதல். 13. உருவகத்திலும் உவமையிலும் (இருதிணையும்) சினையும் முதலும் பிறழ்ந்து வருதல்.

185. அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி, ஒருபொருட்பன்மொழி—இவற்றை விளக்குக.

### அடுக்குத்தொடர்

ஒரு சொல் அசைநிலைக்கண் இருமுறை அடுக்கி வரும்; விரைவு வெகுளி உவகை அச்சம் துன்பம் முதலிய பொருள்நிலைககண் இருமுறையேனும் மும்முறையேனும் அடுக்கிவரும்; இசைநிறைக்கண் இருமுறையேனும் மும்முறையேனும் நான்முறையேனும் அடுக்கிவரும். இங்ஙனம் சொற்கள் அடுக்கி வருவது அடுக்குத்தொடர் எனப்படும்.

(எ–டு) 1. ஒக்கும் ஒக்கும் — அசைநிலை.

2. உண்டேன் உண்டேன்; போபோபோ — விரைவு
எய்எய்; எறிஎறிஎறி — வெகுளி
வருகவருக; வாவாவா — உவகை
பாம்புபாம்பு; தீத்தீத்தீ — அச்சம்
உய்யேன்உய்யேன்; ஆஆஆ — துன்பம்
(பொருள் நிலை)

3. ஏயே அம்பல் மொழிந்தனள் யாயே.
நல்குமே நல்குமே நல்குமே நாமகள்.
பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ.
(இசை நிறை)

விதி: அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.

## இரட்டைக்கிளவி

ஒரு சொல் இரட்டித்து நின்று ஒரு பொருள் தருவதாயும், அவ்விரட்டிப்பினின்றும் வலிந்து பிரித்தால் பொருள் தராததாயும் வருமாயின் அது இரட்டைக்கிளவி எனப்படும்.

(எ-டு)

சலசல மும்மதம் பொழிய. குறுகுறு நடந்து.
கலகல கூர்ந்துணை யல்லால். துடிதுடித்துத் துள்ளிவரும்.

## ஒருபொருட்பன்மொழி

ஒரே பொருளைத் தருகின்ற இரண்டு வெவ்வேறு சொற்கள் சொல்லின்பம் தரும்பொருட்டுத் தொடர்ந்து வருவது ஒருபொருட்பன்மொழி எனப்படும்.

(எ-டு) நாகிளங் கமுகு. மீமிசை ஞாயிறு.
புனிற்றிளங் கன்று. உயர்ந்தோங்கு மலை.

186. 'இரட்டைக்கிளவி யிரட்டிற் பிரிந்திசையா' பொருள் கூறி மூன்று உதாரணங்கள் தருக. (1967)

'இரட்டைக்கிளவி யிரட்டிற் பிரிந்திசையா' என்பது நூற்பா. இதன் பொருள்: இரட்டைச் சொற்கள் அவ்விரட்டிப்பிற் பிரிந்து தனித்து ஒலிக்கமாட்டா. அஃதாவது இரட்டைக்கிளவி கூடிநின்று ஒலிக்கும் போதுதான் பொருள் தரும்; வலிந்து பிரித்துக்கூறின் பொருள் தாரா.

(எ-டு) விடை 185-னுள் காண்க.

187. அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி— இவைகளுக்குள்ள வேறுபாடு என்ன ?

| அடுக்குத்தொடர் | இரட்டைக்கிளவி |
| --- | --- |
| 1. அடுக்குத்தொடரில் உள்ள சொல் இரண்டு, மூன்று, நான்குமுறை அடுக்கி வரும் | 1. இரட்டைக்கிளவியில் உள்ள சொல் இரண்டு முறைக்குமேல் வாராது. |
| 2. தனித்து நின்றும் பொருள் தரும். | 2. இரட்டையில் பிரிந்தால் பொருள் தாராது. |
| 3. அடுக்கிவரினும் விலங்கிரட்டையும் மக்களிரட்டையும் போலத் தனித் தனியாக நிற்கும். | 3. பூவிரட்டையும் இலையிரட்டையும் போல இணைந்து இரட்டையாகவே நிற்கும். |
| 4. அசைநிலையாகவும் பொருள் நிலையாகவும் வரும். | 4. பொருள் நிலையாக மட்டும் வரும். |

188. எவ்வெவ்விடத்து உம்மை கொடுத்துக் கூறல் வேண்டும் ? உதாரணமும் தருக.

இத்துணைத்தென்று வரையறுத்து அறியப்பட்ட பொருளுக்கும், உலகில் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாப் பொருள்களுக்கும் வினையொடுபடுத்துக் கூறுங்கால் முற்றும்மை கொடுத்துக் கூறவேண்டும். மற்றும் உலகில் நிலையில்லாப் பொருளுக்கு எச்ச உம்மை கொடுத்துக் கூறவேண்டும்.

விதி : இணைத்தென் றறிபொருள் உலகி னிலாப்பொருண்
வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டும்.

(எ-டு) 1. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்; நால் வேதமும் உணர்ந்தார்; ஐம்பொறியும் அடக்கினர். ஈண்டுத் தமிழ்நாட்டு வேந்தர் மூவர் என்பதும், வேதம் நான்கு என்பதும், பொறிகள் ஐந்து என்பதும் இத்துணை என்று வரையறுத்து அறியப்பட்ட பொருளாகலானும், 'வந்தார்' முதலிய வினையொடு படுத்துக் கூறப்படுதலானும் உம்மை கொடுக்கப்பட்டது.

2. பவளக்கோட்டு நீலயானை என்றும் இல்லை; முயற்கோடு ஆகாயப்பூ எவ்விடத்தும் இல்லை. ஈண்டுப் பவளம் போன்ற சிவந்த கோடும் நீல நிறமும் உள்ள யானை உலகில் இல்லாத பொருளாகும். அதுபோல முயற்கோடு ஆகாயப்பூ என்பனவும் உலகில் இல்லாத பொருள்களாம். இவற்றை 'இல்லை' என்னும் குறிப்பு வினைமுற்றுடன் படுத்துக் கூறலின் 'என்றும்' 'எவ்விடத்தும்' என உம்மை கொடுக்கப்பட்டது.

3. செல்வமும் நில்லாது; உடம்பும் நிலைக்காது. ஈண்டுச் செல்வம் உடம்பு என்ற நிலையில்லாப் பொருள்கள் நில்லாது நிலைக்காது என வினையொடுபடுத்துக் கூறப்படுதலின் உம்மை கொடுக்கப்பட்டது.

189. பொருள்கோள் எட்டனையும் எழுதி எவையேனும் நான்கனை விளக்குக.

யாற்றுநீர், மொழிமாற்று, நிரனிறை, விற்பூட்டு, தாப்பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு, அடிமறிமாற்று எனப் பொருள்கோள் எட்டுவகைப்படும்.

நிரனிறை: பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறுவேறு நிரலாக நிறுத்திவைத்து முறையாகவேனும் எதிராகவேனும் நிரலுக்கொரு சொல்லாக

எடுத்து இணைத்துக்கொள்ளும் பொருள்கோள் நிரனிறை எனப்படும். (நிரல் — வரிசை; நிறை — நிறுத்தல். அஃதாவது சொற்களை வரிசை வரிசையாக நிறுத்தல்.)

இது முறை நிரனிறை எதிர் நிரனிறை மயக்க நிரனிறை எனவும், பெயர் நிரனிறை வினை நிரனிறை எனவும், எழுத்து நிரனிறை எனவும், தொகுப்பு நிரனிறை எனவும், ஈரடுக்கு நிரனிறை பலவடுக்கு நிரனிறை எனவும் பல வகைப்படும்.

(உ-ம்) 1. 'கொடி குவளைகொட்டை நுசுப்புண்கண் மேனி' ஈண்டுக் கொடி குவளை கொட்டை என்ற வரிசையும் நுசுப்பு உண்கண் மேனி என்ற வரிசையும் நிறுத்தப்பட்டுள்ளன. நிரலுக்கொரு சொல்லாக எடுத்துக் கொடிபோல் நுசுப்பு எனவும், குவளைபோல் உண்கண் எனவும், கொட்டைபோல் மேனி எனவும் இணைத்துக்கொள்ளப்படுகின்றன. இது பெயர் நிரனிறை; முறை நிரனிறை; ஈரடுக்கு நிரனிறை.

2. 'மாசு போகவும் காய்பசி நீங்கவும் கடிபுனல் மூழ்கி அடிசில் கைதொட்டு' ஈண்டு மாசுபோகவும், காய் பசி நீங்கவும் என்ற நிரலும் புனல் மூழ்கி அடிசில் கை தொட்டு என்ற நிரலும் நிறுத்தப்பட்டுள்ளன. இது வினை, முறை, ஈரடுக்கு நிரனிறை.

3. 'காம விதி கண்முகம்'. ஈண்டுக் காம, விதி, கண்முகம் என்ற மூன்று நிரல்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றன. இவற்றுள் முதல் இரண்டும் எழுத்து நிரல்கள். இவற்றை கா-வி-கண் என்றும் ம-தி-முகம் என்றும் இணைக்கவேண்டும். இது பெயர் நிரனிறை; எழுத்து நிரனிறை; பலவடுக்கு நிரனிறை.

4. 'களிறும் கந்தும் போல நளி கடல் கூம்பும் கலனும் தோன்றும்' ஈண்டுக் களிறும் கந்தும் எனவும் கூம்பும் கலனும் எனவும் இரண்டு நிரல்கள் நிறுத்தப் பட்டுள்ளன. இவற்றைக் களிறுபோலக் கலன் என்றும் கந்து போலக் கூம்பு என்றும் எதிராகச் சேர்க்க வேண்டும். ஆகவே, இது எதிர்நிரனிறை; பெயர் நிரனிறை; ஈரடுக்கு நிரனிறை.

பூட்டுவில்: ஒரு வில்லின் கீழ்முனையில் பூட்டிய நாணை மேல்முனைக்கண் இழுத்து முடிவதுபோல, ஒரு செய்யுளின் இறுதிக்கண் நின்ற சொல்லை முதற்கண் நின்ற சொல்லுடன் பொருள் பொருந்த இணைப்பது பூட்டுவில் எனப்படும்.

(உ-ம்) திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்துபடின் பெரிதாம்ஏதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.

ஈண்டு இச்செய்யுளின் இறுதிக்கண் நின்ற 'கதவு' என்னும் சொல் முதற்கண்நின்ற 'திறந்திடு மின்' என்னும் சொல்லுடன் இணைக்கப்படுவதால் பூட்டுவில் பொருள் கோள் ஆயிற்று.

தாப்பிசை: நடுநின்ற ஊஞ்சல் முன்னும் பின்னும் செல்லுமாறு போலச் செய்யுளின் நடுநின்ற சொல் முன்னும் பின்னும் சென்று இணைந்து பொருள் தருவது தாப்பிசை எனப்படும். (தாம்பு—கயிறு; ஈண்டுக் கயிறுகிய அல்லது கயிற்றால் ஆகிய ஊஞ் சலைக் குறிக்கும். இசை—பொருத்தம். தாம்பு+இசை= தாப்பிசை.)

(உ-ம்) உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன் உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.

ஈண்டு நடுநின்ற 'ஊன்' என்னும் சொல் முன்னே சென்று 'ஊன் உண்ணாமை உள்ளது உயிர்நிலை' எனவும் பின்னே சென்று 'ஊன் உண்ண அண்ணாத் தல் செய்யாது அளறு' எனவும் இணைந்து பொருள் தருவதால் தாப்பிசை ஆயிற்று.

கொண்டு கூட்டு: செய்யுளின் பல்வேறு இடங் களில் கோத்துக்கிடந்த சொற்களை எடுத்துக்கொண்டு வந்து பொருளுக்கு ஏற்றவிடத்தில் கூட்டுவது கொண்டு கூட்டு எனப்படும்.

(உ—ம்)

தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்.

ஈண்டு அஞ்சனத்தன்ன பைங்கூந்தல் மாமேனி எனவும் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட முட்டை எனவும் முட்டையுடைத்தன்ன பசலை எனவும் சொற் களைக் கொண்டு கூட்டவேண்டும்.

190. 'களிறும் கந்தும் போல நளிகடற் கூம்பும் கலனும் தோன்றும் தோன்றல் மறந்தோர் துறை கெழு நாட்டே.'— ஈண்டமைந்துள்ள பொருள் கோள் யாது? விளக்குக. (1967)

விடை: 189-னுள் காண்க.

191. 'உண்ணாமை யுள்ள துயிர் நிலை யூனுண்ண அண்ணாத்தல் செய்யா தளறு'— இக்குறட்பாவில் அமைந்துள்ள பொருள்கோள் யாது? விளக்குக. (1965)

'உண்ணுமை உள்ளது'. என்ற குறட்பாவில் அமைந்துள்ள பொருள் கோள் தாப்பிசைப் பொருள் கோளாகும்.

**விளக்கம் :** விடை 189–னுள் காண்க.

192. மொழிமாற்று, கொண்டுகூட்டு என்னும் பொருள் கோள் எங்ஙனம் வரும்? இரண்டற்கும் வேறுபாடு என்ன? (1960)

**மொழிமாற்று :** இரண்டு மொழியும் இரண்டு பயனிலையும் ஆக வரக்கடவனவற்றை முறையே கூருது. ஏலாத பயனிலைகளுக்கு இயையாத மொழிகளைத் தனித் தனிக் கூட்டி ஓரடியுள் வழங்குவது மொழிமாற்று எனப்படும்.

**விதி :** ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை
மாற்றி ஓரடியுள் வழங்கல் மொழிமாற்றே.

**விளக்கம் :** ஒன்றைக் கொடுத்து மற்றொன்றைப் பெற்றுக் கொள்ளும் பண்டமாற்றைப்போல, ஒரு பயனிலைக்கு ஏலாத மொழியை ஏற்ற பயனிலைக்குக் கொடுத்து அதனிடமிருந்த மொழியை முதற் பயனிலைக்குக் கொள்ளுதலின் மொழிமாற்று எனப்பட்டது. 'சுரையாழ அம்மி மிதப்ப' என்பதில் சுரை என்னும் மொழியை மிதப்ப என்னும் பயனிலைக்குக் கொடுத்து அம்மி என்னும் மொழியை ஆழ என்னும் பயனிலைக்குக் கொள்வது மொழிமாற்ருகும்.

**கொண்டு கூட்டு :** விடை 189–னுள் காண்க.

மொழிமாற்று ஓரடியில் வரும் என்றும் கொண்டு கூட்டு ஈரடியுள்ளும் பல வடியுள்ளும் வரும் என்றும் வேறுபாடு கூறுவர் மயிலைநாதர், சடகோபராமானுசாச்சாரியார் ஆகியோர்.

'மொழி மாற்று ஒரு மொழியைக் கொடுத்து மற்றொரு மொழியைப் பெறுதலின் பண்டமாற்றைப் போன்றது: இது ஒரு அடியில்தான் வரும்' என்றும், 'கொண்டுகூட்டு ஒருவிடத்து நின்ற சொல்லைக் கொண்வந்து பிறிதோரிடத்துக் கூட்டுவது. இது ஒரு அடியுள்ளும் பலவடியுள்ளும் வரும்' என்றும் வேறுபாடு கூறுவர் சங்கரநமச்சிவாயர் சிவஞானமுனிவர் ஆகியோர்.

193. பொருள்கோளைச் சொல்லதிகாரத்துள் கூறியது பொருந்துமா? ஆய்க.

பொருள்கோள் செய்யுட்கண் வைத்துக் காண்பதாகலின் இதனைச் செய்யுளியலில் (அல்லது யாப்பதிகாரத்தில்) கூறவேண்டும். ஆனால் நன்னூலார் இதனைச் சொல்லதிகாரத்தில் கூறியுள்ளார்.

சொல்லதிகாரத்தில் பொதுவியலில் எடுத்துக் கொண்ட இலக்கணம் தொடர்மொழி இலக்கணம் ஆகலானும், பொருள்கோள் என்பதும் தொடர்மொழி இலக்கணமாகலானும், சொற்கள் தொடர்வதால் செய்யுளுக்குத் தொடர்பு என்ற காரணக்குறி இருத்தலானும், செய்யுட்குரிய பொருள்கோளைச் சொல்லதிகாரத்தில் கூறியது பொருத்தமுடையதாகும்.

194. இடைச்சொல்லின் இலக்கணத்தையும் உரிச்சொல்லின் இலக்கணத்தையும் எழுதி இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டையும் தருக.

## இடைச்சொல்லின் இலக்கணம்

பெயரும் ஆகாது வினையும் ஆகாது அவற்றிற்கு இடைப்பட்டதாய், அப்பெயர் வினைகளின் முன்பின்

என்ற ஒருவிடத்து ஒன்ருகவேனும் பலவாகவேனும் வந்து அப்பெயர் வினைகட்கு அகத்துறுப்பாகவேனும் புறத்துறுப்பாகவேனும் ஒன்றுபட்டு நடப்பது இடைச் சொல்லாம். அது ஐ முதலிய வேற்றுமை உருபுகளும், இடைநிலை விகுதி என்ற வினை உருபுகளும், அன் ஆன் முதலிய சாரியைகளும், போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், தத்தமக்குரிய பொருளை உணர்த்தி வருவனவும், செய்யுளின் இசை நிறைத்து வருவன வும், அசைநிலையாக வருவனவும், குறிப்பாய் வருவன வும் என எட்டு வகைப்படும்.

விதி : வேற்றுமை வினைசா ரியைஒப் புருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்புஎன்எண் பகுதியில் தனித்தியல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஓரிடத்து
ஒன்றும் பலவும்வந்து ஒன்றுவது இடைச்சொல்.

## உரிச்சொல்லின் இலக்கணம்

இசை குறிப்புப் பண்பு என்னும் பலவகைப்பட்ட பண்பையும் பகர்கின்ற பெயராகியும், ஒரு குணத்தை யேனும் பல குணத்தையேனும் உணர்த்துவனவாகி யும், பெயர் வினைகளை விட்டு நீங்காதனவாயும், செய் யுட்கு உரியனவாயும், பொருட்கு உரிமை பூண்டுள்ளன வாயும் வருவன உரிச் சொல்லாம்.

விதி : பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட்கு உரியன உரிச்சொல்.

## வேறுபாடு

| இடைச்சொல் | உரிச்சொல் |
| --- | --- |
| 1. செய்யுட்கும் உலக வழக்கிற்கும் உரித்தாய் வரும். | 1. செய்யுட்கே உரித்தாய் வரும். |
| 2. பெயருக்கும் வினைக்கும் இடைப்பட்டு வருமே யன்றித் தனித்து இயங்க முடியாது. | 2. பெயர் வினைகளைச் சார்ந்தும் வரும்; தனித்தும் வரும். |
| 3. பெயர் வினைகளைச் சார்ந்து பொருள் தருமே யன்றித் தமக்கெனப் பொருள் இல்லாதது. | 3. தமக்கெனத் தனிப் பொருள் உடைத்தாய் வரும். |
| 4. ஒருசில பொருள் உணர்த்தாமல் அசை நிலையாகவும் வரும். | 4. பொருள் குறித்து வருமேயன்றி அசை நிலையாக வருவதில்லை. |

195. இடைச்சொல்லெனவும் உரிச்சொல்லெனவும் பெயர்வரக் காரணம் என்ன ?

1. "பிறிதின் இடத்தைச் சார்ந்து நடத்தலான் இடைச் சொல்" என மயிலைநாதர் பெயர்க்காரணம் கூறினர். (இடை=இடம்.)

"முதனூலின் வழியாக நடக்கும் நூலை முதனூல் எனக் கூறுது வழிநூல் என்றாற்போலத் தனித்து நடத்தல் இன்றிப் பெயர்வினைகளின் இடமாக நடக்கும் சொல்லும் இடைச்சொல் எனப்படும்" எனச் சங்கர நமச்சிவாயர் பெயர்க்காரணம் கூறினர். இதனைச்

சிவஞானமுனிவர் இரண்டாம் தரமான காரணமாக ஏற்கிறார்.

"நால்வகைத் திணைக்கண் நடுநின்ற பாலைத்திணை நடுவுநிலைத் திணை எனப் பெயர்பெற்றது போலப் பெயர்வினைக்கண் இடைநின்ற சொல், பெயருமாகாது வினையுமாகாது அவற்றின் வேறுமாகாது இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனப்பட்டது" எனச் சிவஞானமுனிவர் பெயர்க்காரணம் கூறினார் இதனைச் சிவஞானமுனிவர் முதல்தரமான காரணமாக ஏற்கிறார்.

மேற்காட்டிய இரண்டு காரணங்களையும் ஆறுமுக நாவலரும் சடகோபராமானுசாச்சாரியாரும் காட்டுகின்றனர்.

2. "செய்யுட்கே நீங்காதுவரும் கிழமையுடையன உரிச்சொல்" என மயிலைநாதர் பெயர்க்காரணம் கூறினார்.

"செய்யுட்கு உரியனவாயும் பொருட்கு உரிமை பூண்டும் வருவன உரிச்சொல்" எனச் சங்கர நமச்சிவாயரும் சிவஞானமுனிவரும் ஆறுமுகநாவலரும் சடகோபராமானுசாச்சாரியாரும் பெயர்க்காரணம் கூறினார்கள்.

196. இடைச்சொல்லின் பொருள்களைத் தருக.

## இடைச்சொல்லின் பொருள்

| | | |
|---|---|---|
| 1. தெரிநிலை | 6. சிறப்பு | 11. ஒழியிசை |
| 2. தேற்றம் | 7. எதிர்மறை | 12. பிரிப்பு |
| 3. ஐயம் | 8. எச்சம் | 13. கழிவு |
| 4. முற்று | 9. வினா | 14. ஆக்கம் |
| 5. எண் | 10. விழைவு | |

இன்னன என்ற மிகையால் ஆங்காங்கு (இடப்பன்மை), வெருவுதல், இரக்கம், காலம், இடம், சொலல், ஒழிதல், அயல், சிறப்பு (உயர்வு), ஓசை, குறிப்பு, சுட்டு, வினா, அதிசயம், விகற்பம், பயனின்மை, இகழ்ச்சி என்ற பொருள்களும் கொள்ளப்படும்.

**197.** ஏகார ஓகார இடைச்சொற்கள் தரும் பொருள்களை எழுதி இரண்டிரண்டு எடுத்துக் காட்டும் தருக.

ஏகார இடைச்சொல்

ஏகார இடைச்சொல் பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசைநிறை என ஆறு பொருளைத் தரும்.

விதி : பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை என ஆறு ஏகாரம்மே.

(எ-டு) 'இவருள் அவனே கொண்டான்' ஒரு குழுவினின்றும் ஒருவனைப் பிரித்துக் காட்டுதலின் அவனே என்பதில் உள்ள ஏகாரம் பிரிநிலை. 'நிலனே நீரே தீயே வளியே வானமே எனப் பூதம் ஐந்து.' ஈண்டு நிலனே என்றற் றொடக்கத்து ஏகாரங்கள், நிலனும் நீரும் என எண்ணணி நிற்றலின் எண்.

ஓகார இடைச்சொல்

ஓகார இடைச்சொல் ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசைநிலை, பிரிப்பு என எட்டுப் பொருளைத் தரும்.

விதி : ஒழிசை வினாச்சிறப்பு எதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப்பு எனஎட்டு ஓவே.

(எ-டு) 'குற்றியோ மகனோ தோன்றுநின்ற உருவு' குற்றியோ மகனோ என வினவுதலின் ஈண்டு நின்ற ஓகாரம் வினா. 'அவனோ கொண்டான்' அவன் கொண்டிலன் என எதிர்மறைப் பொருள் தருதலின் ஈண்டு நின்ற ஓகாரம் எதிர்மறை.

198. உம்மை இடைச்சொல், மன்னை இடைச்சொல் எவ்வெப் பொருள்களைக் கொடுக்கும்? இரண்டிரண்டு காட்டும் தருக.

உம்மை இடைச்சொல்

உம்மை இடைச்சொல் எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, அளவை (எண்), தெரிநிலை, ஆக்கம் என்ற எட்டுப் பொருளைக் கொடுக்கும்.

விதி : எதிர்மறை சிறப்புஐயம் எச்சம்முற்று அளவை
தெரிநிலை ஆக்கமோடு உம்மை எட்டே.

(எ-டு) 'கொற்றன் வருதற்கும் உரியன்'—வாராமைக்கும் உரியன் என்ற எதிர்மறைப் பொருள் தருதலின் ஈண்டு நின்ற உம்மை எதிர்மறை. 'பத்தாயினும் எட்டாயினும் கொடு'—ஐயப்பொருள் தருதலின் ஈண்டு நின்ற உம்மை ஐயம்.

மன்னை இடைச்சொல்

மன் என்னும் இடைச்சொல் அசைநிலை, ஒழியிசை, ஆக்கம், கழிவு, மிகுதி, நிலைபேறு என்னும் ஆறு பொருளைக் கொடுக்கும்.

விதி : மன்னே • அசைநிலை ஒழியிசை ஆக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும்.

(எ-டு) 'சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே'— அவன் இறந்தானாகலின் எமக்கீதல் கழிந்தது எனக் கழிவுப் பொருள் தருதலின் ஈண்டு நின்ற மன்னை இடைச்சொல் கழிவு. 'எந்தை எமக்கு அருளும் மன்'; 'விதவாதன மன்னே'—மிகுதியும் (பெரும்பாலும்) என்ற பொருள் தருதலின் ஈண்டு நின்ற மன் மிகுதி.

199. உம்மை இடைச்சொல் எவ்வெப் பொருளைத் தாரா நிற்கும்? (1962)

விடை 198-னுள் காண்க.

200. உம்மை இடைச்சொல் உயர்வு சிறப்பும் இழிவு சிறப்பும் ஆகிய பொருள்களில் வந்ததற்கு எடுத்துக் காட்டுத் தந்து, பின்னர் அப்பொருள் பற்றி எழுந்த தடைவிடையான கருத்துக்களையும் எழுதுக. (1963)

சிறப்பு என்பது உயர்வு சிறப்பு, இழிவு சிறப்பு என இருவகைப்படும். உயர்வு சிறப்பு என்பது ஒரு பொருளின் உயர்வை விசேடித்தலாம். இழிவு சிறப்பு என்பது ஒரு பொருளின் இழிவை விசேடித்தலாம். இப்பொருளை ஓகார இடைச்சொல்லும் உம்மை இடைச் சொல்லும் தரும். இவற்றுள் உம்மை இடைச்சொல் லிற்கு உதாரணம் காண்போம்.

'குறவரும் மருளும் குன்று'; 'இவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது'; ஈண்டுவந்த உம்மைகள் உயர்வு சிறப்பு. 'குறவரும் மருளும் குன்று' என்பதில் எடுத் துக்கொள்ளப்பட்ட பொருள் குன்று. சாதாரண மக்கள் குன்றைக் கண்டு மருண்டார்கள் என்றால் அது குன்றுக்குச் சிறப்பாகாது. பல்காலும் குன்றுகளில்

திரியும் இயல்புடைய குறவர்களும் கண்டு மருண்டார் கள் என்றால் அது குன்றுக்குச் சிறப்பாகும். இங்ஙனம் 'குறவரும் மருளும்' என்ற உம்மை அக்குன்றத்தின் உயர்வை விசேடித்தலால் உயர்வு சிறப்பாயிற்று. 'இவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது' என்பதில் எடுத்துக்கொள்ளப்பட்ட பொருள் ஊர். இவ்வூரில் உள்ள மக்கள் புலால் தின்னமாட்டார்கள் என்றால் அது அவ்வூருக்குச் சிறப்பாகாது. புலால் தின்னும் இயல்புடைய பூனையும் இவ்வூரில் புலால் தின்னாது என்றால் அது அவ்வூருக்குச் சிறப்பாகும். இங்ஙனம் 'இவ்வூர்ப் பூசையும்' என்ற உம்மை அவ்வூரின் உயர்வை விசேடித்ததால் உயர்வு சிறப்பாயிற்று.

'பார்ப்பானும் கள்ளுண்டான்'; 'புலயனும் விரும்பாப் புன்புலால் யாக்கை'. ஈண்டு வந்த உம்மை கள் இழிவு சிறப்பு, 'பார்ப்பானும் கள்ளுண்டான்' என்பதில் எடுத்துக்கொண்ட பொருள் பார்ப்பான். பார்ப்பான் கள்ளுண்டான் என்று உம்மை கொடாமல் கூறினால் அது பார்ப்பானது இழிவைக் குறிக்கும்; பார்ப்பானும் என்று உம்மை கொடுத்தால் அவ்வும்மை இழிவை மேலும் விசேடிக்கிறது. எனவே இழிவு சிறப் பாயிற்று. புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை என்பதில் எடுத்துக்கொண்ட பொருள் யாக்கை. யாக்கை புலால் மயமானது என்றால் அது யாக்கையது இழிவைக் குறிக்கும். ஆடுமாடுகளின் புலாலை உண் ணும் புலையனும் யாக்கையை உண்ணமாட்டான் என்றால் அவ்வும்மை இழிவை மேலும் விசேடிக்கிறது. எனவே இழிவு சிறப்பாயிற்று.

மேற்காட்டிய காட்டுக்களினால், 'உயர்வு சிறப்பு என்பது ஒரு பொருளின் உயர்வைச் சிறப்பிப்பது

(விசேடிப்பது) என்றும், 'இழிவு சிறப்பு என்பது ஒரு பொருளினது இழிவைச் சிறப்பிப்பது' என்றும் ஏற்படும். இக்கருத்துச் சங்கர நமச்சிவாயரும் சிவஞான முனிவரும் கொள்வதாகும்.

இனிப் 'பூசையும் புலால் தின்னாது' என்பதனை இழிவு சிறப்பு என்பாரும் உளர். இங்ஙனம் கொள்ளின் 'ஒரு பொருளின் இழிவைச் சிறப்பிப்பது இழிவு சிறப்பு' எனக் கொள்ளாது' இழிந்த பொருளான் ஒன்றின் இழிவைச் சிறப்பிப்பது இழிவு சிறப்பு' என்று ஏற்படும். இவ்வாறு கொள்வது உம்மைக்கு ஒக்குமாயினும் ஓகார இடைச்சொல்லுக்கு ஒத்துவாராதாகலின் இக்கருத்துப் பொருந்தாது.

இனிப் 'பூசையும் புலால் தின்னாது' என்பதில் எடுத்துக் கொள்ளப்படும் பொருள் புலாலாகக் கொள்ளின் உம்மை இழிவு சிறப்பு என்பது பொருந்தும்.

201. தொகைபெற்றும் பெறாதும் வரும் எண்ணிடைச் சொற்கள் யாவை? இரண்டற்கு உதாரணம் தருக. (1964)

பெயர்ச்செவ்வெண்ணும், ஏ என்று எனா உம் என்று என ஒடு என்ற ஏழு இடைச்சொல்லும் எண்ணுப்பொருள் தருவனவாம். (ஏ முதலிய ஏழு இடைச்சொற்களில் யாதொன்றும் வெளிப்படாது தொக்கு நிற்பப் பெயர்கள் மட்டும் அடுக்கி நின்று எண்ணுப் பொருளைத் தருவது பெயர்ச்செவ்வெண் எனப்படும்.)

இவ்வெட்டனுள் 'பெயர்ச்செவ்வெண் ஏ என்று எனா' என்ற நான்கும் தொகை பெற்றே வரும். 'உம்

என்று என ஓடு' என்ற நான்கும் தொகை பெற்றும் பெறாதும் வரும்.

விதி : பெயர்ச்செவ் வெண்ஏ என்றா எனாஎண்
நான்கும் தொகைபெறும்; உம்மை என்று என ஓடு
இந்நான்கு எண்ணும்அஃ தின்றியும் இயலும்.

(உ-ம்) 1. 'சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா பூதனென்றா நால்வரும் வந்தார்' ஈண்டு என்றா என்ற எண்ணிடைச்சொல் நால்வர் என்ற தொகை பெற்று வந்தது.

2. 'சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் நால்வரும் வந்தார்' 'சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார்'; 'நிலனென நீரெனத் தீயெனக் காற்றென வானெனப் பூதம் ஐந்து'; 'நிலனென நீரெனத் தீயெனக் காற்றென வானென ஆகிய உலகம்' ஈண்டு 'உம், என' என்ற எண் இடைச்சொற்கள் தொகை பெற்றும் பெறாதும் வந்தன.

202. 'சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே' — ஈண்டு வந்துள்ள மன் என்னும் இடைச்சொல் எப்பொருளில் வந்தது? விளக்குக. (1966)

அசைநிலை, ஒழியிசை, ஆக்கம், கழிவு, மிகுதி, நிலைபேறு என்னும் ஆறு பொருளைத்தரும் மன் என்னும் இடைச்சொல், சிறிய கட் பெறினே எமக்கீயும் மன்னே என்ற விடத்தில் கழிவு என்னும் பொருளில் வந்தது.

முன்பெல்லாம் அதியமான் கள்ஈந்தான்; இப்போது அவன் இறத்தலின் எமக்கு அவன் கள்ளீதல் கழிந்தது என்னும் பொருள் தருதலின் கழிவுப் பொருள் ஆயிற்று.

203. 'மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது'— ஈண்டு அமைந்துள்ள இடைச்சொல் யாது? அஃது எப்பொருளில் வந்துள்ளது? காரணங் காட்டுக. (1965)

'மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது'— என்ற தொடரில் அமைந்துள்ள இடைச்சொல் மற்று என்பதாகும். ஈண்டு மற்று என்னும் அவ்விடைச் சொல் வினைமாற்றுப் பொருளில் வந்துள்ளது.

காரணம்: 'யாம் இளையமாக இருப்பதால் இப் போது நல் வினைகளை விரைந்தறிய வேண்டியதில்லை; விரையாமல் இருந்து பின்னர் முதியமாயபோது அறிவோம்' என்னும் பொருளை மற்றென்னும் இடைச் சொல் ஈண்டுத் தந்து நிற்கிறது. அஃதாவது விரைந்து அறிவோம் என்னும் வினையை மாற்றி விரை யாது அறிவோம் என்னும் வினைப் பொருளைத் தரு தலால் வினைமாற்றுப் பொருளாயிற்று.

204. 'மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்'— இதன் பொருள்களை ஆராய்க.

'மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்'— இது இடையியலில் உள்ள நூற்பா.

மயிலைநாதர் உரை: மற்றையது என்னும் இடைச் சொல் சுட்டியதனை ஒழிய அதற்கு இனமான பிறி தொன்றினைக் காட்டும். (ஒரு பொத்தகம் கொண்டு வந்த இடத்து அது கருதியது அன்றெனின், 'மற்றை யது கொணா' என்றால் மற்றையது என்பது கொண்டு வந்த பொத்தகத்திற்கு இனமான மற்றொரு பொத்த கத்தைக் குறிக்கும்.)

சடகோபராமானுசாச்சாரியாருக்கும் இதுவே கருத்து.

சங்கரநமச்சிவாயர் உரை: மற்றென்னும் இடைச் சொற் பொருள் மூன்றனுள் மற்றையது என்னும் பொருளவாகிய வினைமாற்றும், பிறிதும் கருதியதற்கின மாகிய வினைமாற்றும் இனமாகிய பிறிதுமாம்; வேறு வினைமாற்றும் வேறு பிறிதும் அல்லவாம். (அஃதாவது வினைமாற்றசைநிலை பிறிதெனும் மற்றே என்ற நூற்பாவில் கூறப்பட்ட இரு சொற்களுக்கு விளக்கம் கூறுதற்கு இச்சூத்திரம் எழுந்ததாகும்; மற்றையது என்னும் இடைச்சொல்லுக்கு இலக்கணம் கூற வரவில்லை என்பதாம்.)

சிவஞானமுனிவர்க்கும் ஆறுமுக நாவலர்க்கும் இதுவே கருத்து.

மயிலைநாதர் உரைக்கு மறுப்பு: (1) மற்றையது என்பது மற்று என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரும் வினைக் குறிப்பும் ஆகும்; தனிப்பட்ட இடைச் சொல்லன்று. (2) மற்றையது என விகுதியோடு கூறினாரேனும் பகுதிப்பட்ட மற்றை என ஐகார வீற்று இடைச்சொல் எனக் கொள்ளலாம் எனில் மன்-மன்னை, கொன்-கொன்னை என நின்றாற்போல மற்று என்பது மற்றை என இறுதி விகாரப்பட்டு நின்றதன்றித் தனிப்பட்ட இடைச் சொல்லன்று. (3) மற்று என்பதற்குரிய பொருளின்றி இதற்கென வேறு பொருளின்று. (4) மற்று என்பதோடு மற்றை என்பதற்கு வேற்றுமை இனத்தையே தருதல் எனப் பொருள் கொள்ளின், மற்று என்பது இனத்தையும் இனவகையையும் தரும் எனப் பொருள்படும்; எல்லாவற்றாலும் இனமாய் உள்ளதே வினைமாற்றும் பிறிது

மாய் வருமன்றி இனமல்லது ஒருவாற்றானும் வாரா மையின் அவ்வாறு கொள்ளல் ஆகாது. எனவே (மயிலைநாதர் கொள்ளும் உரை) மற்றையது என்பது தனி இடைச்சொல் எனக் கொள்வது பொருந்தாது.

இம்மறுப்பைச் சங்கரநமச்சிவாயரும் சிவஞான முனிவரும் கூறுகின்றனர்.

205. முன்னிலை அசைச்சொற்களும் எல்லா விடத்திற்கும் பொதுவான அசைச்சொற்களும் யாவை ?

முன்னிலை அசைச்சொல் (10)

| | | | |
|---|---|---|---|
| 1. மியா | 4. மதி | 7. வாழிய | 10. யாழ |
| 2. இக | 5. அத்தை | 8. மாள | |
| 3. மோ | 6. இத்தை | 9. ஈ | |

விதி : மியாயிக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளஈ யாழமுன் னிலையசை.

பொதுநிலை அசைச்சொற்கள் (20)

| | | | |
|---|---|---|---|
| 1. யா | 6. போ | 11. ஒரும் | 16. ஆம் |
| 2. கா | 7. மாது | 12. போலும் | 17. தாம் |
| 3. பிற | 8. இகும் | 13. இருந்து | 18. தான் |
| 4. பிறக்கு | 9. சின் | 14. இட்டு | 19. கின்று |
| 5. அரோ | 10. குரை | 15. அன்று | 20. நின்று |

விதி : யாகா பிறபிறக்கு அரோபோ மாதிகும்
சின்குரை ஒரும் போலும் இருந்திட்டு
அன்றுஆம் தாம்தான் கின்றுநின்று அசைமொழி.

206. உயிரின் ஐவகைப் பிரிவுகளை நன்னூலார் எவ்வாறு விவரித்துள்ளார் ?

உயிர் ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் என ஐந்து வகைப்படும். புல்லும் மரமும் முதலாயின மெய்யால் உற்றறியும் ஓரறிவுயிர். முரளும் (இப்பியும்) நந்தும் (சங்கும்) முதலாயின ஊற்றுணர்வோடு நாவால் சுவைத்தறியும் ஈரறிவுயிர். சிதலும் (கறையானும்) எறும்பும் முதலாயின ஊறு சுவை யுணர்வுகளோடு மூக்கால் முகர்ந்தறியும் மூவறிவுயிர். தும்பியும் வண்டும் முதலாயின ஊறு சுவை நாற்றவுணர்வுகளோடு கண்ணால் கண்டறியும் நான்கறிவுயிர். வானவர் மக்கள் நரகர் விலங்கு புள் முதலாயின ஊறு சுவை நாற்றம் ஒளி உணர்வுகளோடு செவியான் கேட்டறியும் ஐயறிவுயிர்.

ஈண்டுப் புல்மரம் முரள் நந்து எனக் குறிக்கப் பட்டவை உடம்பும் உயிரும் கூடிய நிலையாக ஒற்றுமை நயம் பற்றிக் கூறப்பட்டிருப்பினும், ஓரறிவுயிர் ஈரறிவுயிர் எனக் குறிக்கப்பட்டவை அவ்வவ்வுடம்பின்கண் நிற்கும் உயிரை மட்டும் பிரித்து நோக்கும் நிலையாக வேற்றுமைநயம் பற்றிக்கொள்ளவேண்டும்—இவ்வாறு நன்னூலார் ஐவகை உயிர்களையும் விவரித்துள்ளார்.

207. தொல்காப்பியனார் மக்களை ஆறறிவுயிர் என்று கூறியிருக்க, நன்னூலார் ஐயறிவுயிர் என்றல் பொருந்துமா? (1962)

'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். 'வானவர் மக்கள் நரகர் விலங்கு புள்-ஆதி செவியறிவோடு ஐயறிவுயிரே' என நன்னூலார் கூறியுள்ளார். இவ்வாறு மக்களை ஆறறிவுயிர் எனத் தொல்காப்பியனார் கூறிருக்க நன்னூலார் ஐயறிவுயிர் என்பது முரணாகத் தோன்றக்கூடும். இங்ஙனம்

நன்னூலார் கூறியதற்கு மயிலைநாதரும் சிவஞானமுனிவரும் அமைதி கூறியுள்ளனர். (சங்கர நமச்சிவாயர் முதலியோர் இதுபற்றி ஒன்றும் கூறவில்லை.)

மயிலைநாதர் கூறுவது: தொல்காப்பியர், மனத்தையும் ஒரு பொறியாக்கி அதனன் உணரும் மக்களையும் விலங்கினுள் ஒருசாரன வற்றையும் ஆறறிவுயிர் என்றார்; நன்னூலார், அம்மனக்காரிய மிகுதி குறைவால் உள்ள வாசியல்லது (வேறுபாடல்லது) அம்மனம் எல்லாவுயிர்க்கும் உண்டென்பார் மதம்பற்றி ஐயறிவுயிர் என்றார். (அஃதாவது, மனம் என்பது மக்கட்கு மட்டுமன்றி எல்லா உயிர்க்கும் உளதாகலின் ஆறறிவுயிர் என்பதைப் பாகுபடுத்தவில்லை.)

சிவஞானமுனிவர் கூறுவது: தொல்காப்பியர் மக்கள் தாமே ஆறறிவுயிரே எனக் கூறியிருக்க மக்கள் முதலியோரை ஐயறிவுயிரெனக் கூறல் மாறுகொளக் கூறலாம் எனில், அன்று. மக்கள் முதலியோர் மன அறிவோடு ஆறறிவுயிர் என்பது நோக்கிப் பெயரியலில் 'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' என நன்னூலார் கூறிப் போந்தார். இனி அம்மனவறிவின்றி ஐம்புலன் மாத்திரையே நுகரும் அறிவினையுடைய மக்கள் முதலியோரை விலங்கு முதலியவற்றோடு எண்ணி ஐயறிவுயிர் என உரியியலிற் கூறினார். (அஃதாவது மக்கள் மனவறிவுடையாரும் அஃதில்லாரும் என இருதிறத்தாராவர். அவர்களுள் மனவறிவுடையார் ஆறறிவுயிராவர்; அவர்களை மக்கள் தேவர் நரகர் உயர்திணை எனப் பெயரியலில் அடக்கினார்; மனவறிவில்லாதார் ஐயறி வுயிராவர்; இவர்களை உரியியலில் கூறினார். எனவே, தொல்காப்பியனார் கூற்றுக்கு மாறுபாடின்றாம்.)

முடிபு: இவ்விரண்டு அமைதிகளில் மயிலைநாதர் கூறுவது இயல்பாக அமைந்திருக்கிறது; சிவஞான முனிவர் கூறுவது வலிந்து கூறுவதாக அமைந்திருக் கிறது.

208. ஒற்றுமைநயம், வேற்றுமைநயம் என்ப வற்றை விளக்குக.

பல பொருள்களின் கூட்டுறவால் தோன்றிய ஒரு பொருளை ஒரு பொருளாகவே நோக்குவது ஒற்றுமை நயம் எனப்படும். அங்ஙனம் தோன்றிய பொருளை வேறு வேறாகப் பகுத்து நோக்குவது வேற்றுமை நயம் எனப்படும்.

விளக்கம்: 1. யானை குதிரை தேர் காலாள் ஆகிய வற்றால் திரண்ட ஒன்றைப் படை என்று நோக்குவது ஒற்றுமைநயம். 2. 'மக்கள் தேவர் நரகர் உயர்திணை என்றவிடத்து மக்கள் என்றது அவர் உடம்பும் உயிரும் கூடிய கூட்டுறவைக் குறிக்கும், இது ஒற்றுமை நயம். 3. 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' என்றவிடத்துக் கசதப என்பன உயிரும் மெய் யும் கூடிய கூட்டுறவைக் குறிக்காமல் க் ச் த் ப் என்ற மெய்யை மட்டும் வேறு பிரித்துக் குறிக்கின்றன. இது வேற்றுமை நயம். 4. 'வானவர் மக்கள் நரகர் விலங்கு புள் ஆதிசெவி யறிவோடு ஐயறிவுயிரே' என்றவிடத்து மக்கள் என்றது அவரது உடம்பும் உயிரும் கூடிய கூட்டுறவைக் குறிக்காமல் உயிரை மட்டும் வேறு பிரித்துக் குறிப்பதால் வேற்றுமை நயமாகும்.

209. உயிர்க்குணம், உயிர்த்தொழில், உயிரல் பொருட்குணம், இருபொருட்டொழிற்குணம் யாவை?

## உயிர்க் குணம்

| | | | |
|---|---|---|---|
| 1. அறிவு | 9. கடைப்பிடி | 17. துணிவு | 25. மூப்பு |
| 2. அருள் | 10. மையல் | 18. அழுக்காறு | 26. இகல் |
| 3. ஆசை | 11. நினைவு | 19. அன்பு | 27. வென்றி |
| 4. அச்சம் | 12. வெறுப்பு | 20. எளிமை | 28. பொச்சாப்பு |
| 5. மானம் | 13. உவப்பு | 21. எய்த்தல் | |
| 6. நிறை | 14. இரக்கம் | 22. துன்பம் | 29. ஊக்கம் |
| 7. பொறை | 15. நாண் | 23. இன்பம் | 30. மறம் |
| 8. ஓர்ப்பு | 16. வெகுளி | 24. இளமை | 31. மதம் |

32. மறவி முதலியன.

## உயிர்த்தொழில்

1. துய்த்தல்
2. துஞ்சல்
3. தொழுதல்
4. அணிதல்
5. உய்த்தல் முதலியன

## உயிரல்பொருட்குணம்

(1) வட்டம் இருகோணம் முக்கோணம் சதுரம் ஆய்தம் சிலை துடி தோரை முழா எறும்பு கூன் குறள் முதலிய பல வடிவங்கள். (2) நன்று தீது என்ற இரு வகை நாற்றம். (3) வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமை என்ற ஐவகை நிறம். (4) கைப்புப் புளிப்புத் துவர்ப்பு உவர்ப்புக் கார்ப்பு இனிப்பு என்ற அறுவகைச் சுவை. (5) வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்மை (இலேசு) சீர்மை (கனம்) இழுமெனல் சருச்சரை என்ற எட்டுவகை ஊறு.

## இருபொருட் டொழிற்குணம்

1. தோன்றல்
2. மறைதல்
3. வளர்தல்
4. சுருங்கல்
5. நீங்கல்
6. அடைதல்
7. நடுங்கல்
8. இசைத்தல்
9. ஈதல் முதலியன

**210.** உயிரல் பொருட்குணங்கள் இவை எனக் கூறி, அவற்றை விரித்துக் காட்டுக. (1963)

*பல்வகை வடிவு, இருநாற்றம், ஐவண்ணம், அறுசுவை, ஊறுஎட்டு என்பன உயிரல் பொருட்குணமாம்.*

**விரிவு :** *விடை 209-னுள் காண்க.*

**211.** மிகுதிப் பொருள், சொல்லென் பொருள், ஓசைப் பொருள் தரும் உரிச்சொற்கள் யாவை ?

சால, உறு, தவ, நனி, கூர், கழி என்ற ஆறும் மிகுதிப் பொருள் தரும் உரிச்சொற்களாம்.

**விதி :** *சால உறுதவ நனிகூர் கழிமிகல்.*

மாற்றம், நுவற்சி, செப்பு, உரை, கரை, நொடி, இசை, கூற்றுப், புகறல், மொழி, கிளவி, விளம்பு, அறை, பாட்டுப், பகர்ச்சி, இயம்பல் என்ற பதினாறும் சொல்லென் பொருள் தரும் உரிச்சொற்களாம்.

**விதி :** மாற்றம் நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப்புக றன்மொழி கிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி இயம்பல் சொல்லே.

முழக்கு, இரட்டு, ஒலி, கலி, இசை, துவை, பிளிறு, இரை, இரங்கல், அழுங்கல், இயம்பல், இமிழ், குளிறு, அதிர், குரை, கனை, சிலை, சும்மை, கவ்வை, கம்பலை, அரவம், ஆர்ப்பு என்ற இருபத்திரண்டும் பிறவும் ஓசைப்பொருள் தரும் உரிச்சொற்களாம்.

**விதி :** *முழக்கிரட் டொலிகலி இசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்பல் இமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கவ்வை கம்பலை
அரவம் ஆர்ப்போடு இன்னன ஓசை.*

212. ஓசை என்னும் ஒரு குணத்தையுணர்த்தும் உரிச்சொற்களுள் எட்டினைக் குறிப்பிடுக. (1968)

விடை 211-னுள் காண்க.

213. கடி என்னும் உரிச்சொல் தரும் பொருள்களை எழுதுக. ஆறற்குக் காட்டும் தருக.

கடி என்னும் உரிச்சொல் காப்பு, கூர்மை, விரை, விளக்கம், அச்சம், சிறப்பு, விரைவு, மிகுதி, புதுமை, ஆர்த்தல், வரைவு, மன்றல், கரிப்பு என்னும் பதின்மூன்று பொருளைத் தரும்.

**விதி :** கடிஎன் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் ஆகும்.

(எ–டு) 1. 'ஒண் சுடர் நல்லில் அருங்கடி நீவி'—(கடி=காப்பு). 2. 'கடி மாலை சூடி' — (கடி=விரை, மணம்). 3. 'எம் மம்பு கடி விடுதும்'—(கடி = விரைவு). 4. 'கடியுண் கடவுட்கு இட்ட செழுங்குரல்' — (கடி= மிகுதி, புதுமையும் ஆம்). 5. கடி முரசு — (கடி = ஆர்த்தல்). 6. கடி மிளகு — (கடி=கரிப்பு).

214. கடிவிடுதும், கடிமுரசு, கடிமிளகு : இவற்றுள் வந்துள்ள கடி என்பது என்ன சொல்? ஏன்? அச்சொல் எவ்வெப் பொருள்களில் ஈண்டு வந்துள்ளது? (1967)

கடிவிடுதும், கடிமுரசு, கடிமிளகு என்ற தொடர்களில் வந்துள்ள கடி என்பது உரிச்சொல்லாகும்.

பல்வகைப் பண்பும் பகர்பெயராகி ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை ஒருவா செய்யுட்குரியன உரிச்சொல் என்பது விதியாகலானும் ஈண்டு வந்துள்ள கடி என்பது பலகுணம் தழுவிய ஒரு சொல்லாகலானும் உரிச்சொல்லாயிற்று.

இவற்றிற்குப் பொருள் விடை 213-னுள் காண்க.

215. உவமைகளை இடம் சுட்டி விளக்குக.

1. பராரையினின்றும் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடொன்று தொடர்பட்டெழுந்து நிற்றல்போல, 2. ஒருவற்கு மைந்தனாயினன் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல, 3. பாலன் விருத்தன் ஆனாற்போல, 4. நரமடங்கல்போல, 5. நீரும் நீரும் சேர்ந்தாற்போல—விரலும் விரலும் சேரநின்றாற்போல.

(1) சிறப்புப்பாயிரத்திற்கு விருத்தியுரை எழுதுமிடத்து வகை என்பதும் தொகைவிரி என்பதும் ஒன்றே என்பதைக் கூறி முடிக்கும் இடத்துப் 'பராரையினின்றும் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடொன்று தொடர்பட்டெழுந்து நிற்றல்போல்' என்ற உவமை கூறப்படுகிறது. அடிமரத்திலிருந்து கவடும் அதிலிருந்து கோடு முதலியனவும் தொடர்புறச் செல்வதுபோலத் தொகையிலிருந்து விரியும் அதிலிருந்து மறுவிரியும் செல்லுமாயினும் அடி முதலியவற்றைத் தொகுத்து நோக்குப்போது மரம் என ஒன்றாய்த் தோன்றுவதுபோல் தொகையும் விரியும் ஒன்றாய்த் தோன்றுதலின் 'தொகைவிரி' என்பது ஒன்றேயாம்.

(2) வழிநூல் இலக்கணம் வகுக்குமிடத்து, 'ஒருவற்கு மைந்தனாயினன் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல' என்ற உவமையை முனிவர் கையாளு

கின்றார். இறைவன் நூலே முதனூல் என்றும் இறுதி நூலே வழிநூல் என்றும் முடிவு செய்யாது இடை நிற்கும் நூல்களையும் முதனூல் வழிநூல் என்று கொள்ளவேண்டும். ஒருவன் தன் தந்தையை நோக்க மகன் எனப்படுவதுபோல ஒரு நூல் தன் முதனூலை நோக்க வழிநூல் எனப்படும். இனி அவனே தன் மகனை நோக்கத் தந்தை எனப்படுவதுபோல அந் நூலே தன் வழிநூலை நோக்க முதனூல் எனப்படும்; எனவே இடைநிற்கும் நூல்கள் முதனூலும் வழிநூலு மாகும்.

(3) 'தானம் முயற்சி' என்ற நூற்பாவில் எழுத்துக் களின் இனம் பொருளானும் உண்டாகும் என்பதை விளக்குமிடத்துப், 'பாலன் விருத்தன் ஆனாற்போல' என்ற உவமை கூறப்படுகிறது. இளைஞனாக ஒருகாலத் தில் இருந்தவனே பின்பொருகாலத்தில் முதியவனாக ஆகின்றான். இப்பாலனும் விருத்தனும் ஒருவனேயன்றி இருவரல்லன். அங்கு என்னும் சொல்லில் உள்ள குறிலே ஆங்கு என்னும் சொல்லில் நெடிலாக நீண்டு விகாரப்பட்டிருக்கிறது. அங்கு ஆங்கு இரண்டிற்கும் பொருள் ஒன்றே. இங்ஙனம் குறிலது விகாரமே நெடில் ஆகலின் இரண்டும் இனமாயின.

(4) அகரமுதலியவற்றின் முறைவைப்புக் கூறு மிடத்து எ, ஒக்களை விளக்கும் வழி, 'நரமடங்கல் போல்' என்ற உவமையைச் சிவஞானமுனிவர் கையாளுகிறார். உடலெல்லாம் நரன் (மனிதன்) ஆகவும் தலைமட்டும் மடங்கல் (சிங்கம்) ஆகவும் உருவம் கொண்ட நரசிம்மாவதாரத்தைப் போல அகரக்கூறும் இகரக் கூறும் ஒத்திசைத்து எகரம் ஆகின்றது; அகரக்கூறும் உகரக்கூறும் ஒத்திசைத்து ஒகரம் ஆகின்றது.

(5) உயிரளபெடையை விளக்கவந்த இடத்து, 'நீரும்நீரும் சேர்ந்தாற்போல-விரலும் விரலும் சேர நின்றாற்போல' என்ற உவமைகளை முனிவர் குறிக்கின்றார். நீருடன் மேலும் சிறிது நீரைச் சேர்த்தால் இரண்டும் வேறுபாடின்றி ஒன்றாய்க் காணுமாறு போல நெடிலுடன் அதன் இனமொத்த குறிலைச்சேர்த்தால் இரண்டும் வேறுபாடின்றி ஒத்திசைப்பதே அளபெடையாகும். நடுவிரலுடன் ஆழிவிரலையும் சேர நீட்டுவோமாயின் இரண்டும் (ஒன்றுடன் ஒன்று கலக்காமல்) இணைந்து நிற்பதுபோல் நெட்டெழுத்துடன் இனமொத்த குற்றெழுத்தைச் சேர்ப்போமாயின் அவ்விரண்டும் இணைந்து ஒலிப்பதே அளபெடை எனச் சிலர் கூறுவர்.

216. பின்வரும் உவமைகளைப் பொருளோடு பொருத்துக.

1. இருசிறகெழுப்ப எழுமுடலதுபோல், 2. முடவன் கோலூன்றி வந்தாற்போல, 3. அப்பொடு பெய்த உப்பேபோல, 4. உயிர்க்கு அறிவு கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறு போல, 5. வானரத்தின் முகம் வலிமுகம் எனப்பட்டதுபோல.

(1) ஒற்றளபெடை கூறும் நூற்பாவில் ஆய்தம் விதியீறாகக் கூட ஈறாகாது என்பதை விளக்குமிடத்து இரு சிறகெழுப்ப எழுமுடலதுபோல் என்ற உவமை கூறப்படுகிறது. பறவை பறக்கத் தொடங்கும்போது அதன் இருமருங்கும் உள்ள சிறகு அசைந்து எழுப்புவதனால் நடுவிருந்த உடம்பு எழும். அதுபோல ஆய்த எழுத்துள்ள ஒரு சொல் உச்சரிக்கப்படும்போது

ஆய்தத்தின் இருமருங்கும் உள்ள எழுத்துக்கள் உச்சரித்து எழுப்புவதனால் நடுவிலிருந்த ஆய்தமும் உச்சரிக்கப்படும். (உடம்புபோல் ஆய்தம்; இருசிறகு போல் இருமருங்குள்ள எழுத்துக்கள்.)

(2) சுட்டியா எகர வினா வழி என்ற நூற்பா விற்குப் பதசாரம் எழுதுமிடத்து வழி என்னும் சொல்லை விளக்கும் வழி முடவன் கோலூன்றி வந்தாற் போல என்ற உவமையைச் சிவஞான முனிவர் கையாளு கிறார். முடவன் நடக்கும் ஆற்றலைப் பெற்றிருப்பினும் தனித்து நடக்க முடியாமல் முன்னே ஊன்றுகோலைத் துணையாகக் கொண்டு நடக்கின்றான். அதுபோல ஙகரமும் மொழிமுதலாகும் இலக்கணம் பெறினும் தனித்து வரமுடியாமல் முன்னே சுட்டுவினாக்களைத் துணையாகக கொண்டு மொழிமுதலாகும். (முடவன் போல ஙகரம்; கோல்போலச் சுட்டுவினாக்கள்).

(3) நினற நெறியே உயிர்மெய் முதலீறே என்ற நூற்பாவின்கீழ் உயிர்மெய் ஒன்றாயும் இரண்டாயும் கூறப்பட்டவாற்றை விளக்குமிடத்து அப்பொடு பெய்த உப்பே போல என்ற உவமை கூறப்படுகிறது. (அப்பு=தண்ணீர்) ஒருபடி அளவுள்ள அப்புடன் அரைப்படி உப்பைச் சேர்த்தால் அக்கலவை நீர் ஒரு படியளவாக இருக்குமேதவிர ஒன்றரைப்படியளவாக மிகுதிப்படாது. அதுபோல ஒருமாத்திரை அளவுள்ள உயிருடன் அரைமாத்திரை அளவுள்ள மெய்யைச் சேர்த்தால் அக்கலபபால் பிறந்த உயிர்மெய் ஒரு மாத்திரை அளவாக இருக்குமே தவிர ஒன்றரை மாத்திரை அளவாக மிகுதிப்படாது. (அப்புப்போல உயிர்; உப்புப்போல மெய்.)

(4) ஒருமொழி தொடர்மொழி என்னும் நூற்பாவில் சொல் தன்னையும் பொருளையும் உணர்த்தும் என்பதை விளக்கவந்த இடத்து உயிர்க்கு அறிவு கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறு போல என்ற உவமையை முனிவர் எடுத்தாண்டுள்ளார். உயிர்களுக்கு அறிவானது ஒரு கருவியாக இருந்து தன்னையும் உணர்த்தும்; பொருளையும் உணர்த்தும். அது போல ஒருவர்க்குச் சொல் கருவியாக நின்று தன்னையும் உணர்த்தும்; உள்பொருள் இல்பொருள் மெய்ப்பொருள் பொய்ப்பொருள் சித்துப்பொருள் சடப்பொருள் நித்தியப்பொருள் அநித்தியப்பொருள் உருவப்பொருள் அருவப்பொருள் (காட்சிப் பொருள் கருத்துப் பொருள்) இயற்கைப்பொருள் செயற்கைப் பொருள் முதற்பொருள் சினைப்பொருள் இயங்கியற் பொருள் நிலையியற்பொருள் எனப் பலவாற்றான் கூறப்படும் இருதிணை ஐம்பாற்பொருளையும் உணர்த்தும். (உயிர்போல அறிபவன்; அறிவுபோலச் சொல்.)

(5) திரிசொல் என்பதில் திரிபு என்பது செயற்கையன்று இயற்கையே என்பதை விளக்குமிடத்து வானரத்தின் முகம் வலிமுகம் எனப்பட்டதுபோல என்ற உவமை கூறப்பட்டுள்ளது. வானரத்தின் முகம் தன் இயல்பில் இருந்ததேனும், நரர்முகச் செவ்விக்கு மறுதலைப்பட்டமை கருதி வலிமுகம் (திரிந்த முகம்) எனப்பட்டது; அதுபோலத் திரிசொல் என்பதும் தன் இயல்பில் இருந்ததேனும், இயல்பில் பொருள் உணர நின்ற இயற்சொல்லின் இயல்புக்கு மறுதலைப் பட்டுக் கல்வி ஏதுவான் பொருள் உணர நின்றமை கருதித் திரிசொல் எனப்பட்டது.

217. உவமையை விளக்குக.

1. புகை தன் ஆதியாய அனல்காட்டலாகும் என்றாற்போல, 2. முயற்கோடு ஆகாயப்பூ என்றாற் போல, 3. சீதமின்மை பனியின்மை காட்டல்போல, 4. பாலைத்திணை நடுவுநிலைத்திணை யெனப் பெயர் பெற்றதுபோல.

(1) 'புகைதன் ஆதியாய அனல் காட்டலாகும்' என்பது சிவஞான சித்தியாரின் வாக்கியம். புகை என்ற காரியப் பொருள் தான் தோன்றுவதற்கு ஆதியாய (காரணமாகிய) நெருப்பைக் குறிப்பால் உணர்த்தும். அதுபோல ஒருவினைச் சொல்லாகிய காரியப தான் தோன்றுவதற்குக் காரணமாகிய செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்ற ஆறையும் காட்டும்; (புகைபோல வினைச்சொல்; அனல்போலச் செய்பவன் முதலிய ஆறு.)

(2) முயற்கோடு ஆகாயப்பூ என்பன இல்பொருள் கட்குக் காட்டப்படும் எடுத்துக் காட்டுக்களாகும். இவை இல்பொருள்களேயாயினும் உள்பொருள் போல வைத்துப் பேசப்படுகின்றன. அதேபோலச் செய்யான் என்றற்றொடக்கத்தன எதிர்மறையாய் வினை நிகழா திருக்கவும் அவற்றையும் வினைச்சொல் என்று கொள் கின்றோம். அஃதாவது இது இன்மையை உண்மை போல் வைத்துப் பேசுவதோர் இலக்கணையாம்.

(3) சீதமின்மை பனியின்மை காட்டல் என்பது குளிரில்லாமையானது பனியில்லாமையைக் குறிப்பால் உணர்த்தும் என்று பொருள்படும். சீதமில்லாமை பனியில்லாமையைக் காட்டுவதுபோலச் செய்யான் என்றற்றொடக்கத்து எதிர்மறை வினைகள் செய்பவன்

இன்மை கருவியின்மை நிலமின்மை செயலின்மை கால மின்மை செய்பொருளின்மை என்ற ஆறையும் காட்டும்.

(4) பாலைத்திணை என்பது குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்ற திணைகளும் ஆகாமல் அவற்றின் வேறுமாகாமல் நடுப்பட்டதாய் நிற்றலின் நடுவு நிலைத் திணை எனக் காரணப்பெயர் பெற்றது. அது போல இடைச்சொல் என்பதும் பெயர் வினை என்ற சொற்களும் ஆகாமல் அவற்றின் வேறுமாகாமல் இடைநிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி பெற்றது. (குறி = பெயர்.)

218. இடங்கூறி விளக்குக: (a) தந்தையைக் குறிக்க மகன் எனப்பட்டான் ஒருவன் தன் மகனைக் குறிக்கத் தந்தையானற்போல. (b) மா பலா முதலியன பராரை முதலிய சினையோடு நின்றன வெனக் கண்டது கூறுவார்போல, (c) கமுகம் தோட்டம் என்றாற்போல, (d) தாய் மலடி என்றாற் போலும்.

(a) இடம்: பதவியலில் 'விளம்பிய பகுதி வேறாதலும் விதியே' என்ற நூற்பாவுக்கு விளக்கவுரை எழுதுமிடத்துத் 'தந்தையைக் குறிக்க மகன் எனப் பட்டான் ஒருவன் தன் மகனைக் குறிக்கத் தந்தையானற் போல' என்ற உவமை எடுத்தாளப்படுகிறது.

**விளக்கம்:** வேறுபடாதது பிரகிருதி; வேறுபட்டது விகிருதி. நட வா முதலிய ஏவற்பகுதிகள், வி, பி என்னும் விகுதியுடன் கூடி நடப்பி வருவி என மீண்டும் ஏவற்பகுதிகளாகின்றன. அவை போலவே நடத்தினன் என்பதில் உள்ள நட என்னும் வினைப்பகுதியும் வி, பி என்னும் விகுதியுடன் கூடி நடப்பித்தான், நடத்து

விப்பித்தான் என வினைப்பகுதிகளாகின்றன. இங்கே நட வா முதலியன வேறுபடாத பிரகிருதி; ஆனால் நடப்பி நடத்துவிப்பி என்பன வேறுபட்டமையின் விகிருதி எனப்படவேண்டும். எனினும் அவை பிரகிருதி; அதாவது பகுதி எனப்படுகின்றன. ஒருவன் தனது தந்தையை நோக்க மகன் எனப்படுகிறான். அவனே தன் மகனை நோக்கத் தந்தை எனப்படுகிறான். அதுபோல வி, பி என்பன நட வா முதலியவற்றை நோக்க விகுதியாகின்றன. ஆன் முதலிய விகுதிகளை நோக்கப் பகுதிகள் எனப்படுகின்றன.

(b) இடம்: பதவியலில், இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பலின்' என்ற நூற்பாவுக்குப் பதசாரம் கூறுமிடத்து, 'மா பலா முதலியன பராரை முதலிய சினையோடு நின்றனவெனக் கண்டது கூறுவார் போல' என்ற உவமை எடுத்தாளப்படுகிறது.

**விளக்கம்:** மா பலா முதலிய மரங்களை நேரில் காண்போர், 'அம்மரங்கள் அடிமரம் கவடு கிளை முதலிய உறுப்புகளுடன் நிற்கின்றன' எனத் தாம் நேரில் கண்டவற்றைக் கூறுவார்கள். அதுபோலப் பகுபதத்தைக் கண்ட நன்னூலார், 'அப்பதமும் பகுதி விகுதி முதலிய உறுப்புக்களுடன் நிற்கின்றது' எனத் தாம் கண்டதையே கூறினார். மேலும் அப்பதம் தந்த தோலா நாவின் மேலோர் ஆணையில் தாம் நிற்றலின் இலக்கியம் கண்டதற்கு என்றார்.

(c) இடம்: உயிரீற்றுப் புணரியலில் 'மெய்யுயிர் முதலீறும்' என்ற தலைச் சூத்திரத்தின்கீழ்த் தோற்றுவாயாகக் கூறுமிடத்துக், 'கமுகம் தோட்டம் என்றாற் போல' என்ற உவமை எடுத்தாளப்படுகிறது.

**விளக்கம்:** ஒரு தோட்டத்தில் கமுகமும் பனையும் தென்னையும் இருப்பினும் கமுகமரம் மிகுதியாக இருந்

தால் அதனை மிகுதிபற்றிக் கமுகம் தோட்டம் என்பார் கள். அதுபோல் உயிரீற்றுப் புணரியலில் உயிரீற்றுப் புணர்ச்சி மட்டுமின்றிப் புணர்ச்சி இன்னதென்பது முதலிய பிற விதிகளும் வருகின்றனவேனும் உயிரீற்றுப் புணர்ச்சி மிகுதியாகக் கூறப்படுவதால் அவ்வியல் உயிரீற்றுப் புணரியல் எனப் பெயர்பெற்றது.

(d) இடம்: உயிரீற்றுப் புணரியலில், 'வேற்றுமை ஐமுதலாறும்' என்ற நூற்பாவின் விளக்கவுரையில் பிறர் கூற்றை மறுக்குமிடத்து, 'அவர் கூற்றுத் தாய் மலடி என்றாற்போலும்' என்ற தொடர் எடுத்தாளப் படுகிறது.

**விளக்கம் :** வினைத்தொகை பண்புத்தொகை அன் மொழித் தொகைகள், இருசொற்கள் இணைந்து அல்வழிப் புணர்ச்சியவாய்த் தொகைநிலைத் தொடர் மொழிகள் ஆகின்றன. இவற்றை இருமொழிகள்—அதாவது தொடர் மொழிகள்—என்று சிவஞான முனிவரும் சங்கரநமச்சிவாயரும் கருதுகின்றனர். இவற்றை ஒரு மொழிகள் என நச்சினார்க்கினியரும் மயிலைநாதரும் கருதுகின்றனர். பிள்ளையைப் பெற்ற தாயைப் பார்த்து இவள் மலடி என்றால் எங்ஙனம் பொருந்தாதோ அதேபோல இருமொழிகளால் ஆன வினைத்தொகை முதலியவற்றை ஒரு மொழிகள் என்பார் கூற்றும் பொருந்தாது.

219. இப்பெற்றம் உழவொழிந்தன, பாயா வேங்கை: எவற்றை விளக்க இவை உதாரணங் களாக வந்துள்ளன? (1968)

1. இருதிணை ஆண் பெண்களுள் ஒன்றனை ஒழிக்கும் பொதுச் சொற்கள் — ஒன்றொழி பொதுச் சொல் — குறிப்பால் பொருள் விளக்கும் என்

பதை விளக்குமிடத்து இப்பெற்றம் உழவொழிந்தன என்பது உதாரணமாக வந்துள்ளது. ஈண்டுப் பெற்றம் என்பது பெயர்ப் பொதுச்சொல். அது பெண்ணை ஒழித்து ஆண் என்பதைக் குறிப்பால் பொருள் உணர்த்தியது. அதுபோலவே ஒழிந்தன என்பது வினைப் பொதுச்சொல். அதுவும் பெண்ணை ஒழித்து ஆண் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது.

2. ஒன்றொழி பொதுச்சொல் முதலியனவேயன்றி இன்ன பிறவும் என்னும் மிகையால் பல்லாற்றான் வரும் குறிப்புச் சொற்களை விளக்குமிடத்துப் பாயா வேங்கை என்பது உதாரணமாக வந்துள்ளது. வேங்கை என்பது புலி, ஒருவகை மரம் எனப் பல பொருள் தரும். இப்பொருள்களுள், புலி என்பதை விலக்கி மரம் என்னும் பொருளைப் பாயா என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் குறிப்பால் உணர்த்தியது.

220. 'முடவன் கோலூன்றி வந்தாற்போல' 'இரட்டை இலைபோல'—இவைகொண்டு விளக்கப் பெற்றவை யாவை? (1965)

'முடவன் கோலூன்றி வந்தாற்போல' என்பதனை விடை 216-னுள் காண்க.

இரட்டையிலைபோல் என்ற தொடர் மெய்யீற்றுப் புணரியலில் உடன்மேல் உயிர் வந்து ஒன்றுவதியல்பே என்ற நூற்பாவின் விளக்கவுரையில் எடுத்தாளப் பட்டுள்ளது.

'மெய்யும் உயிரும் கூடி உயிர்மெய்யாகும்போது மெய்யினது புள்ளியும் உயிரினது வடிவமும் கெட்டு நிற்றலின் உயிரும் மெய்யும் கூடி உயிர்மெய்யாவதைச் சிலர் விகாரம் என்பர்; ஆனால் அது விகாரமன்று இயல்பே என நன்னூலார் கொள்வார்' என்ற

கருத்தை விளக்கும்பொருட்டு இரட்டை இலைபோல் என்ற தொடர் எடுத்தாளப்பட்டுள்ளது. (அஃதாவது முன்னர் ஓரிலையும் அதன் பக்கத்து மற்றோர் இலையு மாக ஒட்டி இரட்டையில் காணப்படுவதுபோல முன்னர் ஒற்றொலியும் அதன்பின்னர் உயிரொலியுமாக ஒட்டி உயிர்மெய் ஒலிக்கப்படும் என்பதாம்.)

221. 'கிழங்கு மணற்கீன்ற முளை'—இத்தொடர் எதனை விளக்குதற்காகக் காட்டப்பெற்றுள்ளது? காரணம் எழுதி விளக்குக. (1965)

'கிழங்கு மணற்கீன்ற முளை' என்ற தொடர் உருபு மயக்கத்தை (வேற்றுமை மயக்கத்தை) விளக்குதற் காகக் காட்டப் பெற்றுள்ளது.

மணற்கு ஈன்ற முளை என்றவிடத்து நான்காம் வேற்றுமை உருபு வந்துள்ளது. நான்கன் உருபுக் குப் பொருள் கோடற்பொருள். ஈண்டுக் கோடலாகி தொழில் மணலுக்கு இல்லை. கிழங்கு முளை விடுதற்கு மணல் இடமேயாகும். ஈண்டு நான்கன் உருபு தன் பொருளைத் தாராமல் ஏழாம் வேற்றுமைப் பொருளைத் தந்ததால் இது உருபு மயக்கமாயிற்று, எனவே இது ஏழாவதற்கு நான்காவது வந்த உருபு மயக்கத்துக்கு உதாரணமாகக் காட்டப்பெற்றுள்ளது.

222. 'உண்ட இளைப்பு' 'அம்பலூரும் அவனொடு மொழிமே' என்பன எவற்றிற்கு இலக்கியமாய் எடுத்தாளப்பட்டுள்ளன? விளக்குக. (1963)

'உண்ட இளைப்பு' என்பது பெயரெச்சம் செய்வ தாதி அறுபொருளேயன்றிப் பிறபெயர் எஞ்ச நின்ற தற்கும், பெயரெச்சம் காரணப் பொருட்டாய் வந்த தற்கும் இலக்கியமாய் எடுத்தாளப்பட்டுள்ளது.

உண்ட இளைப்பு என்பதில் இளைப்பு என்பது செய்ப வன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்ற ஆறனுள் ஒன்ருகாமையின் பிறபெயராகக் கொள்ளப்பட்டது. மற்றும் இளைப்பு என்பது காரிய மாய் அதற்கு உண்ட என்பது காரணமாய் நிற்றலின் காரணப் பொருட்டாயிற்று.

'அம்பலூரும் அவனொடு மொழிமே' என்பது செய்யும் என்முற்று உயிர்மெய் கெட்டு முடிந்ததற்கு இலக்கியமாய் எடுத்தாளப்பட்டுள்ளது. 'செய்யும் என் எச்சவீற் றுயிர் மெய் சேறலும்,—செய்யுளுள் உம்உந் தாகலும், முற்றேல்—உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே' என்ற விதிப்படி மொழியும் என்ற செய்யு மென்முற்று உயிர்மெய் கெட்டு 'மொழிம்' என முடிந்தது.

223. வாழைபழம், கீரைகறி என்ற எடுத்துக் காட்டு யாண்டு வந்துள்ளது? விளக்குக. (1962)

எண்மூவெழுத்தீற்றும் என்ற நூற்பாவிற்கு எழுதப்பட்ட விருத்தியுரைக்கண் வாழைபழம், கீரைகறி என்ற எடுத்துக்காட்டு வந்துள்ளது.

**விளக்கம்:** 'எண்மூ வெழுத் தீற்றும்' என்னும் நூற்பாவில் 'குறில்வழி யத் தனி ஐந் நொ துமுன் மெலி மிகலுமாம்' என்ற பகுதிக்குக் 'குறிலை அடுத்த யகர ஒற்றின் முன்னும், ஓரெழுத்தொருமொழியான ஐகாரத்தின் முன்னும், நொ து என்பவற்றின் முன்னும் வரும் மெல்லெழுத்து மிகும்.' என்று மயிலைநாதர் உரை கூறினர்.

(எ-டு) 1. மெய்+ஞாற்சி=மெய்ஞ்ஞாற்சி
2. கை+ஞாற்சி=கைஞ்ஞாற்சி
3. நொ+ஞெள்ளா=நொஞ்ஞெள்ளா

இனி இப்பகுதிக்கு இவ்வாறே உரை எழுதி உதாரணமும் காட்டி அவற்றின் மேலும் 'மெலி மிகலுமாம்' என்ற உம்மையை எச்சவும்மையாக்கி அதனால்) நொ, து என்னும் இரண்டு சொல் முன்னும் மெல்லினமேயன்றி இடையினமும் மிகும்' என்று சங்கர நமச்சிவாயரும் சிவஞான முனிவரும் கொள்கின்றனர், இக்கருத்தை நிலைநாட்டவேண்டி, இவ்வாறு இடையினம் மிகுதலை ஆசிரியர் தொல்காப்பியனாரும் அவற்றுள் மெல்லெழுத் தியற்கை உறழினும் வரையார்' என உம்மையாற்றழுவினர் என்றும், நொது என்பவற்றின் முன் மெல்லினமும் இடையினமும் மிகாவேல் புணர்ச்சி யின்றி விட்டிசைபோலும் என்றும், அன்றேல் வாழை பழம் கீரைகறி என்றாற்போலும் என்றும் எழுதியுள்ளனர்.

அதாவது வாழைப்பழம் கீரைக்கறி என்று ஒலிக்க வேண்டியவற்றை வாழைபழம் கீரைகறி என்று ஒலித்தால் எப்படி நகைப்பிற்கு இடமாகுமோ அது போலவே நொய்யவனு, துய்யவனு என்று ஒலிக்க வேண்டியவற்றை, நொயவனு, துயவனு என்று ஒலித்தாலும் நகைப்பிற்கு இடமாகும்.

224. அகத்தியச் சூத்திரங்களை எடுத்தாண்ட இடங்களில் இரண்டு இடங்களை எடுத்து விளக்குக. (1964)

(1) இடம்: பெயரியலில் ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறுயப் பொருள்வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை என்ற நூற்பாவின்கீழ் வேற்றுமை எட்டே என்பதை விளக்குமிடத்து,

'ஏழியன் முறையது; எதிர்முக வேற்றுமை
வேறெனு விளம்பான் பெயரது விகாரமென்று
ஓதிய புலவனும் உளன்; ஒரு வகையான்
இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்.'

என்ற அகத்தியச் சூத்திரத்தை விருத்தியுரையாளர் எடுத்தாளுகின்றார்.

**விளக்கம்:** விளிவேற்றுமை பெயரது விகாரமாக லின் அதனை முதல் வேற்றுமையுடன் அடக்கி வேற்றுமை ஏழு என்பர் சிலர். அவ்வாறு ஏழு என்பவர்களில் வடமொழி ஆசிரியர் பாணினி ஒருவராவர். இனி வடமொழி ஆசிரியர் இந்திரன் என்பார் விளிவேற்றுமையைத் தனியாக்கி வேற்றுமை எட்டென்றார். இதனை 'ஏழியன் முறையது' என்னும் அகத்தியச் சூத்திரம் உணர்த்துகிறது. எனவே அவ்வகத்தியச் சூத்திரத்தைப் பின்பற்றி விளியுருபானது படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை எழுவாயுள் அடக்காது வேறுகோடலே தம் துணிபு என்பாராய் நன்னூலார் எட்டே வேற்றுமை என்று கூறினர்.

(2) இடம்: வினையியலில் பொதுவியல் பாறையும் தோற்றிப் பொருட்பெயர் முதலறு பெயரலது ஏற்பில முற்றே என்ற நூற்பாவின்கீழ்ப் பெயரலது ஏற்பில என்பது முதலியவற்றை. உறுதி செய்யுமிடத்து,

'மற்றுச்சொல் நோக்கா மரபின் அனைத்தும்
முற்றி நிற்பது முற்றியன் மொழியே.'

என்ற அகத்தியச் சூத்திரத்தை விருத்தியுரையாளர் எடுத்தாளுகின்றார்.

**விளக்கம்:** ஒருவினைமுற்று, வினைமுதலைத் தரும் விகுதியுறுப்புக் குறையாது முற்றி நிற்றலும், பெயரையன்றி வினை முதலியவற்றைப் பயனிலையாக ஏலாமையும், பெயர்ப்பின் வேறொன்றையும் ஏலாமையும் உடையதாகும். இக்கருத்தை நன்னூலார் பொதுவியல் பாறையும் என்ற நூற்பாவில் குறித்தார். அதனையே அகத்தியனாரும் மற்றுச்சொல் நோக்கா என்ற சூத்திரத்தில் குறித்துள்ளார்.

225. அகத்தியச் சூத்திரங்களை மேற்கோளாகக் காட்டிய இடங்களில் இரண்டினைக்குறிக்க. (1961)

*விடை 224-னுள் காண்க.*

226. சிவஞானமுனிவர் வடமொழிப் புலமையும் நிறைந்தவர் என்பதற்கு அவர் உரையினின்றும் ஆதாரம் தந்து நிறுவுக. (1961)

*சிவஞானமுனிவர் தமிழிலக்கிய இலக்கணப்* புலமையும், சமயசாத்திரப் புலமையும், தருக்க நூற் புலமையும் பெற்றதோடு வடமொழிப் புலமையும் நிறைந்தவர் என்பது அவரது விருத்தியுரையினின்றும் புலனாகின்றது. ஈண்டு அவரது வடமொழிப் புலமையை நோக்குவாம்.

(1) சிவஞானமுனிவர், சிறப்புப்பாயிரவுரையில், 'வடநூலார் யாப்பை ஆனந்தரியம் என்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகள் என்றும், பயனைப் பிரயோசனம் என்றும் கூறுப.' என்று எழுதியுள்ளார்.

(2) அதிகாரம் என்பதை விளக்குமிடத்தில், 'வடநூலார் யதோத்தேசபக்கம் எனவும் காரியகாலபக்கம் எனவும் கூறுப.' என்று எழுதியுள்ளார்.

(3) பெயர்களை வகுக்கும் இடத்தில், 'வடநூலார் இடுகுறியை ரூடி என்றும் காரணத்தை யோகம் என்றும் காரணவிடுகுறியை யோகரூடி என்றும் வழங்குப.' என்று எழுதியுள்ளார்.

(4) எழுத்துக்களின் முறைவைப்பைக் கூறுமிடத்தில், 'ஏ, ஓ, ஐ, ஔ என்னும் நான்கனையும் வடநூலார் சந்தியக்கரம் என்பர்' என்று எழுதியுள்ளார்.

(5) ஷை இடத்தில், 'மாபாடியத்துள் ஊகாரத்தின் பின் நின்ற வடவெழுத்து நான்குயிர்க்குமிடையே ரகர லகரக் கூறுகள் ஒத்து நிற்கும் என்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்கு ஐ ஒள எனபுழியும் இடையே யகர வகரக் கூறுகள் விரவிநிற்கும் என்பது உடன்பாடாதல் பெற்றாம்.' என்று எழுதியுள்ளார்.

(6) ஷை இடத்தில் 'எகர ஒகரங்களைச் சாமவேத முடையாருள் ஒருசாரார் இசைபற்றிக் குறூஉக்குறி போலக் கொண்டோதுப.' என்று எழுதியுள்ளார்.

(7) பகுபத உறுப்புக்களை விளக்குமிடத்தில் 'பிரகிருதி விகிருதி என்னும் ஆரியமொழிகள் பகுதி விகுதி எனத் திரிந்து நின்றன.' என்று எழுதியுள்ளார்.

(8) சொற்கள் தொடருமாற்றை உணர்த்தும் வழி, 'வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும் அண்மையானும் தகுதியானும் தொடரும்.' என்று எழுதியுள்ளார்.

(9) சொற்பொருளை விளக்குமிடத்தில், 'வடநூலார் சொற்பொருளை வாச்சியம் வியங்கியம் இலக்கணை என மூன்றெனவும் இலக்கணையை வியங்கியத்துள் அடக்கி இரண்டெனவும் கூறுப.' என்று எழுதியுள்ளார்.

(10) ஆறும் வேற்றுமையின் குறைப்பொருளை ஒன்றாய்த் தோன்றல், உரிமையாய்த் தோன்றல், வேறாய்த் தோன்றல் என மூன்றாக்கி உரைக்குமிடத்தில், 'இம்மூவகை வேற்றுமையை வடநூலார் நூற்றொரு பேதமாக்குவர்.' என்று எழுதியுள்ளார்.

(11) காரகம், இலக்கணை, ஆதிகாரணம், அநாதி காரணம், அருத்தாபத்தி. பாரிசேடம், அநுவதித்தல், அரிசனம். சுண்ணம். சாதனசாத்தியம், காரணகாரியம், கடம், படம், குணம், குணி போன்ற வடசொற்களைத் தமது உரையில் ஆங்காங்கே கையாண்டுள்ளார்.

(12) மறுப்புக்கள் எழுதுமிடத்து, 'யாம் கூறியதே வடநூலார்க்கும் உடன்பாடு' எனவும், 'தமிழ்நூற் பயிற்சி ஒன்றுமே யுடையார்' எனவும் எழுதியுள்ளார்.

மேற்காட்டிய பன்னிரண்டு சான்றுகளால் சிவஞானமுனிவர் வடமொழிப்புலமை நிரம்பியவர் என்பது பெறப்படும்.

227) தொல்காப்பியனார் கருத்தொடு நன்னூலார் கருத்து ஒத்தது என்பதற்கு விருத்திகாரர் வலிந்து பொருத்திக் காட்டும் இடங்களில் இரண்டனைக் குறிக்க. (1691)

(1) தொல்காப்பியர் சொற்களை ஒரெழுத்தொரு மொழி ஈரெழுத்தொருமொழி இரண்டிறந்திசைக்கும் தொடாமொழி என மூன்றாக்கினார், நன்னூலார் ஓரெழுத்து மொழி, தொடரெழுத்து மொழி என இரண்டாக்கினார்.

இங்ஙனம் இருவர் கருத்தும் மாறுபட்டிருக்கச் சிவஞானமுனிவர் 'இருவர் கருத்தும் ஒன்றே' என நிலைநாட்டுதற்கு வலிந்து பொருத்தம் காட்டுகின்றார். அது வருமாறு:

ஒன்று இரண்டு பல என்பன வடநூல் வழக்கு, ஒன்றல்லன வெல்லாம் பல என்பது தமிழ்நடை. ஆகவே வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல் காப்பியர் ஒரெழுத்தொரு மொழி ஈரெழுத்தொருமொழி இர்ண்டிறந்திசைக்கும் தொடர்மொழி என மொழியை மூன்றாகப் பிரித்தார். எனவே, கல் வில் என்றற் றொடக்கத்து ஈரெழுத்தொரு மொழிகள் தொடர்ந்தன வல்ல என்பது தொல்காப்பியர் கருத்தாகும்.

ஆயினும் கல் வில் என்றற்றொடக்கத்து ஈரெழுத் தொரு மொழிகள் ஒன்றோடொன்று தொடர்ந்து நின்றே பொருள் தருதலின் இவற்றைத் தொடர்ந்தன வல்ல எனத் தொல்காப்பியர் கூறினார் அல்லர் என்ப தற்குத் தொடர்மொழி என வாளா கூறாது இரண்டி றந்திசைக்கும் தொடர்மொழி என அடைகொடுத்தோதி யதே சான்றாகும்.

(2) தொல்காப்பியர் உயிர்களை ஓரறிவுயிர் முதலாக ஆறறிவுயிர் ஈறாக அறுவகைப்படுத்தினார்.

நன்னூலார் உயிர்களை ஓரறிவுயிர் முதலாக ஐயறிவுயிர் ஈருக ஐவகைப்படுத்தினர்.

இங்ஙனம் இருவர் கருத்தும் மாறுபட்டிருக்கச் சிவ ஞான முனிவர் 'இருவர் கருத்தும் ஒன்றே' என நிலை நாட்டுதற்கு வலிந்து பொருத்தம் காட்டுகின்றார். அது வருமாறு:

ஆசிரியர் தொல்காப்பியர் மக்கள் தாமே ஆறறிவுயிரே எனக் கூறியிருக்க நன்னூலார் மக்கள் முதலியோரை ஐயறிவுயிர் எனக் கூறல் மாறுகொளக் கூறலாம் எனில் அன்று. மக்கள் முதலியோர் மனவறிவோடு ஆறறிவுயிர் என்பது நோக்கித்தான் முன்னர்ப் பெயரியலில் மக்கள் தேவர் நரகர் உயர்திணை எனக் கூறிப் போந்தார். இனி ஐம்புலன் மாத்திரையே நுகரும் அறிவுடைய மக்கள் முதலியோரை விலங்கு முதலியவற்றோடு எண்ணி உரியியலில் ஐயறிவுயிர் எனக் கூறினர். இதனை உய்த்துணர்ந்துகொள்க.

228. விருத்தியுரையில் மேற்கோளாகக் காட்டப் பட்ட அகத்தியச் சூத்திரங்களில் எவையேனும் ஆறும், தொல்காப்பியச் சூத்திரங்களில் எவை யேனும் ஆறும் தருக.

விருத்தியுரையுள் மேற்கோளாகக் காட்டப்பட்ட அகத்திய தொல்காப்பியச்சூத்திரங்களில் சில வருமாறு:

அகத்தியச் சூத்திரம்

1. பலவின் இயைந்தவும் ஒன்றெனப் படுமே
அடிசில் புத்தகம் சேனை அமைந்த
கதவம் மாலை கம்பலம் அனைய.

2. வயிர ஊசியும் மயன்வினை இரும்பும்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் ஆணியும்
தமக்கமை கருவியும் தாமாம் அவைபோல்
உரைத்திறம் உணர்த்தலும் உரையது தொழிலே.

3. ஏழியன் முறையது எதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான் பெயரது விகாரமென்று
ஓதிய புலவனும் உளன்ஒரு வகையால்
இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்.

4. மற்றுச்சொல் நோக்கா மரபின் அனைத்தும்
முற்றி நிற்பது முற்றியன் மொழியே.

5. காலமொடு கருத வரினும் மாரை
மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே.

6. காலமும் வினையும் தோன்றிப்பால் தோன்றாது
பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே.

## தொல்காப்பியச் சூத்திரம்

1. சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔவெனும் மூன்றலங் கடையே.

2. ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்கும் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.

3. அவற்றுள்,
மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்.

4. குற்றிய லுகரமும் அற்றென மொழிப.

5. உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே.

6. வினைஎனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

229. நன்னூலார் முன்னோர் மொழியைப் பொன்னேபோற் போற்றுவதற்காகக் கையாண்டுள்ள பழஞ் சூத்திரங்களைக் குறிப்பிடுக.

1. வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

2. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்தென மொழிப உயர்மொழிப் புலவர்.

3. ஒருநெறி யின்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அதுபடல மாகும்.

4. குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே.

5. அத்தின் அகரம் அகரமுனை இல்லை.

இந்த ஐந்து நூற்பாக்களும் தொல்காப்பியச் சூத்திரங்கள். இவற்றை ஆசிரியவசனமாகத் தம் நூலில் நன்னூலார் கையாண்டுள்ளார்.

1. முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.

2. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

3. இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

4. ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோடு ஆயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

5. காலங் களனே காரணம் என்றிம்
மூவகை ஏற்றி மொழிநரும் உளரே.

6. ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே

இந்த ஆறு நூற்பாக்களும் இறையனார் களவியல் உரையில் காட்டப்படும் பழஞ்சூத்திரங்களாம். இவற்றை நன்னூலாரும் தம் நூலில் பழஞ்சூத்திரங்களாகக் கையாண்டுள்ளார்.

230. தொல்காப்பியர் கருத்தும் நன்னூலார் கருத்தும் மாறுபட்ட விடங்களைத் திரட்டுக.

| தொல்காப்பியர் கருத்து | நன்னூலார் கருத்து |
|---|---|
| 1. நூல் முதல், வழி என இருவகைப்படும். | 1. நூல் முதல் வழி சார்பென மூன்று வகைப் படும். |
| 2. சார்பெழுத்து மூன்று. | 2 சார்பெழுத்துப் பத்து. |

3. சகரம் அ ஐ ஔ ஒழிந்த ஒன்பது உயிரொடு மொழி முதலாகும்.

4. ஞகரம் ஆ எ ஒ என்ற மூன்றுயிரோடும் மொழி முதலாகும்.

5. ஙகரம் மொழி முதல் ஆகாது.

6. மொழி முதலிலும் ஈற்றிலும் குற்றுகரம் வரும்.

7. மொழி மூவகைப்படும்.

8 மொழி புணர் இயல்பு (பொருள்கோள்) நான்கு வகைப்படும்.

9. உயிர் ஆறு வகைப்படும்.

3. சகரம் பன்னிரண்டு உயிரொடும் மொழி முதலாகும்.

4. ஞகரம் அஆஎஒ என்ற நான்கு உயிரொடும் மொழி முதலாகும்.

5. ஙகரம் அகரத்துடன் ஒட்டி மொழிமுதலாகும்.

6. மொழி ஈற்றில்மட்டும் குற்றுகரம் வரும்.

7. மொழி இருவகைப்படும்.

8. பொருள்கோள் எட்டு வகைப்படும்.

9. உயிர் ஐந்து வகைப்படும்.

231. புதியன புகுதலாக நன்னூல் விருத்திகாரர் குறிப்பனவற்றைத் தொகுக்க.

நன்னூல் விருத்திகாரர் புதியன புகுதலாகக் குறிப்பன:

1. தன்மை ஒருமைக்கண் அன் விகுதியும் பன்மைக்கண் ஓம் விகுதியும் புதியன புகுதல்.

2. 'நீர் உண்ணும்; நீர் தின்னும்' எனப் பன்மை ஏவலில் வரும் உம்மீறு புதியன புகுதல்.

3. அல்லீற்றுவியங்கோளும் எடுத்தோதாப் பிறவீற்று வியங்கோளும் புதியன புகுதல்.

4. ஈ தா கொடு என்பன முறையே இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை யாகலின் இம்மரபு மயங்கி வருவன புதியன புகுதல்.

5. மன் கொன் என்பற்பாலன மன்னை கொன்னை என வருவனவுமுள; அவை புதியன புகுதல்.

6. ஏகார இடைச்சொல் எதிர்மறைப் பொருள் தரும் எனக்கொள்வது புதியன புகுதல்.

232. நன்னூலின் உயர்சிறப்புக்களை எழுதுக.

தொல்காப்பிய எழுத்ததிகாரம் சொல்லதிகாரங்களில் 946 நூற்பாக்களாய் விரிந்துகிடந்த இலக்கணத்தை, நன்னூல் 462 நூற்பாக்களில் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கின்றது. தன்மையாற் பெயர் பெற்றதற்கு உதாரணங் காட்டுமிடத்து உரையாசிரியர்கள் நன்னூலைக் காட்டியிருத்தல் இந்நூலின் பெருமையை நன்குணர்த்தும்.

சுவாமிநாத தேசிகர் தாம் செய்த இலக்கணக் கொத்தில், 'முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள்— நன்னூலார் தமக்கு எந்நூலாரும் — இணையோ என்னும் துணிபே மன்னுக' என்று சிறப்பித்துப் புகழ்ந்துள்ளார். வைத்தியநாத தேசிகர் தாம் இயற்றிய இலக்கண விளக்கத்தில் பழஞ்சூத்திரத்தின் கோளாக நன்னூலில் இருந்து 250 நூற்பாக்களை எடுத்தாண்டிருப்பது நன்னூலின் பெருமையை மிகுவிக்கின்றது. இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம், தொல்காப்பியப் பாயிர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி முதலிய நூல்களின் உரைகளில் நன்னூற் சூத்திரங்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டிருத்தலும் பெருமையைச் சுட்டுகிறது.

நன்னூலுக்கு மயிலைநாதர் சங்கரநமச்சிவாயர் சிவஞானமுனிவர் இராமாநுச கவிராயர் ஆறுமுக நாவலர் சடகோபரராமாநுசாச்சாரியார் எனப் பலர் உரை வகுத்திருப்பதால் நன்னூலின் உயர்வு நன்கு புலனாகும்.

மற்றும் திருத்தணிகை யுலாவில், 'பயிற்சிபெறு— நேமிநாதத்தால் நிலைதெரியாச் சொற்புணர்ச்சி—காமர் நன்னூற் சூத்திரத்தாற் காட்டீர்' எனவரும் அடிகளும், கோடீச்சரக்கோவையில், 'உறுப்பமை நன்னூல் இடை நீடும் ஐம்பால் உறுதொடர்பைச்—சிறப்புறும் கேள்வி பெறுபாங்கன்' எனவரும் அடிகளும் நன்னூலின் சிறப்பை நன்கு உணர்த்துகின்றன.

---

ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம்.

